கழக வெளியீடு: உகஎ

# சிலேடை வெண்பா
# நூற்கொத்து

உரையுடன்



◙

சிங்கைச் சிலேடை வெண்பா — —
கலைசைச் சிலேடை வெண்பா — —
திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா
நெல்லைச் சிலேடை வெண்பா — —



◙

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1965

# பதிப்புரை

இதன்கண் நமச்சிவாயப் புலவர் இயற்றிய சீங்கைச் சிலேடை வெண்பா, தொட்டிக்கலை சுப்பிரமணியத் தம்பிரான் இயற்றிய கலைசைச் சிலேடை வெண்பா, காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியாரவர்கள் எழுதிய திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா, ராவ்சாஹிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஜி.பி., வி.ஸி., இயற்றிய நெல்லைச் சிலேடை வெண்பா ஆகிய நான்கு சிறந்த சிலேடை வெண்பா நூல்கள் அடங்கியுள்ளன. தமிழிலக்கியத்திற் போதரும் தமிழ்ச் சொற்களுக்கும் தமிழ்ச் சொற்றொடர்களுக்கும் எளிதிலே பொருளறியும் ஆற்றல் இச் சிலேடை வெண்பாக்களை நன்கு பயின்றறிவதனாலே திறம்பட விளைவதாகும். இவை படிப்பதற்கு இனிமையும் வியப்பும் தரும்.

இந் நான்கு வெண்பா நூல்களையும் ஒப்பிட்டுப் படிப்பதற்குப் பயனாகும் பொருட்டும், நூல் நிலையங்களில் அழகுபெற வைத்துப் பயன்படுத்துதற்கு எளிதாகும் பொருட்டும் இவை ஒருசேரக் கட்டடஞ் செய்யப்பட்டுள்ளன.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

T. 4265

கழக வெளியீடு—௨0௩.

நமச்சிவாயப் புலவர்

இயற்றிய

# சிங்கைச் சிலேடை வெண்பா

தமிழ்ப் பண்டிதர்

கொ இராமலிங்கத் தம்பிரானவர்கள்

எழுதிய

உரையுடன்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி - 6. சென்னை - 1.
1965.

கொ இராமலிங்கத் தம்பிரானவர்கள்



Ed 1 July 1937
Reprint Jan 1965

O31, 1MO2,1
K5

CHINKAICH CHILEDAI VENPA

Paari Achakam, 127, Broadway, Madras-1.

# முன்னுரை

இந்நூல் சிங்கையில் எழுந்தருளிய சிவபெருமான்மீது சிலேடை வெண்பாக்களினலாகியது என விரிதலின், மூன்று சொல் இரண்டு சந்தியாய்த் தொக்க அன்மொழித்தொகையாய் நூற்குக் காரணக் குறியாயிற்று. முன்னது ஏழாம் வேற்றுமைத் தொகையதாயும், பின்னது மூன்றும் வேற்றுமைப் பொருளும் பயனும் உடன்றொக்க தொகையதாயும் வந்த பன்மொழித் தொடரின்கண் நின்ற அன்மொழி.

இனி, சிங்கையில் எழுந்தருளிய சிவபெருமானைப் பற்றிப் பாடிய சிலேடை வெண்பாக்களினலாகிய நூல் எனப் பொருள் கூறி, இரண்டனுருபும் பொருளும் உடன்றொக்கதொகையோடு மூன்றனுருபும் பொருளும் உடன்றொக்கதொகையதாய் நின்ற அன்மொழித்தொகையாய்க் கோடலும் ஒன்று.

சிங்கை - ஒரு திருப்பதி. இது விக்கிரமசிங்கபுரம் என்பதன் மரூஉ. இது பாண்டிநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. அஃது இடவாகு பெயராய் ஆண்டெழுந்தருளிய இறைவன்மே லாயிற்று. இதில் எழுந்தருளிய சிவபெருமான் திருப்பெயர் கலியாண சுந்தரர்; அம்மையார் திருப்பெயர் திருமணக்கோல நாயகி. இப்பதி திராவிட மாபாடிய ஆசிரியராகிய சிவஞான முனிவர் பிறந்த இடம்.

சிலேடை யென்பது ச்லேஷா என்னும் ஆரிய மொழியின் றிரிபு; இங்ஙனம் வரல் தற்பவம். இதனைத் தமிழணி மரபுணர்ந்தார் பல பொருட் சொற்றொடரணி யென்றும், வடநூலார் ச்லேஷாலங்கார மென்றுங் கூறுப. சிலேடை யென்பதன் பொருள் தழுவுதலுடையது என்பது. அஃதாவது உச்சரிப்பில் ஒரு தன்மைத்தாக நின்ற சொற்றொடர் ஒன்றற்கு மேற்பட்ட பொருளைத் தழுவுதல். இந்நூலுட் கூறும் சிலேடைகள் பிரிமொழிச் சிலேடை எனப்படும். பிரிமொழிச் சிலேடையாவது

ஒரு வகையாக நின்ற சொல்லைப் பிரித்துத் தொகை வேறுபடுத்துப் பல பொருள்களாகக் கொள்ளுதலாம். இதில் இருமொழிச் சிலேடையே யுண்டு.

வெண்பாவாவது பாவகை நான்கனுள் ஒன்று. அவை வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. ஆயினும் இந்நூலுட் கூறப்படுவன எல்லாம் இருவிகற்ப நேரிசை வெண்பாக்களேயாம். நேரிசை வெண்பாவாவது 'நான்கடியாய் இரண்டாமடியிறுதிச் சீர் தனிச்சொல்லாய் வர, அடி முழுதும் ஓரெதுகையாகவேனும் முன்னிரண்டு ஓரெதுகையும் பின்னிரண்டு மற்றோரெதுகையுமாகவேனும் வரும்.

இனி, சிங்கைச் சிலேடை வெண்பா என்பது தன்னுலாகிய நூற்காதலான் கருவியாகு பெயர் எனவும் கொள்ளப்படும்.

இந்நூலை இயற்றியவர் நமச்சிவாயப் புலவர் என்பார். இவரைப் பற்றிய வரலாறு தெளிவாய்த் தெரியவில்லை.

கோ. இராமலிங்கத் தம்பிரான்.

உ

திருச்சிற்றம்பலம்

# சிங்கைச் சிலேடை வெண்பா

---

## காப்பு

காப்பு - காத்தல், அஃது இங்குக் காக்கின்ற கடவுள் விஷயமான வணக்கத்துக்குத் தொழிலாகு பெயராய்ப் பின்னர்க் காரியவாகு பெயராய்க் காப்புச் செய்யுளை யுணர்த்திற்று. சைவசமயிகள் யாதானும் ஒரு நூல் செய்யத் தொடங்குங்கால் முதலில் விநாயக வணக்கங் கூறுதல் மரபாதலால், இந் நூலாசிரியரும் ஆன்றோர் ஒழுக்கத்தின்படி காப்புச் செய்யுளில் விநாயக வணக்கங் கூறினர். இங்ஙனம் கூறுதல் யாதுக்கெனின், தாம் தொடங்கும் நூல் இடையூறின்றி இனிது முடிதற்கே.

கங்கைவெண்பா மாலைமுடிக் கல்யாண சுந்தரனார்
சிங்கைவெண்பா மாலை சிறப்பாகத்—தங்கியதேன்
கற்பகத்தின் கான்மலரக் கட்டினனார் கொண்டொருகைக்
கற்பகத்தின் கான்மலரக் கால்.

(பதவுரை.) ஒரு கை கற்பகத்தின் கால் மலர் - ஒப்பற்ற துதிக்கையை யுடைய கற்பக விநாயகப் பெருமானது திருவடி மலரை, நார்கொண்டு - அன்புகொண்டு, என் கற்பு அகத்தின்கால் - எனது உறுதியினையுடைய மனத்தின்கண், மலரக் கட்டினன் - மலரும்படி கட்டினேன் (யான்), அக்கால் - அது பொழுது, கங்கை - கங்கையையும், வெண் பா மாலை - வெள்ளிய (தூய்மையான) மணம் பரவிய கொன்றை மாலையையுமுடைய, முடிக் கலியாண சுந்தரனார்-முடியையுடைய கல்யாண சுந்தரனார் மீது; சிங்கை வெண்பா மாலைசி-ங்கைச் சிலேடை வெண்பாமாலை

யென்னும் இந்நூல், சிறப்பாக - மேன்மையாக, தங்கியது - (இந் நிலவுலகில்) நிலை பெறலாயிற்று.

(குறிப்புரை.) இக்காப்புச் செய்யுளில் தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும் கூறப்படுதலான், இது தற்சிறப்புப் பாயிரம் எனப்படும். இதனை,

"தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்"

என்பதனால் அறிக.

இதில், தெய்வ வணக்கமாவது ஒருகைக் கற்பகத்தின் கான்மலர் தன் அகத்தின்கண் மலரக் கட்டுதல். செயப்படு பொருளாவது வெண்பாமாலை சிறப்பாகத் தங்குதல். ஈண்டு எழுந்தருளிய விநாயகரின் திருப்பெயர் கற்பக விநாயகர். சிவ பெருமானது திருப்பெயர் கல்யாணசுந்தரர். இனி, கற்பகத்தின் கான்மலர் மலர நார்கொண்டு அகத்தின்கண் கட்டினன் எனப் போக்குரை காண்க. கான்மலர்-வாசனை பொருந்திய மலர், திரு வடிமலர்; (கால் - திருவடி). நார் வாழைநார், அன்பு. கட்டினன் என்னும் பயனிலைக்கு யான் என்னும் எழுவாய் வருவிக்கப் பட்டது. சிவபெருமானுக்குக் கொன்றைமாலை அடையாள மாலை யாதலானும், அம் மலர் பிரணவ வடிவமா யிருத்தலானும், 'வெண்பா மாலை' என்றார். வெண்மை – ஈண்டுத் தூய்மை. பா – (மணம்) பரவுதல்; முதனிலைத் தொழிற்பெயர். விநாயகக் கடவுள் தம்மை வழிபடுவார்க்கும் வழிபடாதார்க்கும் முறையே விக்கினங் களைப் போக்குதற்கும் ஆக்குதற்கும் வல்லவராகலின், தமக்குண் டாகும் இடையூற்றை நீக்கும் பொருட்டு அவரைத் தியானித்துத் துதித்தமையால், 'கல்யாண சுந்தரனார் சிங்கை வெண்பாமாலை சிறப்பாகத் தங்கியது' என்றார். 'தங்கும்' என்னாது 'தங்கியது' என்றது துணிபு பற்றி வந்த கால வழுவமைதி. தங்கியது என்ப தற்கு என்றனுக்குத் தங்கியது எனப் பொருள் கூறினு மமையும். கற்பு அகத்தின்கால் - கல்வி யறிவினையுடைய மனத்தின்கண் எனினுமாம்; கால் எழனுருபு.

ஒருகைக் கற்பகத்தின் கால் மலரை நார்கொண்டு என் கற்பு அகத்தின்கண் மலரக் கட்டினன் அக்கால் கல்யாண சுந்தரனார் மீது வெண்பாமாலை சிறப்பாகத் தங்கியது என்பதாம்.

இவ்வெண்பாவின் மூன்றாமடியும் நான்காமடியும் முதன் மடக்கு.

## நூல்

பூங்கழனி மங்கையரும் புண்டரிகப் பொய்கைகளும்
தேங்கமலங் களையுஞ் சிங்கையே—ஓங்கல்
வரிசிலையா னனத்தான் வானிமிர்ந்து காணும்
பரிசிலையா னனத்தான் பற்று.

(ப - ரை.) பூ கழனி - அழகிய கழனியில், மங்கையரும் - பெண்களும், தேம் கமலம்-தேன் பொருந்திய தாமரைப் பூக்களை, களையும் - பறிக்கின்ற, சிங்கை—; புண்டரிகம் - தாமரைப் பூக்களையுடைய, பொய்கைகளும் - தடாகங்களும், தேங்கு அ மலம்-(மூழ்குவோரது) நிறைந்த அந்த ஆணவமலத்தை, களையும்-ஒழிக்கின்ற, சிங்கை—; ஓங்கல் வரி சிலையான் - மேருமலையாகிய வரிந்து கட்டிய வில்லையுடையவரும், அன்னத்தான் - (திருமால் மண்ணிடந்து காணுமையேயன்றி) அன்ன வாகனத்தையுடைய பிரமனும், வான் நிமிர்ந்து - ஆகாயத்தில் உயர்ந்து சென்று, காணும் பரிசு இல் - காணுகின்ற தன்மையில்லாத, ஐ ஆனனத்தான் - ஐந்து திருமுகத்தை யுடையவருமாகிய சிவபெருமானது, பற்று - பற்றுமிடமாம்.

(கு - ரை.) மங்கையர் என்றது உழத்தியர்களை. தேம் கமலம் - தேன்+கமலம், தேம் - வாசனையுமாம். கமலம், புண்டரிகம் இவ்விரண்டும் ஆகுபெயர். 'தேங்கமலங்களையும்' என்பதைத் தேங்க மலங்கு அலையும் எனப் பிரித்து நிறைய மலங்கு மச்சம் பொருந்தும் என்றலும் ஒன்று. இனி, குடைவாரது உடலின் நிறைந்த அவ்வழுக்கைக் களையும் எனினுமாம். அனுதியாக வுயிரைப் பந்தித்துப் பிறவிக் கேதுவாகவுள்ள மலமாதலின் வ்ளாள கூருது பண்டறி சுட்டால் 'தேங்கு அ மலம்' என்றூர். வரி சிலை என்புழி, வரி என்னும் பகுதி வினையெச்சப் பொருளாதலான், அதற்கு வரிந்து கட்டிய வில் எனப் பொருளுரைக்கப்பட்டது. "வரிப்புனை பந்து" என்பதிற் போல. ஓங்கல் என்பதற்கு இமயமலை எனினுமமையும். இதனை, "இமயவில் வாங்கிய வீர்ஞ் சடை யந்தணன்" என்பதற்கு "இமயமலை யிடத்துப் பிறந்த மூங்கிலாகிய வில்லை வளைத்த" என நச்சினார்க்கினியர் கலித்தொகை (குறிஞ்சி-உ.) யில் பொருள் கூறினமையா லுணர்க.

அனத்தான் - பிரமன், அன்னம் என்பது அனம் என இடைக்குறைந்தது. அன்னம் பிரமனுக்கு வாகனமும் கொடியுமாம். தேவர்கட்குக் கொடியில் வடிவுதீட்டப் பெறுது அவ்வுயிர்ப் பொருள்களே தங்கு மென்க.

"விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும்
அளவாவண மழலாகிய வண்ணாமலை யண்ணல்
தளரார்முலை முறுவல்லுமை தலைவன்னடி சரணே"

எனவும்,

"பாலுநெய் முதலா மிக்க பசுவிலைந் தாடு வானே
மாலுநான் முகனுங் கூடிக் காண்கிலா வகையு ணின்றாய்
ஆலுநீர் கொண்டல் பூக மணியணா மலையு ளானே
வாலுடை விடையா யுன்றன் மலரடி மறப்பி லேனே"

எனவும், தமிழ்மறை முழங்குகின்றமையாலும்,

"மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளரு மாதவனும்
அணிகொண்ட புண்டரிக மகலாத சதுமுகனும்
ஞானக்கண் ணதுகொண்டு நாடுமா றுணராதே
ஏனத்தின் வடிவாகி யெகினத்தின் வடிவாகி
அடிதேடி யறிவலென வவனியெலா முழுதிடந்தும்
முடிதேடி வருவலென மூதண்டமிசைப் பறந்தும்
காணரிய வொருபொருளாய்க் களங்கமற விளங்குபெருஞ்
சோணகிரி யெனநிறைந்த சுடரொளியாய் நின்றருள்வோய்!

எனச் சைவப் பெரியாரொருவர் பணித்தமையானும் 'அனத்தான்' என்றவிடத்து எச்சவும்மை விகாரத்தாற் றொக்கதாக்கி, 'திருமால் மண்ணிடந்து காணாமையேயன்றி, என வருவித்துரைக்கப்பட்டது. சிவபெருமானுக்கு ஈசானம், தற்புருடம், வாமம், அகோரம், சத்தியேசாதம் எனத் திருமுகங்கள் ஐந்து உள்ளமையால், 'ஐயானனத்தான்' என்றார். ஆனனம்-முகம். பற்று-அன்பு; அஃது ஆகுபெயராய் இடத்தை யுணர்த்திற்று. (க)

எவ்வழிநின் றுள்ளோரு மேழிசைய வண்டினமும்
செவ்வழியின் பண்புணருஞ் சிங்கையே—மைவழியும்
காவிக் கழுத்தினுர் கஞ்சபத நெஞ்சுறவிப்
பாவிக் கழுத்தினுர் பற்று.

(ப - ரை.) எவ்வழி - எவ்வகைப்பட்ட மார்க்கத்தில், நின் றுள்ளோரும்-நின்றவர்களும், செவ்வழியின்-செவ்விய மார்க்கத் தினது, பண்பு உணரும்-பண்பினைத் தெரிந்துகொள்ளுகின்ற, சிங்கை—; ஏழ் இசைய - ஏழிசைகளையுடைய, வண்டினமும் - வண்டின்கூட்டங்களும், செவ்வழியின் பண் - செவ்வழியென் னும் பண்ணை, புணரும் - பாடுகின்ற, சிங்கை—; மை வழியும் - கருமை மிகப் பொருந்திய, காவி கழுத்தினுர்-காவிமலர்போன்ற கரிய கண்டத்தை யுடையவரும், கஞ்ச பதம் - தாமரைமலர் போன்ற திருவடி. நெஞ்சில் உற - (அடியேனது) மனத்தில் பொருந்தும்படி, இ பாவிக்கு - இந்தப் பாவியாகிய எனக்கு, அழுத்தினுர்-(அத் திருவடியை) அழுத்தினவருமாகிய சிவபெரு மானது, பற்று - பற்றுமிடமாம்.

(கு - ரை.) எவ்வழி - எவ்வகைப்பட்ட மார்க்கம்; மார்க்கம் என்றது சமயங்களை. ஏழிசையாவன குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பனவாம். மை வழியும் கழுத்தி னுர் என இயைத்து விடம் வழியும் கழுத்தையுடையார் என்க; மை - விடம்; ஆகுபெயர். கொடியானை 'பாவி' என்னும் வழக்கு உண்மையின், 'தன்னைப் பாவி' என்றுர். (உ)

கல்விக் குரவருமென் கார்க்குரவக் கோதையரும்
செல்விக் கினமடுக்குஞ் சிங்கையே—நல்வித்
துரும வரையினுர் சோதியர்சார்த் தூலச்
சரும வரையினுர் சார்பு.

(ப - ரை.) கல்விக் குரவரும்-கல்வியையுடைய போதகா சிரியரும், செல்-(மாணவருக்கு) நூல்களில் வருகின்ற,விக்கினம்- விக்கினத்தை (இடையூற்றை), மடுக்கும்-அழிக்கின்ற, சிங்கை—; மென்கார் - (நீருண்டதால்) மென்மையையுடைய கார்மேகம் போன்ற, குரவம் கோதையரும் - குராமாலையணிந்த கூந்தலை

யுடைய மகளிரும், செல்விக்கு-திருமகளுக்கு, இனம் அடுக்கும்-இனமாகப் பொருந்துகின்ற, சிங்கை—; நல் - நல்ல, வித்துரும வரையின் - பவளமலைபோன்ற, ஆர் - நிறைந்த, சோதியர் - ஒளியையுடையாரும், சார்த்தூலச் சருமம்-புலித்தோலை, அரையினர் - அரையிலுடையவருமாகிய சிவபெருமானது, சார்பு - சாருமிடமாகும்.

(கு - ரை.) குரவர் – போதகாசிரியர். செல்வி - திருமகள். சார்த்தூலம் - புலி. சிவபெருமான் பவளமேனியராதலின் 'வித்துருமவரையினர்' என்றார் எனினும் அமையும். அப்பொருட்கு வித்துருமவரையினர், சோதியர் எனப் பிரித்துப் பொருள் கொள்க. (பவளமலைபோன்ற திருமேனி யுடையார்). தாருகவனத்து முனிபுங்கவரால் கொல்லும்படி யாகத்திலுண்டாக்கி யேவிய புலியைக் கொன்று நகத்தால், அதன் தோலையுரித்து அரையில் உடுத்துக் கொண்டமையின், 'சார்தூலச் சரும அரையினர்' என்றார். (ௗ)

மாலைக் குழன்மடவார் வாள்விழியு மாளிகையும்
சேலைக் கோடிதிகழுஞ் சிங்கையே—ஆலைக்
கரும்பனைக்கா யங்கெடுத்தார் காலாந்தத் தாடல்
விரும்பனைக்கா யங்கெடுத்தார் வீடு.

(ப - ரை.) மாலை - மலர்மாலையையுடைய, குழல்-கூந்தலையுடைய, மடவார்-பெண்களின், வாள் விழியும் - ஒளியையுடைய கண்களும், சேலை - சேல்மீனை, கொடிது-கொடிதாய், இகழும்-பழிக்கின்ற, சிங்கை—; மாளிகையும் - வீடுகளும், சேலைக்கொடி - வெண்படாம், செம்படாத்தாலாகிய கொடிகளால், திகழும் - விளங்குகின்ற, சிங்கை—, ஆலைக்கரும்பனை - மன்மதனது, காயம் - உடலை, கெடுத்தார் - அழித்தவரும், காலாந்தத்து - யுகமுடிவில், ஆடல் - ஆடலை, விரும்பு அனைக்கு ஆய் - விரும்பிய சங்கரிக்காக (உமாதேவிக்காக), எடுத்தார் – செய்தவருமாகிய சிவபெருமானது, வீடு - வீடாகும்.

(கு - ரை.) வாள்விழி என்பதற்கு வாள்போன்ற விழி எனினுமமையும். கொடிது - கொடிதாய்; குறிப்பு முற்றெச்சம். சேலை - ஆடை. ஆலை என்பது கரும்புக்கேற்ற அடை. மகளுக்குண்டான பிணியை யொழித்தற்பொருட்டு அன்னை மருந்துண்டு அப் பிணியை யொழிக்குந்தன்மை போல அம்மையாரும் சிவபெருமானது ஆடலைக் கண்டு, ஆன்மாக்களது மலப்பிணியை

யொழிக்கின்றார் என்பார், 'காலாந்தத்தாடல் விரும்பு அனைக் காய் அங்கு எடுத்தார்' என்றார். காலாந்தரத்து என்பது காலாந் தத்து எனச் சிதைந்தது. (௪)

வெவ்வாம் பரிமகமு மெல்லியலார் மெல்லிதழும்
செவ்வாம் பலங்கொடுக்குஞ் சிங்கையே—கைவாங்
கொருகனக வில்லா னுயரிமய வேந்தன்
மருகனக வில்லான் மனை.

(ப - ரை.) வெம்மை ஆம் பரிமகமும் - விரும்பியதாகும் அசுவமேதமாகிய யாகமும், செம்மை ஆம்-செம்மையாகிய, பலம்-(இம்மை மறுமைப்) பயனை, கொடுக்கும் - தருகின்ற, சிங்கை—; மெல் இயலார்-மெல்லிய சாயலையுடைய மகளிரது, மெல்இதழும்-மெல்லிய அதரமும், செவ்வாம்பல்-செவ்வல்லிமலரை, அங்கு - (உவமையாக வந்த) இடத்தே, ஒடுக்கும்-(உவமையாகாதபடி) கெடுக்கின்ற, சிங்கை—; கைவாங்கு - கையால் வளைத்த, ஒரு கனக வில்லான் - ஒப்பற்ற பொன் மயமான வில்லையுடையவரும், உயர் - உயர்ந்த, இமய வேந்தன் - மலையரையனது, மருகன் - மருமகனாரும், நகம் இல்லான் - கைலைமலையைக் கோயிலாக வுடையவருமாகிய சிவபெருமானது, மனை - வீடாகும்.

(கு - ரை.) வெம்மை + ஆம் = வெவ்வாம். செம்மை + ஆம்பல்=செவ்வாம்பல். 'வெம்மைவேண்டல்' என்பது ஒத்தாத வின் வெம்மை என்பதற்கு விருப்பம் எனப் பொருள் கூறப்பட்டது. பரிமகம்-அசுவமேதம்; (யாகம்). வெவ்வாம் பரி என்பது சொல்லுக்கேற்ற அடை. மேருமலையை வில்லாகக் கொண்டமையின், 'கனகவில்' என்றார். மலையரையன் மருமகனாதலின், 'இமய வேந்தன் மருகன்' என்றார். நகம் - ஈண்டுக் கைலைமலை. இல் - கோயில். நகம்+இல்லான்-நகவில்லான்; மரம்+அடி=மரவடி என்பதுபோல. இதழும் செவ்வாம்பல் போல அழகைக்கொடுக்கும் என்பதும் ஒன்று; உவமைத் தொகை. அம் - அழகு. (௫)

வேம்பருமட் கூனுமத வெங்களிறுந் தண்ணறவார்
தீம்பருவப் பாகிவருஞ் சிங்கையே—கூம்பநிலா
விட்டவிருந் துண்டார் விருப்பாற் புனிதவதி
இட்டவிருந் துண்டா ரிடம்.

(ப - ரை.) வேம் - வெந்த, பரு - பருத்த, மட்கூனும்-மட்குடமும், தண்ணறவு ஆர் - குளிர்ந்த தேன்போன்ற, தீம் - இனிய, பருவம் - பக்குவத்தையுடைய, பாகு - வெல்லப்பாகு, இவரும் - நிறைந்திருக்கின்ற, சிங்கை—; வெம் களிறும் - வெவ்விய யானையும், தண்ணறவு ஆர் - குளிர்ந்த மதுவை யுண்ட, தீ பருவம் பாகு - (தன்னை வசப்படுத்துவதில்) கொடிய இளமையையுடைய பாகரால், இவரும் - ஏறி நடத்தப்படுகின்ற, சிங்கை—; கூம்ப - வாடும்படி, நிலாவிட்ட - கலைகள் நீங்கிய, இரும் - பெரிய, துண்டார் - பிறைத்துண்டத்தை யுடையவரும், விருப்பால்-விருப்பத்தோடு, புனிதவதி இட்ட - புனிதவதியார் படைத்த, விருந்து - மாங்கனியாகிய விருந்தினை, உண்டார் - உண்டவருமாகிய சிவபெருமானது, இடம் - இடமாகும்.

(கு - ரை.) மட்கூன் - மட்குடம். தக்கனிட்ட சாபத்தால் தன் கலைகள் குறையக் கவலையுற்ற சந்திரன் ஒற்றைக் கலையாய் நின்றபோது சிவபெருமானிடத்துத் தஞ்சம்புக அப் பெருமான் அவனைத் தன் தலையில் அணிந்து கொண்டாராதலான், 'கூம்ப நிலாவிட்ட விருந்துண்டார்' என்றார். சிவபெருமான் அணிந்த சந்திரனைப் 'பிறைத்துண்ட' மெனவும், 'பிறைமாலை' எனவும் கூறுதல் மரபு. பிறைத்துண்ட மென்றது சந்திரனது ஒற்றைக் கலையை; இதனை,

"தலைப்படு சால்பினுக் குந்தள ரேன்சித்தம் பித்தனென்று
மலைத்தறி வாரில்லை யாரையுந் தேற்றுவ னெத்துணையும்
கலைச்சிறு திங்கள் மிலைத்தசிற் றம்பல வன்கயிலை
மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று மயங்கினேனே.

என்னுஞ் செய்யுளில், 'கலைச்சிறுதிங்கள்' என்பதற்கு 'ஒருகலையாகிய சிறிய பிறை'எனப் பேராசிரியர் கூறியவுரையானுணர்க.()

ஆயுத் தமர்நாவு மந்தணரோ மக்குழியும்
தேயுத் தரமாற்றுஞ் சிங்கையே—நோயுள்
படிந்தவனு கப்பணியான் பாவியேன்பா லின்னல்
கடிந்தவனு கப்பணியான் காப்பு.

(ப - ரை.) ஆய் உத்தமர் நாவும் - (கலைகளை) ஆராய்ந்த நல்லோர்களுடைய நாக்களும், தேய் - (ஐயம்) தேய்தற்குக்

காரணமான, உத்தரம்-விடைகளால், மாற்றும்-(அவ்வையத்தை) ஒழிக்கின்ற, சிங்கை—; அந்தணர் ஓமக்குழியும் - அந்தணருடைய ஓமகுண்டங்களும், தேயு - அக்கினியை, தாம் ஆற்றும் - (ஆச்சிரம நிலைக்குத்) தக்கபடி அமைக்கின்ற, சிங்கை—; நோயுள் - பிறவி நோயுள், படிந்தவனுக - தங்கினவனுக, பணியான் - (என்னைச்) செய்யாதவரும், பாவியேன் பால் - பாவியேனிடத்துண்டான, இன்னல் - துன்பத்தை, கடிந்தவன் - ஒழித்தவரும், நாகப்பணியான் - பாம்பாபரணத்தையுடையவருமாகிய சிவபெருமானது, காப்பு - காவலிடமாகும்.

(கு - ரை.) ஆய் உத்தமர் என்புழி, ஆய் என்பதற்கு அவாய் நிலையாய்க் 'கலைகள்' என்பது வருவிக்கப்பட்டது. 'ஐயம்' என்பதும் அங்ஙனமே வருவிக்கப்பட்டது. தேயு - அக்கினி. பணியான் - முன்னது வினையால் அணையும் பெயர், பின்னது பொருளடியாகப் பிறந்த ஆண்பாற் படர்க்கைப்பெயர். பாவியேன் - வினையால் அணையும் பெயர். கருடனுல் இன்னலடைந்த அரவங்கள் சிவபெருமானைச் சரணடைய அவர் அவைகளை ஆபரணமாக அணிந்துகொண்டனர் என்பதும்; தாருகவன இருடிகள், அபிசாரயாகத்தினின்றும் செலுத்திய அரவங்களையும் சிவபெருமான் அவ்வாறே அணிந்துகொண்டனர் என்பதும் புராணக் கூற்று. (எ)

மல்லியைந்த தோளினரும் வானசுணப் புள்ளினமும்
சில்லியந்தே ரச்சடைக்குஞ் சிங்கையே—சொல்லினிரு
கான மயிலார் கறிசமைத்த பிள்ளைவரப்
போன மயிலார் புரம்.

(ப - ரை.) மல் இயைந்த தோளினரும் - மல்லயுத்தம் பொருந்திய தோளினையுடைய வீரரும், சில்லி - உருளையை, அம் தேர் அச்சு - அழகிய தேரின் இருசில், அடைக்கும்-(நெய்பூசிச்) சேர்க்கின்ற, சிங்கை—; வான் அசுணப்புள் இனமும்-ஆகாயத்தில் வாழ்கின்ற அசுணமாவின் கூட்டமும், சில் இயம் தேர-சில பறையோசையைத் தேர்தலினுலே, சடைக்கும் - கிலேசப்படுகின்ற சிங்கை—; சொல்லின் - சொல்லுமிடத்து, இரு கான மயிலார் - இரண்டு கானமயில் போல்வாராகிய சந்தன நங்கை, திருவெண்காட்டு நங்கை என்பவர்கள், கறி சமைத்த பிள்ளை - கறியாகச் சமைத்துக் கலத்திற் படைத்த பிள்ளை, வர-(உயிர்பெற்று) வரும்

படி, போனம் - உணவை, அயிலார் - உண்ணாதவராகிய சிவபெருமானது, புரம் - நகரமாம்.

(கு - ரை.) அசுணப்புள் என்பதை அசுணமா எனவுங் கூறுப. இயம் - ஈண்டுப் பறையோசை; ஆகுபெயர். சடைதல்- கிலேசப்படுதல். வர - வருதலால், போன - சென்ற, மயிலார் - உமாதேவியையுடையார் எனினுமாம். மயிலார்-குற்றமில்லாதவர் எனக் கோடலும் ஒன்று. அப்பொருட்கு மய் என்பதை மை என்பதன் போலியாகக்கொள்க. போனம் - போனகம் என்பதன் சிதைவு.

இங்குக் குறித்த பிள்ளைக்கறி சமைத்த வரலாற்றைச் சிறுத்தொண்ட நாயனார் புராணத்தா லறிக. பிள்ளை உயிர்பெற்றுவரச் சிவபெருமான் மறைந்தனராதலால் 'வரப்போன' என்பது 'வருதலாற் சென்ற' எனப் பொருள் காணவும் கிடந்தது. (அ)

நித்திலத்தாற் சோறடுபோன் னீர்மையரும் பாவலரும்
சித்திரப்பா வைக்கூட்டுஞ் சிங்கையே—அத்திரத்தால்
சோர விலங்கையினன் சோரவென்ற வாளிதொட்ட
பார விலங்கையினன் பற்று.

(ப - ரை.) நித்திலத்தால் - முத்துக்களால், சோறு அடு - சோற்றைச் சமைக்கின்ற, பொன் நீர்மையரும்-திருமகளையொத்த (சிற்றில் சமைத்து விளையாடும்) மகளிரும், சித்திரப் பாவைக்கு - (தங்களுடைய) அழகிய வண்டலம்பாவைக்கு, ஊட்டும் - (அச் சோற்றை) உண்பிக்கின்ற, சிங்கை—; பாவலரும் - பாக்களில் வல்ல வித்துவான்களும், சித்திரப்பாவை-நாற்கவியுள் ஒன்றாகிய சித்திரக் கவியை, கூட்டும் - சேர்க்கின்ற, சிங்கை—; இலங்கையினன்-இலங்கைத் தீவினுக்கு அதிபதியாகிய இராவணன், சோர- நிறை அழிய (அதனால்), அத்திரத்தால் சோர-ஓர் பாணத்தால் சோர்வடையும்படி, வென்றவாளி-வெற்றிகொண்ட திருமாலாகிய வாளியை, தொட்ட - தொடுத்த, பார வில் - பருத்த மேருமலையாகிய வில்லை; அம் கையினன் - அழகிய கையில் கொண்டவராகிய சிவபெருமான், பற்று - பற்றி வாழுமிடம்.

(கு - ரை.) ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பன நால்வகைக் கவிகள். மாலைமாற்று, சுழிகுளம், ஏகபாதம், சக்கரம், எழுகூற்றிருக்கை முதலிய மிறைக்கவிகள் சித்திரக் கவிகள் என்க. சித்திரப்பா என்பதற்குச் சிறந்த பாக்கள் எனினுமாம். இலங்கையி

ஞன் என்றது இராவணனை. சோர என்பதற்கு நிறை அழிய எனப் பொருள் கூறியது பிறன் தாரமாகிய சீதா பிராட்டியைக் கவர்ந்தமையான். மேருமலையை வில்லாகக் கொண்டமையால், 'பாரவில்' என்றார். சிவபெருமான் திரிபுர மெரித்த ஞான்று திருமால் அம்பாயினமையால் திருமாலாகிய வாளி எனப் பொருள் கூறப்பட்டது. அங்கை - அகங்கை யெனினு மமையும். (கூ)

கோப்புக் குழையார்கோங் கைக்குடமு மட்குடமும்
செப்புக் குடம்பழிக்குஞ் சிங்கையே—துப்புப்
பழுக்கு மிதழியோர் பாகர்பசுந் தேன்வாய்
ஒழுக்கு மிதழியோ ரூர்.

(ப-ரை.) கொப்புக் குழையார்-கொப்பை யணிந்தகாதினையுடைய மகளிரது, கொங்கைக்குடமும் - கொங்கையாகிய குடங்களும், செப்புக்கு - செப்புக்கிண்ணத்தினது, உடம்பு - வடிவத்தின் அழகை, அழிக்கும் - அழிக்கின்ற, சிங்கையே—; மட்குடமும் - மண்குடங்களும், செப்புக்குடம் - செப்புக்குடத்தை, பழிக்கும் - பழிக்கின்ற; சிங்கை—; துப்புப் பழுக்கும் - பவளம் போன்ற, இதழி - அதரத்தை யுடைய உமாதேவியை, ஓர் பாகர் - ஓர்பாகத்திலுடையவரும், பசுந்தேன் - பசியதேனை, வாய் - மலர் வாயினின்றும், ஒழுக்கும் - ஒழுக்குகின்ற; இதழியோர்-கொன்றை மாலையையுடையவருமாகிய சிவபெருமானது; ஊர் - ஊராகும்.

(கு-ரை.) இதழி-அதரத்தையுடைய உமாதேவி; சினையடியாகப் பிறந்த பெண்பாற்படர்க்கைப் பெயர். பிருங்கி யென்னும் மகாமுனியின் பொருட்டு உமாதேவியார் சிவபெருமானது இடப்பாகத்தைப் பெற்றமையால், 'இதழியோர் பாகர்' என்றார். இதழியோர் – கொன்றைமாலையையுடைய சிவபெருமானார். இதழி - கொன்றை; ஆகுபெயர். இதழியோர் பொருளடியாகப் பிறந்த பெயர்; செய்யுளாதலின், ஆர் – ஓர் ஆயிற்று. செப்புக்கு - வேற்றுமை மயக்கம்; செப்பு - ஆகுபெயர். (கO)

காந்த ரோடும்புணர்ந்தார் கண்களுமக் காளையரும்
சேந்த னலம்படருஞ் சிங்கையே—பூந்துளவ
வாரிசவா சத்தார் வனைந்தார் தொழுமலைய
பாரிசவா சத்தார் பதி.

(ப - ரை.) காந்தரொடும் - நாயகரொடும், புணர்ந்தார் - சேர்ந்த மகளிரது, கண்களும் - கண்களும், சேந்து - சிவந்து, அனல் அம்பு - அக்கினியைச் சொரிகின்ற அம்பை, அடரும் - அழிக்கின்ற, சிங்கை—; அ காளையரும்-அம் மகளிரைப் புணர்ந்த ஆடவர்களும், சேந்தன் - முருகனது, நலம் - அழகு, படரும் - வாய்க்கப்பெற்ற, சிங்கையே—; பூ துளவம் வனைந்தார்-அழகிய துளசிமாலையைச் சூடினவராகிய திருமாலும், வாரிச வாசத்தார் - தாமரையில் வாசம் செய்பவராகிய பிரமனும், தொழும் - தொழுகின்ற, மலையபாரி - இமயமலையிற் றோன்றிய உமாதேவியாகிய மனைவியோடு, சவாசத்தார் - சகவாசத்தை யுடையவராகிய சிவபெருமானது, பதி - ஊராகும்.

(கு - ரை.) காந்தர் - நாயகர். சேந்து என்புழிச் சிவ என் பதன் மரூஉவாகிய சே பகுதி. சேந்து - வினையெச்சம். (சே + த் + த் + உ.) இதில் தகரம் நகரமானது விகாரம்.) பூந்துளவம் வனைந்தார் - திருமால். வாரிசவாசத்தார் - பிரமன்; வாசம் வாரிசத்தார் என இயைத்து வாசனை பொருந்திய தாமரை மாலையையுடைய பிரமன் எனினு மமையும். பூந்துளவ வாரிச வாசத்தார் வனைந்தார் என்பதற்குப் பூந்துளவமும் வாரிசமு மாகிய வாசனையுடைய மாலையையுடையவராகிய இருவர் எனப் பொருள்கோடலும் ஒன்று. சகவாசத்தார் என்பது சவாசத்தார் எனத் தொகுத்தலாயிற்று. (கக)

கற்பநிலை வேட்டோர் கருத்தின்மனைப் பித்திகையில்
சிற்பரைவண் ணங்குறிக்குஞ் சிங்கையே—போற்பின்
விலங்கற் குடையார் விதிமுதலோர் சேன்னி
அலங்கற் குடையா ரகம்.

(ப - ரை.) கற்பநிலை-கற்பகாலம்வரைக்கும்நிற்றலை, வேட்டோர் - விரும்பியவர், கருத்தில் - (தம்)மனத்தில், சிற்பரை-பராசத்தியினுடைய, வண்ணம் - சொரூபத்தை, குறிக்கும் - எண்ணுகின்ற, சிங்கை—; மனை பித்திகையில் - வீட்டினது சுவரில், சிற்பர் - ஓவியர், ஐ வண்ணம் - பஞ்சவர்ணங்களால், குறிக்கும் - (சித்திரம்) தீட்டுகின்ற, சிங்கை—; பொற்பின் - அழகோடு எந்திய, விலங்கல் குடையார் - கோவர்த்தன கிரியைக் குடையாக வுடைய திருமால், விதி முதலோர் - பிரமன் முதலியோர்களது

சென்னி அலங்கற்கு - தலைமாலையை யணிதற்கு, உடையார் - உடையவராகிய சிவபெருமானது, அகம் - இடமாகும்.

(கு - ரை.) சிற்பரை - பராசத்தி, வண்ணம் - வடிவு. இந்திரனொடு மாறுபட்ட கண்ணபிரான் அவ்விந்திரன் பெய்வித்த மழையைத் தடுக்கும் பொருட்டும், இடையர் ஆனினங்களைக் காக்கும் பொருட்டும், கோவர்த்தன கிரியைக் குடையாக எந்தினமையால், 'பொற்பின் விலங்கற்குடையார்' என்றார். முதலோர் என்றது தாருகவனத்து முனிபுங்கவரை; அவர் ஏவிய வெண்டலையையும் சென்னியில் அணிந்தாராதலான். உடையார்-பின்னிடார் எனினுமாம். (கஉ)

விம்முமலர்ப் பூங்கோத்தும் வித்துரும வாய்ச்சியரும்
செம்மலைமாற் றத்தழைக்குஞ் சிங்கையே—கைம்மலரில்
துள்ளுமறி வைத்திருப்பார் தோண்டுபுரியார்க் கிருள்வாய்த்
தள்ளுமறி வைத்திருப்பார் சார்பு.

(ப - ரை.) விம்முமலர் - நெருங்கிய மலர்களையுடைய, பூங்கொத்தும்-பூங்கொத்துக்களும், செம்மலை-பழம்பூக்களை, மாற்ற-ஒழிக்க, தழைக்கும் - தழைக்கின்ற, சிங்கை—; வித்துருமம் - பவளத்தை யொத்த, வாய்ச்சியரும் - இதழையுடைய் மகளிரும், செம்மல் - (தத்தம்) தலைவர்களை, ஐ மாற்றத்து - அழகிய சொற்களாலே, அழைக்கும்-அழைக்கின்ற, சிங்கையே—; கை மலரில்-கையாகிய மலரில், துள்ளும் - துள்ளுகின்ற, மறி-மானை, வைத்திருப்பார்-ஏந்தி யிருப்பவரும், தொண்டு புரிவார்க்கு-(தமக்குப்) பணி செய்யாதாரை, இருள்வாய் - அஞ்ஞானத்தினிடத்து, தள்ளும் - செலுத்தும், அறிவை - அறிவினை, திருப்பார் - திருப்பமாட்டாதவருமாகிய சிவபெருமான், சார்பு - சாருமிடமாகும்.

(கு - ரை.) விம்முதல் - நெருங்குதல், செம்மல் - பழம்பூ, தலைவர். மாற்றம் - சொல். சிங்கைபுரத்திலுள்ள மகளிர் தம் நாயகரைப் பணிமொழியோடு உபசரிப்பர் என்பார், 'வித்துரும வாய்ச்சியருஞ் செம்மலை மாற்றத் தழைக்கும்' என்றார். மறி - மான்விசேடம். புரியார்க்கு - வேற்றுமை மயக்கம். (கரு)

மிக்க சிறைமயிலு மென்பயிர்க்குத் தீம்புனலும்
செக்கணியா டிக்களிக்குஞ் சிங்கையே—முக்கண்
ஒருவ ருமாபதியா ருன்னிலர்பான் ஞானத்
திருவ ருமாபதியார் சேர்வு.

(ப - ரை.) மிக்க சிறை மயிலும்-மேம்பட்ட சிறகையுடைய மயிலும், செக்கு அண்ணி - செக்கைச் சமீபித்து, (இடிமுழக் கெனக் கருதி) ஆடி-(தோகையை) விரித்தாடி, களிக்கும் - மகிழ் கின்ற, சிங்கை—; மென்பயிர்க்கு - மெல்லிய பயிர்கட்கு, தீம் புனலும் - (இறைத்த) இனிய நீரும், செம் - சிவந்த, கணி-கணுக் களையுடையதாகிய, ஆடு - அசைகின்ற, இக்கு - கரும்பை, அளிக் கும் - வளர்க்கின்ற, சிங்கையே—; முக்கண் ஒருவர் - சோம சூரியாக்கினி என்னும் மூன்று கண்களையுடைய ஒப்பற்றவரும், உமாபதியார் - உமாதேவிக்கு நாயகரும்,உன்னிலர்பால்-(தம்மை) நினையாதவரிடத்து, ஞானத்திரு - ஞானச்செல்வம், வருமாறு - உண்டாகும்படி, பதியார் - தங்கச் செய்யாதவருமாகிய சிவபெரு மான், சேர்வு - சேருமிடமாம்.

(கு - ரை.) இனி, மென்பயிர்க்குத் தீம்புனலும் செக்கணி யாடிக்களிக்கும் என்பதற்கு மெல்லிய பயிர்களிடத்து இனியபுன லானது சிவந்த கணுக்களையுடையதாகிய அசைகின்ற கரும்பைச் சேர்க்கின்ற எனினு மமையும். பயிர்க்கு - பயிர்களிடத்து; வேற் றுமை மயக்கம். கணி - பெயர். கண் - கணு. முக்கண் என்றது சோம சூரியாக்கினியாகிய கண்களை. (கச)

கோட்டரும்பொன் மாமதிலுங் கோடா விளையவரும்
சேட்டருக்கன் பாற்றிவருஞ் சிங்கையே—தோட்டருக்கம்
தண்ணந் தெரியலார் சத்தியவே தாந்தமுந்தம்
வண்ணந் தெரியலார் வாழ்வு.

(ப - ரை.) கோள் தரும் - வலிமையைப் பெற்றுள்ள, மா பொன் மதிலும் - சிறந்த பொன் மயமான மதிலும், சேடு அருக் கன் பால்-பெருமை வாய்ந்த சூரிய மண்டலத்திடத்து, திவரும்- விளங்குகின்ற, சிங்கை—; கோடா - கோணுதலில்லாத, இளை யவரும் - மகளிரும், சேட்டருக்கு - (தம்) தலைவருக்கு, அன்பு ஆற்றி - அன்பினைச் செய்து, வரும் - வருகின்ற, சிங்கை—;

தோடு தண் அம் அருக்கம் தெரியலார் - இதழ்களையுடைய குளிர்ச்சி பொருந்திய அழகிய எருக்கமாலையை யுடையவரும், சத்திய வேதாந்தமும் - உண்மை வாய்ந்த வேதத்தின் முடியும், தம் வண்ணம் - தமது வடிவத்தை, தெரியலார் - அறியப்படாத வருமாகிய சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்.

(கு - ரை.) கோள்தரும் பொன் மா மதில் என்பதற்கு இராகுவென்னும் பாம்பைப் பெற்ற பொன்மயமான சிறந்த மதில் எனக் கோடலும் ஒன்று. எனவே அம் மதில் இராகு மண்டலம் வரைக்கும் உயர்ந்துள்ளது என்பதாம். கோடா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இளையவர் என்றது ஈண்டு மகளிரை. சேட்டர் - தலைவர். அருக்கம் என்புழி அருக்கு - எருக்கு; அம்- சாரியை. வேதம் சிவபெருமானால் அருளப்பட்ட தாதலின் 'சத்திய வேதம்' என்றார். (கரு)



கட்டாம் பகைப்புலத்துங் காலமுணர்ந் தோர்கருத்தும்
திட்டாந் தரந்தெரியுஞ் சிங்கையே—எட்டாம்
திசைக்கலிங்கத் தார்வார் திரைப்பொருநை மான்போல்
திசைக்கலிங்கத் தார்வா ரிடம்.

(ப - ரை.) கட்டு ஆம்-(பகைவரை) அழித்தல் பொருந்திய, பகை புலத்தும் - யுத்தகளத்தும், திட்டு ஆம் - மேடாகவுள்ள, தரம் - தலைகள், தெரியும் காணப்படுகின்ற, சிங்கை—; காலம் உணர்ந்தோர் கருத்தும் - முக்காலத்தையும் உணர்ந்த பெரியோர் களது எண்ணமும், திட்டாந்தரம் - சாத்திரங்களை, தெரியும் - அறிகின்ற, சிங்கை—; எட்டுத்திசை ஆம் கலிங்கத்தார் - எட்டுத் திசையாகிய ஆடையை யுடையவரும், திரை பொருநை மான் - அலையை யுடைய பொருநை நதியாகிய பெண், போற்று இசைக்க - போற்றுதல் போல ஒலிக்க, லிங்கத்து ஆர்வார் - (அந்நதிக் கரையில்) இலிங்க வடிவமாக எழுந்தருளியிருப்பவரு மாகிய சிவபெருமானது, இடம் - இடமாகும்.

(கு - ரை.) உணர்ந்தோர் கருத்தும் திட்டாந்தரம் தெரியும் - உணர்ந்த பெரியோர்களது எண்ணமும் மதிக்கத் தக்கதாகத் தெரியும் எனினுமாம். திட்டாந்தரம் - மதிப்பு. சிவபெருமானுக்குத் திசைகளே யாடையாதலின்; 'எட்டாந் திசைக் கலிங்கத்தார்' என்றார். கலிங்கம் - ஆடை. நதியைப் பெண்பாலாகக் கூறுவது மரபாதலான், 'பொருநைமான்' என்

ரூர், இஃது உருவகம். இனி, பகை புலத்தும் திட்டு ஆக தரம் தெரியும் - யுத்தகளத்தும் மேடாகத் தலைகள் தெரியும் எனினு மாம், ஆக என்பது ஆ என ஈறுதொக்கு நின்றது. தரம் - தலை. (கசு)

ஏர்வாய் மணிமறுகு மேண்ணேண் கலையினரும்
தேர்வா னினைவீட்டுஞ் சிங்கையே—ஓர்பால்
பசக்கச் சிவந்தார் பனிவரைக்குத் தேன்பா
ரிசக்கச் சிவந்தா ரிடம்.

(ப - ரை.) ஏர்வாய்- அழகுவாய்ந்த, மணி மறுகும்-இரத்தினங்கள் பொருந்திய வீதிகளும், தேர்-தேரால், வானினை-சுவர்க்க லோகத்தை, வீட்டும் - (முட்டி) அழிக்கின்ற, சிங்கை—; எண் எண் கலையினரும் - அறுபத்து நான்கு சாத்திரங்களையும் ஆராய்கின்றவர்களும், தேர்வான் - (அக்கலைகளைத்) தேர்தலினாலே, நினைவு - அறிவை, ஈட்டும் - பெருக்குகின்ற, சிங்கை—; ஓர் பால் - ஒரு பக்கம் (இடப்பக்கம்), பசக்க - பச்சையாக, சிவந் தார் - (வலப்பக்கத்தே) தாம் செந்நிறமாகப் பொருந்தினவரும், பனிவரைக்கு - பனிமலைக்கு, தென் பாரிசம் - தெற்குப் பக்கத்திலுள்ள, கச்சி - காஞ்சியம்பதிக்கு, வந்தார் - வந்தவருமாகிய சிவபெருமானது, இடம் - இடமாகும்.

(கு - ரை.) தேர் - தேரால்; மூன்றனுருபு செய்யுள் விகாரத்தாற்றொக்கது. எண் எண் கலை - அறுபத்து நான்கு கலைகள்; அவையாவன:—அக்கரவிலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம், நீதி சாத்திரம், சோதிட சாத்திரம் முதலாயின. பச்சையாக என்பது பசக்க எனத் திரிந்து நின்றது. ஓர் பால் அம்மையார் திருமேனி பசுமையும் மற்றோர்பால் சிவபெருமான் திருமேனி செம்மையும் ஆகவிருத்தலின், 'ஓர்பால் பசக்கச் சிவந்தார்' என்றார். அம்மையாரது கழுவாய் தீர்க்கும் பொருட்டுக் காஞ்சிக்கு எழுந்தருளினாராதலின், 'கச்சிவந்தார்' என்றார். (கஎ)

காவ னனியறமுங் கான்போருனைப் பேராறும்
சீவனமன் பாற்பயந்தாழ் சிங்கையே—நாவல்
மறையவன்றா தேவினர் வால்வளையை மாற்றார்
மறையவன்றா தேவினர் வாழ்வு.

(ப - ரை.) காவல் நனி அறமும் - காவலாயுள்ள முப்பத்திரண்டு தருமங்களும், சீவன் - ஆன்மாக்களுக்கு, நமன்பால்-எமனிடத்திலுண்டாகின்ற, பயம் - பயத்தை, தாழ் - அழிக்கின்ற, சிங்கை—; கான் - வாசனைபொருந்திய, பேர் - பெரிய, பொருநை ஆறும் - பொருநை நதியும், சீவனம்-நீரை, அன்பால்-அன்போடு, பயந்து - கொடுத்து, ஆழ் - ஆழமாகவுள்ள, சிங்கை—; நாவல் மறையவன் - நாவலூராளியாகிய சுந்தரமூர்த்தி நாயனாரால், தூது ஏவினர் - தூதாகச் செலுத்தப்பட்டவரும், வால் - ஒள்ளிய, வளையை - பாஞ்சசந்நிய மென்னும் சங்கை, அன்று - பாரதப்போரில், ஊது ஏவினர் - ஊதிய திருமாலாகிய பாணத்தையுடையவருமாகிய சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்.

(கு - ரை.) உயிர் பிரிந்து செல்லுங்கால் அவ்வுயிர்க்குத் தோட்கோப்புப்போலுதவுவது அறமாதலின், 'காவல்நனி அறம்' என்றார். அவ்வறங்களை முப்பத்திரண்டு பாகுபாடு செய்திருத்தலின், 'நனி அறம்' என்றார். பொருநை ஆற்றில் தாமரை, ஆம்பல் முதலியன பூத்திருத்தலாலும், மூழ்கினாரது பாவத்தைப் போக்கும்புண்ணிய நதியாதலாலும், 'கான்பொருநைப் பேராறு' என்றார். (கான் - வாசனை, பேராறு - பெருமை ஆறு). சீவன் - ஆன்மா. சீவனம் - நீர். சிவபெருமான் திரிபுர மெரித்த ஞான்று திருமால் அம்பாய் இருந்தமையால் 'ஏவினர்' என்றார். ஏ-அம்பு, பொருநை - தாமிரபருணி. ஏவினர் - ஈண்டுச் சிவன். (கஅ)

பற்றித் தமிழ்கேட்கும் பண்பினருந் தோரணமும்
தெற்றித் தலையசைக்குஞ் சிங்கையே—நெற்றி
கிழிக்குந் திருக்கழலார் கெற்சிதக்கூற் றுற்றல்
ஒழிக்குந் திருக்கழலா ரூர்.

(ப - ரை.) பற்றி - அன்புகொண்டு, தமிழ் கேட்கும் - (இறையனாரகப்பொருள் முதலிய) தமிழ் நூல்களைக் கேட்கின்ற, பண்பினரும் - பண்புடைய தமிழன்பர்களும், தெற்றி-நெருங்கி, தலை அசைக்கும்-(ஆனந்தத்தால்) தலையை யசைக்கின்ற, சிங்கை—; தோரணமும் - மகரதோரணங்களும், தெற்றித்தலை - வாயிலில் திண்ணைகளுக்குமேல், அசைக்கும் - கட்டப்படுகின்ற, சிங்கை—; நெற்றி கிழிக்கும் - நெற்றியைப் பிளந்த, திருக்கு அழலார் - அழற்கண்ணையுடையவரும், கெற்சிதம் கூற்று - கொக்க

ரிப்பையுடைய இயமனது, ஆற்றல் - வலிமையை, ஒழிக்கும் - ஒழித்த, திருக்கழலார் - திருவடியையுடையவருமாகிய சிவபெருமானது, ஊர் - ஊராகும்.

(கு - ரை.) தமிழ் என்பது ஆகுபெயராய்த் தமிழ்நூல்களையுணர்த்திற்று. தெற்றி - நெருங்கி, திண்ணை. தலையசைத்தல் - சிரக்கம்பஞ் செய்தல். திருக்கு அழலார்-அக்கினிக் கண்ணர் என் விகுதி பிரித்துக் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. திருக்கு-கண். கெற்சித்தல் - உக்கிரமா யார்த்தல். (கக)

இச்சைகூர் மாந்த ரிணைப்புயமும் பூந்தருவும்
சேச்சையா ரத்தாழுஞ் சிங்கையே—பிச்சை
இடவேன்று வந்தா ரிடுபலிகோண் டாசைப்
படவேன்று வந்தார் பதி.

(ப - ரை.) இச்சைகூர்-(மகளிர்பால்) ஆசைமிகுந்த, மாந்தர்-ஆடவருடைய, இணைப்புயமும் - இரண்டு புயங்களும், செச்சை - சிவந்த, ஆரத்து - சந்தனக் குழம்பில், ஆழும்-ஆழ்ந்து கிடக்கின்ற, சிங்கை—; பூந்தருவும் - பூக்களையுடைய மரங்களும், செச்சை - ஆடுகள், ஆர - (தழைகளை) உண்ணும்படி, தாழும் - தாழ்ந்திருக்கின்ற, சிங்கை—; பிச்சைஇட என்று-பிச்சையன்னம் இடவேண்டுமென்று எண்ணி, வந்தார் - வந்த தாருகவன முனி பத்தினிமார்கள், இடுபலி கொண்டு-இட்ட பிச்சையைப் பெற்றுக் கொண்டு, ஆசைப்பட வென்று - (அப்பெண்கள் தம்மை) விரும்பிக், கற்பழியுமாறு அழகால் வென்று; உவந்தார் - மகிழ்ந்த சிவபெருமானது, பதி-ஊராகும்.

(கு - ரை.) ஆரத்து என்புழி அத்துச்சாரியை. வந்தார் - வந்த தாருகவனமுனி பத்தினிமார்கள்; (வினைப்பெயர்). பிச்சையிட என்பதை ஒரு சொன்னீர்மைத்தாகக்கொண்டு அதற்குப் பிச்சையிடு என்பதைப் பகுதியாகக் கோடலுமொன்று. இடுபலி-வினைத்தொகை. தாருகாவனத்து மகளிரது பலியைக்கொண்ட வரலாறு :—

தேவதாருவன முனிவர் சிவபத்தியில்லாராய்த் தவமே சிறந்ததென்றும், அவர்பன்னியர் கற்பே உயர்ந்ததென்றும் கருதி ஒருவரையும் மதியாது ஒழுகுவதை விலக்கச்சிவபிரான் பிச்சாடன வடிவமும் திருமால் மோகினி வடிவமுங்கொண்டு தாருகவன

மடைந்தனர். மோகினி முனிவர் பக்கலும், பிச்சாடனர் அவர் மனைவியர்பக்கலும் சென்றனர். முனிமங்கையர் வீதியில் திகம் பரராய் உள்ளாளக் கீதம்பாடிவரும் பிச்சாடனரைக் கண்டு பிச்சையிட வந்தகாலத்து, அவரிடத்து மையல்கொண்டு மதி மயங்கி உடைதளர, வளைசிதற வருந்திப் பின்தொடர்ந்தனர் என்பதாம். (உ0)

ஆசில் வயப்புரவி யார்ப்புங் கணிதரும்வான்
தேசி கனைப்பழிக்குஞ் சிங்கையே—காசிமுதல்
ஆளுந் தலத்தகத்தா ரம்புலிச்சூட் டிற்கவுரி
தாளுந் தலத்தகத்தார் சார்பு.

(ப - ரை.) ஆசுஇல் - குற்றமில்லாத, வயம் - வெற்றியை யுடைய, புரவி ஆர்ப்பும்-(இந்நகரத்திலுள்ள) குதிரையின் கனைப்பும், வான் தேசி கனைப்பு - ஆகாயத்தில் செல்லுகின்ற சூரியனுடைய குதிரையின் கனைப்பை, அழிக்கும்-அழிக்கின்ற, சிங்கை-; கணிதரும் - சோதிடர்களும், வான்தேசிகனை - தேவகுருவாகிய வியாழப்புத்தேளை, பழிக்கும் - (தாங்கள் கணிக்கும் கணிதத்துக்குத் தோற்றமையால்) நிந்திக்கின்ற, சிங்கை —; காசிமுதல் - காசி முதலாக, ஆளும் - (தம்மால்) ஆளப்படுகின்ற, தலத்து அகத்தார் - திருப்பதிகளை யிடமாக வுடையவரும், அம்புலி சூட்டில்-சந்திரனை அணிந்துள்ள உச்சியில், கவுரி தாள் உந்து - உமாதேவி ஊடல் கொண்டு தன் தாளால் உதைத்தலால், அலத்தகத்தார் - செம்பஞ்சுக் குழம்பையுடையவருமாகிய சிவபெருமான், சார்பு - சாருமிடம்.

(கு - ரை.) வான்தேசி என்றதனால் சூரியனுடைய குதிரை எனப் பொருள் கூறப்பட்டது, வான்-ஆகாயம், வியாழபகவான் தேவர்களுக்குக் குருவாதலால், 'வான்தேசிகன்' என்றார். வான்- இடவாகுபெயராய்த் தேவர்களை யுணர்த்திற்று. உந்து-செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் காரணப் பொருட்டு. (உக)

பம்பு பொருநையுமெய்ப் பண்புடையோர் நன்மதியும்
செம்புதனை யுட்குவிக்குஞ் சிங்கையே—அம்புயமார்
வேதசிர மத்தார் விரிசடைவைத் தார்நடிக்கும்
பாதசிர மத்தார் பதி.

(ப - ரை.) பம்பு பொருநையும் - ஒலிக்கின்ற பொருநை யாறும், செம்புதனை - செம்பை, உள் குவிக்கும் - தன்னுள் குவிக்

கின்ற, சிங்கை—; மெய் பண்புடையோர் - உண்மைவாய்ந்த நற்குண முடையோரது, நல் மதியும் - நல்ல புத்தியும், செம் - செவ்விய, புதனை-சந்திரன் புதல்வனாகிய புதனை, உட்குவிக்கும் - நடுங்கச்செய்கின்ற, சிங்கை—; அம்புயம் ஆர்-தாமரையிற் றங்கிய, வேதன் சிரம் - பிரமனது சிரத்தையும், அத்து ஆர் - செந்நிறம் பொருந்திய, விரிசடை-விரிந்த சடையில், வைத்தார் - வைத்தவரும், நடிக்கும்-நடிக்கின்ற, சிரம பாதத்தார்-மேலானபாதத்தையுடையவருமாகிய சிவபெருமானது, பதி - ஊராகும்.

(கு - ரை.) சிரம்-தலை, தாருகாவன முனிவர் ஏவியவெண்டலையேயன்றிப் பிரமனது தலைமாலையும் சிவபெருமானது சடையில் உண்டு என்பதை, "வள்ளமுலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை மாலைசிரமாலை யாகக், கொள்ளுவது மலர்மடந்தை கொழுநர்தலை கிண்கிணியாக் கோத்துச் சாத்த, உள்ளுவது மொழிவதுமற் றொழியாயே லடிமுடிக ளுணர்ந்தே மென்றே,கள்ளமொழி வான் புகிற்றென் கமலேச வவர்க்கவையே கரியுமாமே." என்பதனாலும் அறிக. விரிசடை - வினைத்தொகை. பாதசிரமத்தார் என்பது சிரமபாதத்தார் என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. சிரம பாதத்தார் என்பதற்கு அடியாருடைய சிரமத்தை யொழிக்கின்ற பாதத்தை யுடையவர் எனினுமமையும். (உஉ)

பூங்குழலார் வார்த்தைகளும் பொய்யிகந்தோ ரைம்புலனும்
தீங்குழலா வாய்த்தேறுஞ் சிங்கையே—ஓங்குமுயர்
ஆன குமரனு ரையரெயின் மூன்றெரியத்
தான குமரனுர் சார்பு.

(ப - ரை.) பூ குழலார் - பூக்களை யணிந்த கூந்தலையுடைய மகளிரின், வார்த்தைகளும் - சொற்களும், தீம் குழலாக - இனிய புல்லாங்குழல்போல, வாய்த்து-பொருந்தி, ஏறும்-உயருகின்ற, சிங்கை—; பொய் இகந்தோர் - பொய்யைக் கடந்த முனிவரது, ஐம்புலனும் - ஐந்து புலன்களும், தீங்கு உழலாவாய் - தீங்கில் திரியாவாகி, தேறும்-தெளியும், சிங்கை—; ஓங்கும் உயரான - மிக உயர்ச்சிபெற்ற, குமரனுர் ஐயர்-குமரக் கடவுளுக்குந் தந்தையானவரும், எயில் மூன்று-திரிபுராதிகளுடைய மும்மதில்களும், எரிய - தீப்பற்ற, நகும் அரனுர் - சிரித்த அரன் என்னும் திருப்பெயரையுடையவருமாகிய சிவபெருமான், சார்பு-சாருமிட

(கு-ரை.) குழலாக என்புழி ஆக உவமையுருபு; ஆக என்பது ஆ என ஈறு தொக்கது. வினையெச்சமெனினுமமையும். வாய்ந்து என்பது வாய்த்து என வலித்தல் விகாரம் பெற்றது. ஐம் புலன்களாவன சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. குமர ஞர் என்புழி நான்கன் உருபும் உம்மையும் தொக்கன. தான் : அசை. ஓங்கும் உயர்-ஒரு பொருட் பன்மொழி. எயில்-மதில். (உக)

மையிற் செறிகுழலார் வார்முலைச்சாந் துங்குருகும்
செய்யிற் கயலாருஞ் சிங்கையே—கையில்
நெருப்புக் கணிச்சியார் நேயமில்லார் போய்மை
விருப்புக் கணிச்சியார் வீடு.

(ப - ரை.) மை இன் செறி குழலார் - மேகம்போன்ற நெருங் கிய கூந்தலையுடைய பெண்களது, வார் முலைச் சாந்தும் - கச்சை யணிந்த தனத்தினின்றும் கழித்த சந்தனமும், செய் - கட்டப் பட்ட, இற்கு அயல் - வீட்டிற்கு அயலில், ஆரும் - பொருந்து கின்ற, சிங்கை—; குருகும் - பறவைகளும், செய்யில்-வயல்களில், கயல் ஆரும் - மச்சத்தைத் தின்னுகின்ற. சிங்கை—; கையில் - (தமது) திருக்கையில், நெருப்புக் கணிச்சியார் - நெருப்பு மய மாகிய மழுப்படையை யுடையவரும், நேயமில்லார் - அன்பில்லா தவருடைய, பொய்மை விருப்புக்கண் - பொய்மையாகிய விருப் பத்தை, இச்சியார் - விரும்பாதவருமாகிய சிவபெருமானது, வீடு - வீடாகும்.

(கு-ரை.) மையின் என்புழி, இன்-ஒப்புப்பொருள். நேயம்- அன்பு. விருப்புக்கண்-விருப்பத்தை; வேற்றுமை மயக்கம். (உச)

வவ்வு நிதிக்ககன்ற மைந்தருந்துப் பும்மடவார்
செவ்வி தழைக்கவருஞ் சிங்கையே—எவ்வினையும்
தீரத் திருந்தகத்தர் சேவைசெயத் தண்பொருணைத்
தீரத் திருந்தகத்தர் சேர்வு.

(ப - ரை.) வவ்வு - கவருகின்ற, நிதிக்கு அகன்ற-பொருள் மேற்சென்ற, மைந்தரும் - தலைவர்களும், மடவார் - (தத்தம்) தலைவியரது, செவ்வி தழைக்க - அழகு தழைக்க, வரும் - வரு கின்ற, சிங்கை—; துப்பும் - பவளமும், மடவார் - பெண்களது,

செம்மை இதழ் ஐ - செவ்விய இதழின் அழகை, கவரும் - கவரு கின்ற, சிங்கை—; திருந்து அகத்தார்-திருந்திய மனத்தையுடைய அடியார்கள், எவ்வினையும் தீர - எவ்வகைப்பட்ட தீவினைகளும் ஒழியும்படி, சேவை செய்ய - (தம்மைச்) சேவிப்பதற்கு, தண் பொருநைத் தீரத்து - குளிர்ந்த பொருநையாற்றங் கரையில், இருந்த கத்தர் - எழுந்தருளிய கர்த்தராகிய சிவபெருமான், சேர்வு - சேருமிடம்.

(கு - ரை.) ஐ - அழகு. வினை - ஈண்டுத் தீவினை மேற்று. தீரம் - கரை. (உரு)

கன்னித் தடம்பொழிலாற் கற்றோர்கை வந்தனையால்
சென்னித் தலம்புகுக்குஞ் சிங்கையே—தன்னைத்
திடவ சனத்திஞன் சீர்வழுத்த வைத்தான்
விடவ சனத்திஞன் வீடு.

(ப - ரை.) கன்னி - அழிவில்லாத, தட - பெரிய, பொழி லால் - சோலையால் (அது மேகமண்டலத்தை முட்டுதலால்), செல் - மேகம், நித்தல் - நாள்தோறும், அம்பு - நீரை, உகுக்கும்- பொழிகின்ற, சிங்கை—; கற்றோர் - கற்றோர்கள், கை - தமது கைகளை, வந்தனையால் - வழிபாட்டால், சென்னித் தலம் - சிரசி னிடத்து, புகுக்கும் - செலுத்துகின்ற, சிங்கை—; தன்னைத் திடவசனத்திஞன்-தன்னைப் பொருள் நிறைந்த சொற்களால், சீர் வழுத்த - புகழ்ந்து போற்ற வைத்தான் - அடியேனை வைத்த வரும், விட அசனத்திஞன் - நஞ்சாகிய உணவையுடையவரு மாகிய சிவபெருமானது, வீடு - வீடாகும்.

(கு - ரை ) கன்னி - அழிவில்லாமை. தட - உரிச்சொல். பொழில்கள் மேகமண்டலத்தை யளாவி அதனை நாடோறும் தாக்குதலால் மேகங்கள் நீரைப் பொழியும் என்பார். 'தடம் பொழிலால் செல் நித்தல் அம்பு உகுக்கும்' என்றார். வசனத்தி ஞன் என்புழி ஆன் - மூன்றாம் வேற்றுமை யுருபு. (உசு)

ஓவா வளங்கெழுநீ ரூர்க்களம ருந்தெருவும்
தேவா லயங்காட்டுஞ் சிங்கையே—மேவார்

இருப்பரணங் காதரனு ரீர்ம்பொதியச் சாரல்
விருப்பரணங் காதரனார் வீடு.

(ப - ரை.) ஓவா வளம் கெழு - நீங்காத வளமிக்க, நீர் ஊர்-நீர்பொருந்திய வயலையுடைய, களமரும் - உழவர்களும், தேன் ஆலை - தேன் பொருந்திய கரும்பை, அங்கு - அவ்விடத்து, ஆட்டும் - (ஆலையிலிட்டு) ஆட்டுகின்ற, சிங்கை—; தெருவும் - வீதிகளும், தேவாலையம் - தேவாலயங்களை, காட்டும் - தோற்றுவிக்கும், சிங்கை—; மேவார் இருப்பு அரணம்-பகைவராகிய திரிபுராதிகள் தங்குதலையுடைய மதிலை, காது அரனார்-அழித்த சிவபிரானாரும், ஈரம் பொதியச் சாரல் விருப்பர் - குளிர்ச்சி பொருந்திய பொதிய மலையின்சாரலினிடத்து விருப்ப முடையவரும், அணங்கு ஆதரனார் - அணங்கினால் விரும்பப்படுபவருமாகிய சிவபெருமானது, வீடு - வீடாகும்.

(கு - ரை.) நீர் ஊர் - நீர் ஊர்ந்து செல்லுமிடம்; அது வயலின் மேற்று. ஆலை - ஆகுபெயராய்க் கரும்பை யுணர்த்திற்று. தெருவும் தேவாலையம் காட்டும் என்பது தேவாலயம் இல்லாத வீதியில்லை என்பதாம். ஈரம் என்பது ஈர் எனக் கடைக் குறைந்து நின்றது. அரனார்-அடியார்களது பாவத்தைப் போக்குபவர் (சிவன்). (உஎ)

மெய்யுள் வழங்குதமிழ் வேந்தருமேன் பால்வளையும்
செய்யு ளவைவழங்குஞ் சிங்கையே—பையுள்
சிதையத் திருந்தார் திறத்தகன்று மேலோர்
இதையத் திருந்தா ரிடம்.

(ப-ரை.) உள்மெய் வழங்கு-உள்ளத்தின்கண்ணுள்ள உண்மையைப் பேசுகின்ற, தமிழ் வேந்தரும் - தமிழ்நாட்டரசர்களும், செய்யுள் அவை - செய்யுளைப் பாடுகின்ற புலவர் கூட்டங்கட்கு, வழங்கும் - (பொருளைக்) கொடுக்கின்ற, சிங்கை—; மென்பால் வளையும் - சாயலையுடைய வெள்ளிய சங்குகளும், செய்யுள் - வயலில், அவை - கூட்டமாக, வழங்கும்-சஞ்சரிக்கின்ற, சிங்கை—; பையுள் - பிறவிநோய், சிதைய - ஒழியும்படி, திருந்தார் திறத்து - திருத்த மடையாதாரிடத்து, அகன்று-நீங்கி, மேலோர்-மேன்மையுடைய ஞானிகளது, இதயத்து - மனத்தினிடத்து, இருந்தார் - இருப்பவராகிய சிவபெருமானது, இடம் - இடமாகும்.

(கு - ரை.) மெய்யுள் என்பதை உள்மெய் என மாற்றுக. உள் - மனம். தமிழ்வேந்தர் - சேரசோழ பாண்டியர். வழங்கும் என்பதற்குச் செயப்படு பொருள் வருவிக்க. மென்மை - சாயல், பால் - வெண்மை. செய்யுள் - பாட்டு, வயலில்; உள் - ஏழனுருபு. வழங்குதல் - சஞ்சரித்தல், பையுள் - பிறவிநோய். திருந்தார் - மலபந்தத்தை யொழித்துக் கொள்ளாதவர். மேலோர் - ஈண்டு ஞானிகள். (உஅ)

கன்மந் தருவினையுங் கன்னியர்கோங் கைச்சுவடும்
சேன்மந் தரமலைக்குஞ் சிங்கையே—வன்மம்
முரணகம லத்தினர் முன்பயிலா நிர்த்த
சரணகம லத்தினர் சார்பு.

(ப - ரை.) கன்மம் தரு வினையும் - கன்மத்தாலுண்டாகின்ற வினையும், சென்மந்தரம் அலைக்கும் - சென்மந்தோறும் வருத்துகின்ற, சிங்கை—; கன்னியர் - பெண்களது, கொங்கைச் சுவடும் - தனச்சுவடும், செல்மந்தரம் - மேகங்கள் தவழ்கின்ற மந்தரமலையை, மலைக்கும் - எதிர்க்கும், சிங்கை—; வன்மம் முரண் அகம் - வலிமை பொருந்திய மாறுபட்ட மனத்தில், மலத்தினர் முன் - ஆணவமலத்தினையுடையவர் முன்னே, பயிலா - பழகாத, நிர்த்தம் - நடனத்தையுடைய, சரண கமலத்தினர் - திருவடித் தாமரையையுடைய சிவபெருமான், சார்பு - சாருமிடம்.

(கு - ரை.) வினை என்றது ஈண்டுத் தீவினையை. சென்மாந்தரம் என்பது சென்மந்தரமென எதுகை நோக்கிக் குறுகிற்று. மலைக்கும் என்பதற்கு ஒத்திருக்கும் எனினுமாம். பயிலா என்னும் எச்சம் சரணக்மலம் என்னும் உருவகத்தைக் கொண்டு முடிந்தது. (உகூ)

பத்த சனங்களுமேன் பான்மொழியார் வேல்விழியும்
சித்த சனம்பயிலுஞ் சிங்கையே—சுத்தசல
வானகங்கைக் குள்ளார் வரதா பயமமுமான்
நானகங்கைக் குள்ளார் நகர்.

(ப - ரை.) பத்த சனங்களும் - அடியவர் கூட்டங்களும், சித்தசனம் பயிலும் - சித்த புருடர்களோடு பழகுகின்ற, சிங்கை—;

பால் மொழியார் - பால்போலும் இனிய சொற்களையுடைய மகளிரின், வேல்விழியும் - வேல்போன்ற கண்களும், சித்தசன் - மன்மதனது, அம்புஅயிலும்-அம்பையுண்ணும், சிங்கை-;சுத்தசலம் வான கங்கைக்கு உள்ளார் - சுத்த நீர்மயமான ஆகாயகங்கைக்கு இடமாகவுள்ளவரும், வரதம் அபயம் மழு மான் நால்-வரதமும் அபயமும் மழுவும் மானுமாகிய நாலையும், நகம்- மேருமலையாகிய வில்லையும், கைக்கு உள்ளார் - கையில் கொண்டுள்ளவருமாகிய சிவபெருமானது, நகர் - நகரமாகும்.

(கு - ரை.) அம்பு அயிலும் - அம்பையுண்ணும் என்றது தாமரை நீலங்களை வெல்லும் என்றபடி. அம்பினும் மிக்க கொடுமை செய்வது என்பதாம், கைக்கு - கையில்; வேற்றுமை மயக்கம். (௩0)

காம்பார் பசுந்தோளார் கண்ணு மணிவயிறும்
தேம்பா னலங்கடக்குஞ் சிங்கையே —பாம்பா
பரணத் தரத்தனர் பார்த்த னடித்திட்ட
விரணத் தரத்தனர் வீடு.

(ப - ரை.) காம்பு ஆர் - மூங்கிலையொத்த, பசுந்தோளார் - பசிய தோள்களையுடைய மகளிரின், கண்ணும்-கண்களும், தேன் பானல் அங்கு அடக்கும் - தேன் பொருந்திய நீலோற்பலத்தை அவ்விடத்து அடக்கிவிடுகின்ற, சிங்கை—; மணி வயிறும்-அழகிய அம் மகளிர் வயிறும், தேம்பு ஆல் நலம் கடக்கும் - (கிளைகள்) நிறைந்த ஆலிலையின் அழகை வெல்லுகின்ற, சிங்கை—; பாம்பு ஆபரணத்தர் - அரவாபரணத்தை யுடையவரும், அத்தனர்-தலைவரும், பார்த்தன் அடித்திட்ட - அர்ச்சுனன் அடித்த, இரணத்தரத்தனர் - இரத்தம் பொருந்திய இரணத்தையுடையவருமாகிய சிவபெருமானது, வீடு - வீடாகும்.

(கு - ரை.) பசும் காம்பு ஆர் என மாற்றிப் பசிய மூங்கிலையொத்த எனினுமமையும். ஆர் உவமவாசகம். தேன் + பானல் = தேம்பானல்; இதனை, "தேன்மொழி...வலிவரின் ஈறுபோய் வலி மெலி மிகலுமா மிருவழி" என்பதனுலறிக. பானல் - நீலோற்பலம். ஆல் - ஆகுபெயர் அத்தனர் தலைவர்; அர்த்தபாகத்தை யுடையவர்; செந்நிறத்தை யுடையவர். அடித்திட்ட என்புழி

இடு - துணைவினை; ஒரு சொன்னீர்மைத்து எனினுமமையும். இரணத்தரத்தனுர் என்பது இரத்தரணத்தனுர் என விகுதிபிரித்துக்கூட்டப்பட்டது. அத்தனுர், ரணத்தனுர் என்புழி, ஆர் - விகுதிமேல் விகுதி. (௩க)

அண்ணற் பழம்பொருநை யாறுமறி வோர்மனையும்
திண்ணத் தறனிறைக்குஞ் சிங்கையே—எண்ணத்தின்
முன்றருவ மானுன் முகன்காண மூட்டழல்போல்
அன்றுருவ மானு னகம்.

(ப - ரை.) அண்ணல் பழம் பொருநை ஆறும் - பெருமையினையும் பழமையினையுமுடைய பொருநை நதியும், திண் - திண்ணிய, நத்து - சங்குகளையும், அறல் - கருமணலையும், நிறைக்கும் - (கரையில்) நிறைக்கின்ற, சிங்கை—; அறிவோர் மனையும் - அறிவாளர்களுடைய வீடுகளும், திண்ணத்து-உறுதியோடு, அறன் - தருமத்தை, இறைக்கும்-வழங்குகின்ற, சிங்கை—; எண்ணத்தின் - (யாமே பிரமம் என்ற) எண்ணத்தோடு, முன் தருவு - முன் தேடிய, அ மால் நான் முகன்-அத்திருமாலும் பிரமனும், காண - காணும்படி, மூட்டு அழல் போல் - மூட்டிய தீப்போல, அன்று- அக்காலத்தில், உருவம் ஆனுன் - வடிவமான சிவபெருமானது, அகம் - இடமாகும்.

(கு - ரை.) திண்ணத்து அறன் இறைக்கும் என்பதற்கு உறுதியைப் பயக்கும் தருமத்தை வழங்குகின்ற எனினுமாம். அறன் - னகரவிறுதிப் போலி. அம்மால் என்பது அமால் எனச் செய்யுள் விகாரத்தாற் றெக்கது. அக்காலம் என்றது பிரம விட்டுணுக்கள் தேடிய காலத்தை. (௩உ)

பாங்களவா வெண்டிசையும் பத்தியடி யார்குழுவும்
தீங்களவா சஞ்செறியுஞ் சிங்கையே—ஓங்காரத்
துள்ளொளியா நின்ரு னுபநிடதத் துச்சியின்மேல்
அள்ளொளியா நின்ரு னகம்.

(ப - ரை.) பாங்கு அளவா - பக்கத்தை அளவிடப்படாத, எண் திசையும் - எட்டுத் திக்குகளிலும், தீம் - இனிய, கள - களாப்பூக்களின், வாசம் - வாசனை, செறியும் - நெருங்கி யிருக்

கின்ற, சிங்கை—; பத்தி - பத்தியையுடைய, அடியார் குழுவும் - அடியார் கூட்டங்களும், தீ - கொடிய, களவு-வஞ்சனையும், ஆசு - குற்றமும், அஞ்சு - பஞ்சேந்திரியங்களும் ஆகிய இவைகளை, எறியும் - ஒழிக்கின்ற, சிங்கை—; ஓங்காரத்துள் - பிரணவத்தில்; ஒளியா நின்றான் - ஒளித்துள்ளவனும், உபநிடதத்து உச்சியின் மேல்-உபநிடதத்தின் உச்சியினிடத்து, அள்ஒளியா(க)நின்றான்-வாரிக்கொள்ளத்தக்க ஒளிப்பிழம்பாய் நின்றவராகிய சிவபெருமானது, அகம் - இடமாம்.

(கு - ரை.) கள - ஆகுபெயராய்ப் பூவை யுணர்த்திற்று. (கள, களா, களவு என வரும்.) கள என்பதற்குக் களாச் செடியென முதற் பொருளாகப் பொருள் கோடலும் ஒன்று. எறியும்-பிறவினைமேற்று. இரண்டாவது பொருளில் தீக்களவு என்பது தீங்களவு என்றாயது மெலித்தல் விகாரம். (௩௩)

மைவார் பொழிற்றுயிலு மாமதியை வேதியரைச்
சேவ்வா ரணமெழுப்புஞ் சிங்கையே—ஒவ்வாத
போற்றுக் கோடியான் புகழவுமேன் பாலிரங்கும்
ஏற்றுக் கோடியா னிடம்.

(ப - ரை.) மை - மேகங்கள் தவழ்கின்ற, வார் - நெடிய, பொழில் துயிலும்-சோலையில் துயிலுகின்ற, மா மதியை-சிறந்த சந்திரனை, செம்மை வாரணம்-செவ்விய சேவல்கள், எழுப்பும் - கூவிப் போகச்செய்யும், சிங்கை—; வேதியரை - அந்தணரை, செம்மை ஆரணம்-(பார்ப்பனச் சிறுவர் அத்தியயனஞ் செய்யும்) செவ்விய வேதங்கள், எழுப்பும் - துயிலினின்றும் எழுப்புகின்ற, சிங்கை—; ஒவ்வாத - ஒப்பாகாத, போற்றுக்கொடு - போற்றுதலைக் கொண்டு, யான் புகழவும் - யான் துதிக்கவும், என்பால் - என்னிடத்து, இரங்கும் - இரங்குகின்ற, ஏறு கொடியான் - இடபக்கொடியையுடைய சிவபெருமானது, இடம் - இடமாகும்.

(கு - ரை.) வேதியரை எழுப்பும் என இயையும். ஆரணமென்றது - ஆரணத்தின் ஒலியை. கொண்டு+யான்=கொண்டியான்; குற்றிய விகரம். ஏறு - இடபம். (௩௪)

தூயவரை யிஞ்சியின்வாய்த் துஞ்சுமதி யைக்கண்டு
தீயவர வங்கடுக்குஞ் சிங்கையே—ஆயர்

கறவையா ளுனன் கனன்மழுவா னன்னப்
பறவையா ளுனன் பதி.

(ப - ரை.) தூயவரை-மனத்தூய்மையுடையவர்களை, தீயவர் கண்டு-கொடியவர்கள் தரிசித்து,அவம் (தங்கள்)பாவங்களை,கடுக்கும் - கோபித்து ஒழித்துக்கொள்ளுகின்ற,சிங்கை—; இஞ்சியின் வாய் - மதிலினிடத்து, துஞ்சு-பொருந்திய, மதியை-சந்திரனை, அரவு - பாம்பு, அங்கு கண்டு-அவ்விடத்துப் பார்த்து, அடுக்கும் - பிடிக்கப் பொருந்துகின்ற, சிங்கை—; ஆயர் கறவை ஆன் ஆளுன்- இடையருடைய பசுவையும் இடபத்தையும் நீங்காதவனாகிய திருமால், கனல் மழுவான் - கனலுகின்ற மழுப்படையையுடைய உருத்திரன், அன்னப்பறவையான் - பிரமன், ஆனுன் - (ஆகிய மும்மூர்த்தி வடிவம்) ஆயினவனது, பதி - ஊராகும்.

(கு - ரை.) கடுக்கும் - கோபித்தழிக்கின்ற; காரணத்தைக் காரியமாக உபசரித்தல். ஆன் - இடபம். ஆளுமை-நீங்காமை. கனல் மழு-வினைத்தொகை; கனலாகிய மழு எனினும் அமையும்.

அன்றலைநீ ருண்டவனு மாரத் தடம்பொழிலும்
தென்றலைம ணந்துவக்குஞ் சிங்கையே—மன்றல்
உலையா வணமளித்தா ரூரனையாட் கொள்ள
விலையா வணமளித்தார் வீடு.

(ப - ரை.) அன்று - அக்காலத்தில் (இந்திரன் விருத்திராசுரனைக் கொல்வதற்காக), அலைநீர் உண்டவனும் - கடல்நீரையுண்ட அகத்தியனும், தென்றலை - தென்னாட்டை, மணந்து - சேர்ந்து, உவக்கும்-மகிழ்கின்ற, சிங்கை—; தட - பெரிய, ஆரம் பொழிலும் - சந்தனச்சோலையும், தென்றலை - தென்றலால், மணம் - (தன்)வாசனையை, துவக்கும் - காட்டிவரும், சிங்கை—; மன்றல்-(இருவரது) திருமணத்தை, உலையாவண்ணம்-கெடாதபடி, அளித்து-அளிக்க, ஆரூரனை-திருவாரூரனை (சுந்தரமூர்த்தி சுவாமிகளை), ஆட்கொள்ள-அடிமைகொள்ள, விலை - விலையாக, ஆவணம் - அடிமை யோலையை, அளித்தார் - காட்டினவராகிய சிவபெருமானது, வீடு - வீடாகும்.

(கு- ரை.) இனி, இருவரது மன்றலைக் கெடாதபடி அளித்தவரும், நாவலூரனை அடிமைகொள்ள விலையாக அடிமையோலை

யைக் காட்டிக் கருணைசெய்தவருமாகிய சிவபெருமானது வீடு எனினுமாம். மன்றல் - கலியாணத்தில், உலையாவண்ணம் - (தன்னருள் இனிக்) கெடாதபடி, அளித்து-கருணைசெய்து, ஆரூரனை- திருவாரூரனை (சுந்தரமூர்த்தி சுவாமிகளை) எனவும், மன்றல் - வாசனை, உலையா – கெடாத, வணம் – அழகிய, அளி-வண்டுகள் மொய்க்கின்ற, தார் – மாலையையுடைய, ஊரனை - நாவலூரனை (சுந்தரமூர்த்தி சுவாமிகளை) எனவும் கொள்ளுதலுமாம். அலை - ஆகுபெயர். குமரக்கடவுளால் தமிழ் அறிவுறுத்தப் பட்டமையாலும், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளால் அவர் திருமணக் கோலம் தலங்கடோறும் தரிசிக்கப் பெற்றமையாலும், "தென்றலை மணந்துவக்கும்" என்றார், தென்றலை - தெற்குத்தலை: தென் திசை; தலை - இடம். மணம் - கலியாணம். துவக்கும் - காட்டிவரும். தன் அருள் என்றது - சிவத்தின் அருளை. (௩சு)

வந்துபகைத் தோர்பொரலால் வண்டுமதத் தால்வரலால்
சிந்துரத்த வாறடுக்குஞ் சிங்கையே—கந்தரத்தில்
சற்றுக் கறுப்பார் தழற்சிவப்பார் சஞ்சிதமேன்
பற்றுக் கறுப்பார் பதி.

(ப - ரை.) பகைத்தோர் - பகைத்தவர்கள், வந்து-(பகைத்து) வந்து, பொரலால்-(இந்நகரத்தாரோடு) போர்செய்தலால், சிந்து ரத்தஆறு அடுக்கும் - (தோற்றுச்) சிந்துகின்ற இரத்தநதி பொருந்துகின்ற, சிங்கையே—; மதத்தால் - மதத்தை (உண்ண,) வண்டு வரலால் - வண்டுகள் (மொய்க்க) வருதலால், சிந்துரத்த- யானைகளுடைய, வால் - வால்களானவை, தடுக்கும் - (அவ்வண்டுகளைத்) தடுக்கின்ற, சிங்கை—; கந்தரத்தில் - கண்டத்தில், சற்று- சிறிது, கறுப்பார் - கறுத்திருக்கின்றவரும், தழல் சிவப்பார்-தழல் போலச் சிவந்த நிறத்தையுடையவரும், என் பற்றுக்கு - என் அன்பினுக்கு, சஞ்சிதம் – சஞ்சிதவினையை, கறுப்பார் - கோபித்து ஒழிப்பவருமாகிய சிவபெருமானது, பதி - ஊராகும்.

(கு - ரை.) பொரல் – மோதல் (சண்டைசெய்தல்). மதத்தால் - மதத்தை; வேற்றுமை மயக்கம். சிந்துரத்த - குறிப்புப் பெயரெச்சம். சஞ்சிதம் - முன் ஈட்டியவினை. (௩எ)

காவ லிளைஞர் கடுநடையிற் பூந்தடத்தில்
சேவ லனங்குடையுஞ் சிங்கையே—மூவர்

திருப்பாட லாரத்தர் சிற்சபையி லோற்றித்
திருப்பாட லாரத்தர் சேர்வு.

(ப - ரை.) காவல் - காவலையுடைய, இளைஞர் கடுநடையில் - வாலிபரது கடிய நடையினால், சே வலன் அங்கு உடையும் - இடபத்தினது வல்லமை அவ்விடத்து உடைகின்ற, சிங்கை—; பூந்தடத்தில் - தாமரைத் தடாகத்தில், சேவல் அன்னம் குடையும் - ஆண் அன்னமும், பெண் அன்னமும் குடைகின்ற, சிங்கை—; மூவர் திருப்பாடல் ஆரத்தர் - திருஞான சம்பந்தர் முதலிய மூவரது தேவாரப் பாமாலையையுடையவரும், சிற்சபையில் - ஞானசபையில், ஒற்றி - ஊன்றி, திருப்பு - திருப்புகின்ற, ஆடலார் - நடனத்தை யுடையவரும், அத்தர் - தலைவருமாகிய சிவபெருமானது, சேர்வு - சேருமிடம்.

(கு - ரை.) சே - இடபம். வலன் - வலம் என்பதன்போலி. சேவல் அன்னம் - உம்மைத் தொகை. சேவல் - ஈண்டு ஆண் அன்னம், அன்னம் என்றது அன்னப்பேடை. அன்னம் என்பது அனம் என இடைக்குறைந்தது. மூவர் என்றது தேவாரமூர்த்திகளை. மூவராவார் - திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், அத்தர் என்பதற்குச் செந்நிறத்தையுடையவர் எனவும் அர்த்த பாகத்தையுடையவர் எனவும் பொருள் கூறலும் ஒன்று. (௩௮)

மைதவழ்கண் ணார்மருங்கு மாதவத்தோ ருந்தவறு
செய்தகவஞ் சிக்காக்குஞ் சிங்கையே—கைதைநறும்
போதைமுடி வைத்தணியார் போற்றறியார் புன்பிறப்பை
வாதைமுடி வைத்தணியார் வாழ்வு.

(ப - ரை.) மை தவழ் கண்ணார் - மைதீட்டிய கண்களையுடைய மகளிரது, மருங்கும் - இடையும், செய் - வயல்களிலுள்ள, தகு - தகுதியான, அவஞ்சிக்கு - அந்த வஞ்சிக் கொடிக்கு, தவறு ஆக்கும் - குற்றத்தையுண்டாக்குகின்ற, சிங்கை—; மாதவத்தோரும் - தவசிகளும், தவறு செய் - குற்றத்தைச் செய்கின்ற, தகவு அஞ்சி - தன்மைக்குப் பயந்து, காக்கும் - அக் (குற்றம் தம்மைச் சாரா வண்ணம்) தடுக்கின்ற, சிங்கை—; நறு கைதைப் போதை - மணத்தையுடைய தாழம்பூவை, முடி வைத்து அணியார் - சிரசில்

வைத்துச் சூடாதவரும், போற்று அறியார் - போற்றுதலைச் செய்யாதவரது, புன் பிறப்பை-புல்லிய பிறப்பையும், வாதை முடிவை-துன்பத்தின் மிகுதியையும் தணியார் - ஒழிக்காதவருமாகிய சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்.

(கு-ரை.) செய்-வயல். திருமாலும் பிரமனும் மாறுபட்டுச் சிவபெருமானது அடிமுடி தேடிய ஞான்று தாழம்பூ பிரமனுக்குப் பொய்க்கரி கூறினமையால், அதனைச் சூடாதொழிந்தனர் என்பார், "கைதை நறும்போதை முடிவைத் தணியார்" என்றார், தணியார் - ஒழிக்கார்; பிறவினை மேற்று, 'வி' விகுதி தொக்கது எனினும் அமையும். பிறப்பை வாதை முடிவை என்புழி எண்ணும்மை தொக்கது. (௩௯)

எவ்வா யினுமுணர்ந்தோ ரின்னறிவு மாகதரும்
செவ்வாய் வழுத்தடுக்குஞ் சிங்கையே—வெவ்வாய்
நரககட கத்திற னண்ணிவிடா தெண்ணும்
உரககட கத்தி னூர்.

(ப - ரை.) எவ்வாயினும் - எவ்வகையானும், உணர்ந்தோரின் அறிவும் - உணர்ந்த பெரியோர்களுடைய நல்லறிவும், செவ்வாய் - செப்பமாய், வழு - குற்றங்களை, தடுக்கும் - போக்குகின்ற, சிங்கை—; மாகதரும்-வீர முதலியவற்றைப் புகழ்வோரும், செவ்வாய் - சிவந்த வாயில், வழுத்து - துதிகளை, அடுக்கும் - பொருந்துகின்ற, சிங்கை—; வெவ்வாய் - வெம்மை பொருந்திய, கடகம் நரகத்தில்-கற்கடக நரகத்தில் (தேள்மயமான நரகத்தில்), நான் நண்ணிவிடாது - யான் தங்கிவிடாமல், எண்ணும் - மதிக்கின்ற, உரக கடகத்தினன் - அரவ கங்கணத்தையுடையவராகிய சிவபெருமானது, ஊர் - பதியாகும்.

(கு - ரை.) இன்னறிவு=இனிமை + அறிவு; இனிமை - ஈண்டு நன்மை மேற்று. செவ்வாய் - செம்மை + ஆய்: வினையெச்சம். மாகதர் - வீரமுதலியவற்றைப் புகழ்வோர். செவ்வாய்- செம்மை + வாய்; வாய் - பெயர். வழுத்து - முதனிலைத்தொழிற்பெயர்; வழுத்துதல் (துதித்தல்). வெவ்வாய் - வெம்மை + வாய். வாய் - வாய்ந்த; வாய் நரகம் - வினைத்தொகை. கடக நரகம் என மாற்றுக. கடகம் நரகம் - நரகவிசேடம்; தேள்மயமான நரகம். கடகம் - தேள், கங்கணம். (௪0)

ஈகையற்ற வஞ்சரையு மெண்ணுன் கறங்களையும்
சேகரித்து மெய்ப்புணர்த்துஞ் சிங்கையே—சாகரத்தை
உண்ட வருக்கோளியா ரோரா யிரங்கதிர்வாள்
விண்ட வருக்கோளியார் வீடு.

(ப - ரை.) ஈகையற்ற-கொடுக்குந் தன்மையற்ற, வஞ்சரையும் – வஞ்சகர்களையும் சேகு அரித்து-(மன)வயிரத்தை ஒழித்து, மெய்ப்பு உணர்த்தும் - உண்மையை உணர்த்துகின்ற, சிங்கை—; என் நான்கு அறங்களையும் - முப்பத்திரண்டு தருமங்களையும், சேகரித்து - தேடி, மெய் - உண்மையாக, புணர்த்தும் - செய்கின்ற, சிங்கை—; சாகரத்தை உண்டவருக்கு – கடல் நீரை யுண்டவராகிய அகத்தியனார்க்கு. ஒளியார் – மறையாதவரும், ஓர் ஆயிரம் கதிர் – ஓராயிரம் கிரணங்களின், வாள் விண்ட - ஒளி பொருந்திய, அருக்கு – சூரியனைப்போன்ற, ஒளியார் - ஒளியை யுடையவருமாகிய சிவபெருமானது, வீடு – வீடாகும்.

(கு - ரை.) சேகு - வயிரம். மெய்ப்பு - உண்மை. சிவபெருமான் தலங்கடோறும் தம் திருமணக்கோலத்தை அகத்தியனார்க்குத் தரிசிப்பித்தமையால், 'சாகரத்தை யுண்டவருக்கு ஒளியார்' என்றும், இந்திரன் விருத்திராசுரனைக் கொல்லும் பொருட்டுக் கடல்நீரை அகத்தியனார் உண்டமையால், அவரைச் சாகரத்தை யுண்டவர் என்றும், கூறினார். அருக்கு - சூரியர்; முருகு என்பது போலப் பண்பாகு பெயராய் நின்றது. (௩௧)

தூயநிலை வாய்மையருந் தொல்லைமனு நூனெறியும்
தீய வழுக்கறுக்குஞ் சிங்கையே—நேயம்
எடுத்த திகம்பரத்தா ரேத்தவருள் செய்வார்
உடுத்த திகம்பரத்தா ரூர்.

(ப - ரை.) தூயநிலை - பரிசுத்தமான நிலைமையையுடைய, வாய்மையரும் - சத்தியத்தையுடைய பெரியோர்களும், தீய - கொடிய, அழுக்கு - அழுக்காகிய குற்றங்களை, அறுக்கும் - ஒழிக்கின்ற, சிங்கை—; தொல்லை - பழமையாகிய, மனுநூல் நெறியும் - மனு நீதியும், தீய வழு - கொடிய குற்றங்களை, கறுக்கும் - கோபிக்கின்ற, சிங்கை—; நேயம் எடுத்து - விருப்பங் கொண்டு, பரத்தார் – மேலானவர், அதிகம் ஏத்த - அதிகமாகத்

திக்க, அருள்செய்வார்-கருணை செய்பவரும், உடுத்த- தரித்த, திகம்பரத்தார் - திக்காடையை யுடையவருமாகிய சிவபெருமானது, ஊர் - ஊராகும்.

(கு - ரை.) அழுக்கு-ஈண்டு ஆணவமலம். அதிகம் பரத்தார் ஏத்த வென்பதைப் பரத்தார் அதிகமேத்த என மாற்றுக. திக் + அம்பரம் = திகம்பரம்: திக்கு ஆடை. (௩௨)

வெய்ய மிடியும் விரிபோருநை வெண்டிரையும்
செய்ய வளங்கோழிக்குஞ் சிங்கையே—ஐயர்
துவளக் குழையார் துடியிடையார் சங்கத்
தவளக் குழையார் தலம்.

(ப - ரை.) வெய்ய மிடியும்-கொடிய வறுமையும், செய்யவள் - இலக்குமியால், அங்கு ஒழிக்கும் - அவ்விடத்து ஒழிக்கப் படுகின்ற, சிங்கை—; விரிபொருநை - விரிந்த பொருநையாற்றின், வெண்திரையும்-வெள்ளிய அலையும், செய்ய-செப்பமான, வளம் கொழிக்கும்-வளத்தைக் கொழிக்கின்ற, சிங்கை—; ஐயர் - தலைவரும், துவள் - அசைகின்ற, அக்கு உழையார்-எலும்பு மாலையும் மானுமுடையவரும், துடி இடையார் - உடுக்கை போன்ற இடையையுடைய உமாதேவியை இடப்பாகத்திலுடையவரும், தவளம் சங்கம் குழையார் - வெள்ளிய சங்கக் குண்டலத்தை யுடையவருமாகிய சிவபெருமானது, தலம் - இடமாகும்.

(கு - ரை.) செய்யவள் - இலக்குமி. அக்கு உழையார் - "உம்மைத் தொகை பலரீறே" என்பதனாலறிக. அக்கு உழையார் என்பதற்கு-எலும்புமாலையைத் தன்னிடத்தே யுடையார் எனினும் அமையும். உழை-மான் விசேடம். சங்கத்தவளக் குழையார் என்பதைத் தவளச் சங்கக் குழையார் என மாற்றுக. (௩௩)

பூவகத்திற் போர்கடந்த பூட்கையும்வில் வேட்கையரும்
சேவகத்தி லேவழங்குஞ் சிங்கையே—பாவகத்தில்
ஒக்க வருவா ரொருவரேனில் வேறுணரத்
தக்க வருவார் தலம்.

(ப - ரை.) பூ அகத்தில் - பூமியில், போர் கடந்த-போரை வென்ற, பூட்கையும்-யானையும், சேவகத்தில் - யானை துயிலு

மிடத்திற்கு, வழங்கும் - செல்லுகின்ற, சிங்கை—; வில் வேட்கை யரும் - விற்றொழிலில் விருப்பத்தையுடைய வீரரும், சேவு - வயி ரத்தை, அகத்திலே - மனத்திலே, வழங்கும் - கொள்ளுகின்ற, சிங்கை—; பாவகத்தில் - சிவோகம் பாவனையில். ஒக்க - அத்து விதமாக, வருவார் - வந்து கலப்பவரும், ஒருவரெனில் - ஒருவ ரென்று சொன்னால், வேறு உணரத்தக்க-வெவ்வேறாக உணரத் தக்க, அருவார் - அருவமானவருமாகிய சிவபெருமானது, தலம்- இடமாகும்.

(கு - ரை.) இனி, வில் வேட்கையரும், சேவகத்திலே வழங் கும் என்பதற்கு வில்வேட்கையரும், சேவகத்தில் - வீரத்தோடு, ஏ - பாணத்தை, வழங்கும் - செலுத்துகின்ற எனினுமாம். வேற்றுமை மயக்கம். சிவோகம் பாவனை என்றது பிரணவத்தைத் தியானித்தலை. அருவத்தினின்றே வேறுவேறாக வடிவம்தோன்று தல் மரபாதலின், 'வேறு உணரத்தக்க அருவார்' என்றார். ஒருவ ரெனில் என்பதற்கு மூவருள் ஒருவர் எனில் எனினுமமையும். (௪௪)

மாவாய்மைத் தொண்டர் மணிவாயு நன்மனமும்
தேவாரப் பண்பாடுஞ் சிங்கையே—ஓவாமல்
சீலமிசைந் துள்ளார் தெரிவரியார் தெண்டிரைநீர்
ஆலமிசைந் துள்ளா ரகம்.

(ப - ரை.) மா வாய்மை - சிறந்த உண்மையையுடைய, தொண்டர் மணி வாயும் - அடியவர்களுடைய அழகிய வாயும், தேவாரப்பண்-தேவாரப்பண்ணை, பாடும்-பாடுகின்ற, சிங்கை—; நல் மனமும் - (அவரது) நல்ல மனமும், தே - கடவுளின், ஆர் - அரிய, அ பண்பு - அந்த எண் குணங்களும், ஆடும் - பொருந்தப் பெற்ற, சிங்கை—; ஓவாமல் - நீங்காமல், சீலம் - ஞானவொழுக் கத்தை, இசைந்துள்ளார் - பொருந்தியுள்ளவர்களும், தெரிவு அரியார் - தெரிதற்கு அரியவரும், தெள் திரை நீர் - தெள்ளிய அலையையுடைய நீரையுடைய கடலில் தோன்றிய, ஆலம் மிசைந் துள்ளார் - விடத்தை யுண்டவருமாகிய சிவபெருமானது, அகம்- இடமாகும்.

(கு - ரை.) எண் குணங்களாவன:-தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவி

லாற்ற லுடைமை, வரம்பிலின்ப முடைமை என இவை. தெள் திரைநீர் - கடல்; அன்மொழித் தொகை. (௫௫)

நீதியுமேன் புட்குலத்தோர் நீள்சிறைய புள்ளினமும்
தீதி னவந்தடுக்குஞ் சிங்கையே—பாதி
மரகதமே விட்டார் வழுதியெதிர் சம்புக்
குரகதமே விட்டார் குடி.

(ப - ரை.) நீதியும்-நீதிகளும், தீதுஇன்-தீமையின், அவம்-குற்றங்களை, தடுக்கும் - சேராமற் செய்கின்ற, சிங்கை—; புட்குலத்து - பறவைக் கூட்டங்களுள், ஓர் நீள் சிறைய - ஒப்பற்ற நீண்ட சிறகுகளையுடைய, புள்ளினமும் - தீப்பறவைக் கூட்டங்களும், தீ - நெருப்பை, தின்ன - தின்னும் பொருட்டு, வந்து அடுக்கும் - வந்து சேருகின்ற, சிங்கை—; பாதி - பாதிவடிவில், மரகதம் - மரகதவடிவை, மேவிட்டார்-பொருந்தினவரும், வழுதி எதிரில் - பாண்டியன் எதிரில், சம்பு - நரிகளை, குரகதமே-குதிரைகளாகவே, விட்டார்-செலுத்தினவருமாகிய சிவபெருமான், குடி - குடியிருக்குமிடம்.

(கு - ரை.) சிறைய - குறிப்புப் பெயரெச்சம். 'தீ தின்ன வந்தடுக்கும்' என்றமையால்,புள்ளினம் என்பதற்குத் தீப்பறவைக் கூட்டம் எனப் பொருள் கூறப்பட்டது. மேவிடுதல் - பொருந்துதல். வழுதி யென்றது ஈண்டு அரிமர்த்தன பாண்டியனை. (௫௬)

வேறற் கரும்பகையும் வேழமதம் பாய்நிலமும்
சேறற் கருமையவாஞ் சிங்கையே—மாறற்கு
வெப்பழிக்கு நீற்றினர் மேவார் புரமெரியுந்
தப்பழிக்கு நீற்றினர் சார்பு.

(ப - ரை.) வேறற்கு அரும்பகையும் - வெல்லுதற்கு அரிய பகைவரும், சேறற்கு - கிட்டுதற்கு, அருமைய ஆம் - அருமையதாகின்ற, சிங்கை—; வேழம் மதம்-யானையினது மதம், பாய் - பாய்கின்ற, நிலமும் - இடமும், சேறு - சேறுனது, அல் - இருள் போன்ற, கருமைய ஆம்-கருமையவா யிருக்கின்ற, சிங்கை—; மாறற் கு - கூன் பாண்டியனுக்கு, வெப்பு அழிக்கும் - வெப்பு நோயை அழிக்கின்ற, நீற்றினர் - விபூதியைத் திருஞான சம்பந்

தார்க்கு அருளினவரும், மேவார்-பகைவரது, புரம் - திரிபுரத்தை, எரி - எரிக்கு, உந்த - கொடுக்க (அதனாலுண்டாகிய), பழிக்கும் நீற்றினார் - பழிக்கின்ற சாம்பலைப் பூசிக்கொண்டவருமாகிய சிவ பெருமான், சார்பு - சாருமிடம்.

(கு - ரை.) பகை-பண்பாகுபெயராய்ப் பகைவரையுணர்த் திற்று. சேறற்கு - செல்லுதற்கு; செல்+தல்+கு. அருமைய அது ஆம் என்புழித் துவ் விகுதி தொகுத்தல் பெற்றது. சேறு அல் கருமைய ஆம் என்புழிக் கருமையவென்பது முற்றெச்சம், வெப்புநோய் - சுரநோய். மாறன் என்றது கூன் பாண்டியனை. புரத்தில் எரியைச்செலுத்த எனினுமாம். உந்தல் - செலுத்தல்.

பத்தி தருவிழவும் பன்மா ளிகையுமுன்னாட்
சித்திரைமா தங்குலவுஞ் சிங்கையே—புத்திரராம்
தார்க்குஞ் சரமயிலான் றாதையொரு பாதிதனைப்
பார்க்குஞ் சரமயிலான் பற்று.

(ப - ரை.) பத்தி தரு விழவும்-பத்தியைத் தருகின்ற திரு விழாவும், சித்திரை மாதம்-சித்திரை மாதத்திலே, முன் நாள் - அச்சுவினி நட்சத்திரத்திலே, குலவும்-விளங்குகின்ற, சிங்கை—; பல் மாளிகையும் - பல மாளிகைகளும், முன் - முன்னே, ஆட்சி - ஆளுதலையுடைய, திரை மாது-பாற்கடலிற்றோன்றிய இலக்குமி, அங்கு-அவ்விடத்து, உலவும்-தங்கப்பெறுகின்ற, சிங்கை—; புத்திரராம் - புத்திரராகிய, தார் - மாலையணிந்த, குஞ்சரம்-யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளுக்கும், அயிலான்-வேற்படை யையுடைய முருகக் கடவுளுக்கும், தாதை - தந்தையாக வுள்ளவ ரும், ஒரு பாதி - ஒரு பாதியில், தன்னைப் பார்க்கும் -தன்னை (சிவத்தை)ப் பார்க்கின்ற, சரம்-அம்புபோன்ற கண்களையுடைய, மயிலான் - மயில் போன்ற உமாதேவியையுடையவருமாகிய சிவ பெருமான், பற்று-பற்றுமிடமாகும்.

(கு - ரை.) இருபத்தேழு நட்சத்திரங்களுள் அச்சுவினி முன்னதாதலின், 'முன்னாள்' என்றார். திரை - ஆகு பெயராய்க் கடலையுணர்த்திற்று ; அது திரைமாது என்ற குறிப்பால் பாற்கட லெனப் பெறப்பட்டது. விநாயகப் பெருமானுக்கு உத்தமாங்கம் யானை முகமாதலின் 'குஞ்சரம்' என்றார். அயிலான் - ஈண்டு முருகக்கடவுளை யுணர்த்திற்று. தன்னை என்றது சிவத்தை.

சரம் - ஆகுபெயர். மயிலான் என்புழி, மயில் என்றது ஆகுபெய ராய் உமாதேவியை யுணர்த்திற்று. (௪அ)

பிந்தாத நல்லறமும் பேராயர் வேய்ங்குழலும்
சிந்தா குலந்தணிக்குஞ் சிங்கையே—சந்தார்
புளகத் தனத்தனள் பூட்டுகுறி மார்பத்
துளகத் தனத்தன ளூர்.

(ப - ரை.) பிந்தாத - பிற்படாத, நல் அறமும் - நல்ல தரு மங்களும், சிந்தா ஆகுலம் - மனவருத்தத்தை, தணிக்கும் - ஒழிக் கின்ற, சிங்கை—; பேராயர் - பேரிடையருடைய, வேய்ங்குழலும், புல்லாங்குழலும், சிந்து - சிதறிய, ஆ குலம்-பசுக் கூட்டங்களை, தணிக்கும் - ஓடாமற் றடுக்கின்ற, சிங்கை—; சந்து ஆர்-சந்தனம் பூசப்பெற்ற, புளகம் - பூரித்த, தனத்து அன்னள் - முலையை யுடைய இருநாழி நெல் பெற்ற காமாட்சி அம்மையார், பூட்டு - வைத்த, குறி - தழும்பு, மார்பத்து-மார்பினிடத்து, உள-உள்ள, கத்தன் - கர்த்தரும், அத்தன் ஆள் ஊர் - செந்நிறத்தையுடைய வருமாகிய சிவபெருமான் ஆள்கின்ற ஊராகும்.

(கு - ரை.) ஆயருள் சிற்றாயர் பேராயர் என இரு வகை யினர் உளர். சிந்தாகுலம் - வடநூற்சந்தி. உமாதேவியார் காஞ்சி யில் முப்பான் இரண்டு அறங்களையும் செய்வான் சிவபெருமா னிடத்து இருநாழி நெல்பெற்றனரென்க. அத்து-சிவப்பு; பவழ மேனியனாதலின் 'அத்தன்' என்றார். (௪௯)

வேய்வனமும் போர்க்களத்து வீரரடு செஞ்சரமும்
தீவனமா கத்தாக்குஞ் சிங்கையே—நோவன்முன்
தந்துபர சண்டன் சமர்விளைப்ப மார்க்கண்டன்
வந்து பரசண்டன் மனை.

(ப - ரை.) வேய் வனமும் - மூங்கிற் கூட்டமும், தீ வனம் ஆக - தீக்காடு உண்டாகும்படி, தாக்கும் மோதுகின்ற, சிங்கை—; போர்க்களத்து - யுத்தகளத்து, வீரர் - வீரர்கள், அடு - கொல்லு கின்ற, செம் சரமும் - செவ்விய பாணமும், தீ-கொடிய, வனம்- துவாரத்தை, ஆகத்து ஆக்கும்-மார்பிலுண்டாக்குகின்ற, சிங்கை—; பரசண்டன் - அந்நியனான இயமன், முன் நோவல் தந்து - முன்

வருத்தத்தைக் கொடுத்து, சமர் விளைப்ப - போரைச் செய்ய, மார்க்கண்டன் வந்து - மார்க்கண்ட முனிவன் வந்து, பரசு அண்டன் – துதிக்கின்ற கடவுளது, மனை - வீடாம்.

(கு - ரை.) தீவனமாகத் தாக்கும் என்பதற்கு வனத்தைத் தீயாகத் தாக்கும் எனினுமமையும். இனி, பரசுசண்டன்-மழுப் படையையுடைய இயமன். பரசுசண்டன் என்பது பரசண்டன் என்றாயது "தழங்குரல் முரசிற் சாற்றி" என்னுஞ் சிந்தாமணித் தொடர்போல நின்றது. பரசு அண்டன் என்பது பரசுதற்குக் காரணமான கடவுள் என்க. (௫௦)

அன்னந் துணர்க்கமலத் தாடவர்கள் கோமறுகில்
சின்னந் துவைத்தார்க்குஞ் சிங்கையே—பொன்னம்
பலவிருப்ப ராஞர் பழம்புவன கோடி
பலவிருப்ப ராஞர் பதி.

(ப - ரை.) அன்னம் - அன்னப்புள், துணர்க் கமலத்து - இதழ்களையுடைய தாமரையில், சில் நந்து - சில சங்குகளை, வைத்து - (சினையென) வைத்து, ஆர்க்கும் – (சிறகுகளினால்) அணைத்துக் கொள்ளுகின்ற, சிங்கை—; ஆடவர்கள் - அரசிளங் குமரர்கள், கோ மறுகில் - இராசவீதியில், சின்னம் - திருச் சின்னத்தை, துவைத்து - ஊதி, ஆர்க்கும் - ஆரவாரிக்கின்ற, சிங்கை—; பொன்னம்பலம் - கனகசபையை, விருப்பர் - விருப்ப மாகக் கொண்டவரும், ஆஞர் - இடபத்தையுடையவரும், பழம் – பழமையான, பல புவன கோடி – பல புவன கோடியில், இருப்பர் ஆஞர் – இருப்பவராயினருமாகிய சிவபெருமானது, பதி - ஊராகும்.

(கு - ரை.) ஆர்க்கும்-அணைக்கும்; ஆரவாரிக்கும். சின்னம்- எக்காளமுமாம். பல புவன கோடி - பல கோடி புவனங்களில் என மாற்றிப் பொருள்கோடலும் ஒன்று. (௫க)

ஐய பசுந்தமிழு மாறறிநூ லந்தணரும்
செய்ய மகம்புரியுஞ் சிங்கையே—சையம்
தருகுமா ரத்தியார் தந்தலைவர் வேணி
சேருகுமா ரத்தியார் சேர்வு.

(ப - ரை.) ஐய - அழகிய, பசு தமிழும் - இனிய தமிழ்ப் பாக்களும், செம்மை - செவ்விய, யமகம் புரியும் - யமகமாகச் செய்யப்படுகின்ற, சிங்கை—; ஆறு நூல் அறி - ஆறு கலைகளையு மறிந்த, அந்தணரும் - பிராமணர்களும், செய்ய - செப்ப மான, மகம் புரி-யாகத்தைச் செய்கின்ற, சிங்கை—; சையம் தரு- இமயமலை பெற்ற, குமாரத்தியார் தம் தலைவர்-புத்திரியினுடைய தலைவரும், வேணி செருகும்-சடையிற் செருகிய, ஆர் அத்தியார்- ஆத்திமாலையும் எலும்புமாலையுமுடையவருமாகிய சிவபெருமான், சேர்வு - சேருமிடம்.

(கு - ரை.) பசுந்தமிழ் என்புழிப் பசுமை ஈண்டு இனிமை மேற்று. செம்மை + யமகம் = செய்யமகம் என்றாயது. ஆறு அறி நூல் என்பதை ஆறு நூல் அறி என மாற்றுக. அந்தணர்-அழகிய தட்பத்தையுடையவர்; வேதாந்தத்தை அணுகுபவர் எனினு மாம். ஆர் - ஆத்திமாலை; ஆகுபெயர். அத்தி - என்பு மாலை; ஆகுபெயர். (ருஉ)

பந்தித்த கச்சுமின்னார் பாடகப்பூந் தாணடையும்
சிந்தித்த னந்திரியுஞ் சிங்கையே—பந்திக்
குடிலச் சடையார் கோடியனைப்பாண் பீறல்
குடிலச் சடையார் குடி.

(ப - ரை.) மின்னார் - பெண்களுடைய, பந்தித்த கச்சும் - கட்டிய கச்சும், சிந்தி-கிழிபடுதலால், தனம்-கொங்கை, திரியும் - அசைகின்ற, சிங்கை—; மின்னார்-அப்பெண்களுடைய, பாடகம் - பாடகமணிந்த, பூ - அழகிய, தாள் நடையும் - காலின் நடையும், அனம் - அன்னப்புள், சிந்தித்து - எண்ணப்பட்டு, திரியும் - திரிகின்ற, சிங்கை—; பந்தி - ஒழுங்கான, குடிலம் - வட்டமான, சடையார் - சடையையுடையவரும், கொடியனை - கொடியனைய என்னை, பாண் - பாழான, பீறல் - துவாரம் பொருந்திய, குடில்- குடிசையாகிய, அச்சு - உடலில், அடையார் - அடைக்காதவரு மாகிய சிவபெருமான், குடி - குடி இருக்குமிடமாகும்.

(கு - ரை.) சிந்தி - சிந்த; எச்சத்திரிபு. மின்னார் - இடை நிலை விளக்கு. சிந்தி, சிந்தித்து என்பவற்றில் படுவிகுதி தொக்கது. அச்சு - உயிர்: அது தானியாகுபெயராய் உடலை யுணர்த்திற்று. (ருங)

மெய்ம்மாண் பினருளமு மெல்லியலார் மெய்ச்சுணங்கும்
செம்மாந் துணர்விலகுஞ் சிங்கையே—பெம்மான்
கணிச்சிகரத் தாற்றினன் காமருபூந் தென்றல்
மணிச்சிகரத் தாற்றினன் வாழ்வு.

(ப - ரை.) மெய் - உண்மையையுடைய, மாண்பினர் - பெரியோர்களுடைய, உளமும்-மனமும், செம்மாந்து-மேம்பட்டு, உணர்வு - அறிவு, இலகும் - விளங்குகின்ற, சிங்கை—; மெல்லிய லார் - மகளிரது, மெய் - உடலிற்பூத்த, சுணங்கும் - தேமலும், செம் - சிவந்த, மா துணர் - மாந்துளிரை, விலகும் - விலக்கு கின்ற, சிங்கை—; பெம்மான் - பெருமான், கணிச்சி கரத்து ஆற்றினன் - மழுவைக் கையில் தாங்கினவரும், காமரு - அழகிய, பூ - பொலிவினையுடைய, தென்றல் - தென்றலையுடைய, மணி - மணிகள் வாய்ந்த, சிகரத்து - பொதியமலையினின்றும் ஒழுகு கின்ற, ஆற்றினன் - பொருநையாற்றை யுடையவருமாகிய சிவ பெருமான், வாழ்வு - வாழுமிடமாகும்.

(கு - ரை.) விலகும் என்புழி விவ்விகுதி தொக்கது; தன் வினை பிறவினை மேற்று எனினுமமையும். ஆற்றுதல் - தாங்கு தல். காமரு - காமர்+உ, உகரம் சாரியையாகவும், காமம் மரு எனத் தொகுக்கும் வழித் தொகுத்தலாகவும் கொள்க. சிகரம் - ஆகுபெயர். தென்றல் மணிச் சிகரம் என்றதனால், சிகரம் என்ப தற்குப் பொதியமலையெனப் பொருள் கூறப்பட்டது. (௯௪)

மைந்தரயில் வேல்வலியில் வாம்புரவித் தேரேற்றில்
செந்தி னகரனைநேர் சிங்கையே—அந்தி
திறம்பழகு மெய்யினர் சின்மயவே தாந்தத்
திறம்பழகு மெய்யினர் சேர்வு.

(ப - ரை.) மைந்தர் - வீரர், அயில்-கூரிய, வேல் வலியில் - வேற்படையைச் செலுத்துகின்ற வல்லமையில், செந்தில் நகரனை - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகனை, நேர்-ஒத்திருக் கின்ற, சிங்கை—: வாம் - தாவிச் செல்லுகின்ற, புரவி - குதிரை பூட்டிய, தேர் - தேரை, ஏற்றில் - (அம்மைந்தர்) ஏறிச் செலுத்து வதில், செம் - சிவந்த, தினகரனை - சூரியனை, நேர் - ஒத்திருக் கின்ற, சிங்கை—; அந்தி செவ்வானமும், திறம்பு - மாறுபடுகின்ற,

அழகு - அழகையுடைய, மெய்யினர் - வடிவத்தையுடையவரும், சின்மயம்-ஞானமயமாகிய, வேதாந்தத்திறம் - வேதத்தின் அந்தமாகிய முப்பத்திரண்டு உபநிடதங்களும், பழகு - பழகுகின்ற, மெய்யினர்-உண்மைப் பொருளாயுள்ளவருமாகிய சிவபெருமான், சேர்வு - சேருமிடம்.

(கு - ரை.) மைந்தர் - வலிமையுடையார். ஈண்டு வீரர் மேற்று. அயில் - கூர்மை. செந்தில் நகரன் என்றது திருச்செந்தூரிலெழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளை. ஏறு - ஏறுதல்; ஏற்று என முதனிலை திரிந்த தொழிற்பெயர். திறம் - வகை. பழகுதல் - ஈண்டுச் சொல்லப்படுதல் மேற்று. மெய் - உண்மை. (ருரு)

காணறு நாண்மலரிற் கன்னற் பெரும்பணையில்
தேனறு கால்பாயுஞ் சிங்கையே—யூனற
உண்டவரை வில்லா ருலகேழு முண்டசரம்
கோண்டவரை வில்லார் குடி.

(ப - ரை.) கான் நாறு-வாசனை வீசுகின்ற, நாள் மலரில் - அன்றலர்ந்த பூக்களில், தேன்-(பெண்) வண்டுகளும், ஆறுகால் - (ஆண்)வண்டுகளும், பாயும்-(தேனையுண்ணும் பொருட்டு) பாய்கின்ற, சிங்கை—; கன்னல்-கரும்புகளையுடைய, பெரும்பணையில்-பெரிய வயல்களில், தேன்-தேன்போன்ற இனிய இரசமானது, ஆறு-ஆறுபோல, கால் - கால்வாய்களில், பாயும் - பரவுகின்ற, சிங்கை—; ஊன்-ஊனை, நாற-புலால் மணம் வீச, உண்ட-புசித்த, வரைவு இல்லார் - நீக்கமில்லாதவரும், உலகு ஏழும்-ஏழுலகத்தையும், உண்ட சரம் - உண்ட திருமாலாகிய பாணத்தை, கொண்ட-பூட்டிய, வரை வில்லார் - மேரு மலையாகிய வில்லையுடையவருமாகிய சிவபெருமானது, குடி - குடியிருக்குமிடம்.

(கு - ரை.) கன்னல்தேன் என்புழித் தேனென்றது உவமையாகுபெயராய் அதன் இரசத்தை யுணர்த்திற்று. ஆறுகால்-அன்மொழி ஆகுபெயர். ஊன் நாற உண்ட வரைவு இல்லார்என்றது கண்ணப்பன் கொடுத்த ஊனையுண்ட சிவபெருமானை. உலகேழும் உண்ட சரம் என்றது திருமாலை. (ருசு)

மூர லரும்பு முருக்கினரு மோய்ம்பினரும்
சேரலரைக் கூழையிற்சூழ் சிங்கையே—சாரல்

அலைய மலையா ரருவிகுதி பாயும்
மலைய மலையார் மனை.

(ப - ரை.) மூரல் அரும்பு - பற்கள் அரும்புகின்ற, முருக்கினரும் - இதழையுடைய மகளிரும், சேர் அலரை - பொருந்திய பூக்களை, கூழையில் - கூந்தலில், சூழ் - சூடுகின்ற, சிங்கை—; மொய்ம்பினரும் - வீரர்களும், சேரலரை - பகைவர்களை (ஓடாத படி), கூழையில் - முன்னணியில், சூழ் - வளைந்துகொள்கின்ற, சிங்கை—; சார் - பொருந்திய, அல் - இருள் (அஞ்ஞானம்,) அலைய - (தம்மை) வருத்த, மலையார் - வருந்தாதவரும், அருவி குதிபாயும் - அருவி குதிக்கின்ற, மலைய மலையார் - பொதியமலையை யுடையவருமாகிய சிவபெருமானது, மனை - வீடாகும்.

(கு - ரை.) முருக்கினர் - சினையடியாகப் பிறந்த பெண்பாற் படர்க்கைப் பெயர். முருக்கு - வனமுருக்கு; உவமையாகு பெயராய் இதழை யுணர்த்திற்று. கூழை - கூந்தல். அலைய - பிறவினை மேற்று. (கூஎ)

நாற்றமலர்க் கேணிகளு நாகிளஞ்சூன் ஞெண்டினமும்
சேற்ற வளையார்க்குஞ் சிங்கையே—போற்றுகின்ற
போகவ சனத்தினர் போர்மத கரித்தோல்
வீரகவ சத்தினர் வீடு.

(ப - ரை.) நாற்றம் - மணமுடைய, மலர்க்கேணிகளும் - மலர்களையுடைய துரவுகளிலும், சேல் தவளை ஆர்க்கும் - சேல் மீன்களும், தவளைகளும் நிறைந்திருக்கப்பெற்ற, சிங்கை—; நாகு இளம் - மிக்க இளமையையுடைய, சூல் - கருக்கொண்ட, ஞெண்டினமும் - நண்டின் கூட்டங்களும், சேற்ற - சேற்றிலுள்ள, வளை - வளைகளை, ஆர்க்கும் - கட்டுகின்ற, சிங்கை—; போற்றுகின்ற - துதிக்கப்படுகின்ற, போகம் அசனத்தினர் - பாம்பின் நஞ்சையுண்டவரும், போர் மதகரி - போரையுடைய மதம் பொருந்திய யானையினது, தோல் வீர கவசத்தினர் - தோலாகிய போர்க்கவசத்தை யுடையவருமாகிய சிவபெருமானது, வீடு - வீடாகும்.

(கு - ரை.) நாகிளம் - ஒரு பொருட் பன்மொழி. சேற்ற - குறிப்புப் பெயரெச்சம்; சேறு + அ. போகம் - பாம்பின் படம்; அஃது ஆகுபெயராய்ப் பாம்பை யுணர்த்திற்று; சினையாகுபெயர்.

அசனம் - உணவு; ஈண்டு நஞ்சை யுணர்த்திற்று. கரித்தோல் - கயாசுரனாகிய யானையின் தோல், அன்றித் தாருக முனிவர் ஏவிய யானையின் தோல் எனினுமாம். வீரம்-ஈண்டுப் போர் மேற்று; வீரமுமாம். (ருஅ)

ஊறு கரிமதமு மோண்டொடியார் கண்மலரும்
சேறுவள மாற்கமிடுஞ் சிங்கையே—நீறுபுனை
வார்கரக பாலனார் வாழ்த்துமண வாளர்பலி
தேர்கரக பாலனார் சேர்வு.

(ப - ரை.) கரி - யானையின், ஊறு மதமும்-சுரக்கின்ற மதமும், சேறுவளம்-சேற்றின் மிகுதியை, மாற்கம்-வழியில், இடும் - செய்கின்ற, சிங்கை—; ஒண்டொடியார்-மகளிரது,கண் மலரும்-மலர்போன்ற கண்களும், கம் - நீரிலே, சேல் - சேல் மீன்,துவள-துவளும்படி, மால் - (அதற்கு) மயக்கத்தை, இடும்-செய்கின்ற, சிங்கை—; நீறு புனைவார் - விபூதியைத் தரிப்பவரும், கரக பாலனார் - கமண்டலத்தையுடைய பிரமதேவர், வாழ்த்து - வாழ்த்துகின்ற, மணவாளர் - மணவாளக் கோலத்தையுடையவரும், பலி தேர் - பிச்சையெடுத்த, கர கபாலத்தினார்-கையில் பிரம கபாலத்தையுடையவருமாகிய சிவபெருமான், சேர்வு-சேருமிடமாகும்.

(கு - ரை.) மார்க்கம் என்பது சிலேடை நோக்கி, 'மாற்கம்' என நின்றது, மார்க்கம் - வழி. கரக பாலனார் என்பதற்குக் கமண்டலத்தைப் பாதுகாக்கின்ற அகத்தியமுனிவர் எனினுமாம். சிவபெருமான் தன்மணவாளக்கோலத்தை அகத்தியருக்குத்தலங் கடோறும் தரிசிப்பித்தமையால் கரகபாலனா ரென்பதற்கு அகத்திய முனிவர் எனப் பொருள் கூறினும் அமையும். கம்-நீர். (ருகூ)

மையார் கரும்புயலை வாழ்வாரைக் கண்டுவப்பால்
செய்யா ரளகமிகுஞ் சிங்கையே—கையால்
கடனஞ் சமைத்தான் கழற்காலான் மன்றில்
நடனஞ் சமைத்தா னகர்.

(ப - ரை.) மை யார் - கருமை பொருந்திய, கரும்புயலை - பெரிய மேகத்தை, கண்டு - காணலால், உவப்பால் - மகிழ்ச்சியோடு, செய் - வயல்களில், ஆர் - அரிய, அளகம் - நீர், மிகும் -

மிகுகின்ற, சிங்கை—; வாழ்வாரை - (தம்முடன் கூடி) வாழ்பவராகிய தலைவரை, கண்டு - பார்த்து, உவப்பால்-மகிழ்ச்சியோடு, செய்யார் - இலக்குமியை யொத்த மகளிர், அளகம் மிகும்-ஆசை மிகுகின்ற, சிங்கை—; கையால் கடல் நஞ்சு அமைத்தான் - கையினுல் கடலில் தோன்றிய விடத்தை (எடுத்துக்கண்டத்தில்) அமைத்தவரும், கழல் காலான் - வீரக்கழலைத் தரித்த திருவடியுடையவரும், மன்றில் - கனக சபையில், நடம் சமைத்தான் - நடனஞ் செய்தவருமாகிய சிவபெருமானது, நகர்-நகரமாகும்.

(கு - ரை.) கரும்புயல் என்பதில் கருமை அழகுமாம். கண்டு – எச்சத்திரிபு. அளகம் - நீர்; ஆசை. (சுo)

பேரா தறநெறியிற் பெய்யுநறைப் பூங்காவில்
தேரா தவருமுறுஞ் சிங்கையே—சோராது
பூவாரப் பாட்டினுர் பொன்னு டளிக்கவைத்த
தேவாரப் பாட்டினுர் சேர்வு.

(ப - ரை.) அறநெறியில் - தரும மார்க்கத்தில், தேராதவரும்-(நூல்களை ஆராய்ந்து அறத்தின் பயனை) அறியாதவர்களும், பேராது உறும்-சலியாமலுறுகின்ற, சிங்கை—; நறை பெய்யும் - தேனைப் பொழிகின்ற, பூ காவில் - பூக்களையுடைய சோலையில், தேர்-தேரையுடைய, ஆதவரும்-பன்னிரு சூரியர்களும், உறும் - (இளைப்பாறத்) தங்குகின்ற, சிங்கை—; பூ வார் அப்பு - பூவாலும் ஒழுகுகின்ற நீராலும், சோராது - சோர்வடையாது, ஆட்டினுர்- அபிடேகித்தவர்க்கு, பொன் நாடு - பொன்னுட்டை, அளிக்க வைத்த - கொடுக்க வைத்த, தேவாரப் பாட்டினுர் - (மூவர்) தேவாரப்பாட்டையுமுடைய சிவபெருமான், சேர்வு - சேருமிடமாகும்.

(கு - ரை.) பேராது உறும் என இயையும். நறை பெய்யும் என மாற்றுக. நறை – தேன், பூங்கா என்பதற்குப் 'பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்' என்பது விதி. பன்னிருசூரியராவார்கள்:-தாத்துரு, சக்கரன், அரியமன்,மித்திரன்,வருணன், அஞ்சுமான்,இரணியன்,பகவான், திவச்சுவரன்,பூடன்,சவித்திரு, துவட்டன் இப்பெயர் சித்திரை மாதமேடராசி முதல் ஒவ்வொரு மாதத்து ஒவ்வோர் இராசியிற் புகுந்த சூரியனுக்கு முறையே செல்லுமென்பர். இவரே துவாதசாதித்தர். பூவாரப்பு என்புழி

மூன்றனுருபு விகாரத்தாற் றொக்கது. மூவராவார்-திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள். (சுகு)

ஆரத் தடம்பொருநை யாறுமடற் காளையரும்
தீரத் தனம்பெயராச் சிங்கையே—வாரத்து
நீளத் தருவா னிழல்வாழ் வருளடியார்க்
காளத் தருவா னகம்.

(ப - ரை.) ஆரம் - முத்துக்களையுடைய, தட - பெரிய, பொருநையாறும் - பொருநையாறும், தீரம் - கரைகளில், தனம் - பொன், பெயரா - பெயராத (நீங்காத), சிங்கை-; அடல் காளையரும் - வெற்றியையுடைய வீரர்களும், தீரத்தனம் - வீரத்தனம், பெயரா-நீங்காத, சிங்கை—: அருள் அடியார்க்கு-தன்னருளையுடைய அடியவர்கட்கு, நீள்-நீண்ட, அ தரு - அக்கற்பகத் தருவின், வான் நிழல் - சிறந்த நிழலின், வாழ்வு - சம்பத்தை, ஆள - ஆட்சிசெய்யும்படி, வாரத்து - அன்போடு, தருவான் - கொடுப்பவராகிய சிவபெருமானது, அகம் - இடமாம்.

(கு - ரை.) தீரத்து அனம் பெயரா என்பதற்குக் கரைகளில் அன்னப்புள் நீங்காது எனினுமமையும். அன்னம்-இடைக்குறை விகாரம். பெயரா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். வாரத்து என்புழி அத்துச்சாரியை. வாரம் - அன்பு. தருவான்-வினைப் பெயர். அத் தரு வான் நிழல் என்றதனால்-வானுலகத்திலுள்ள கற்பகத்தருவின் நிழலையுணர்த்திற்று எனினும் அமையும். அத் தரு எனப் பலரறி சுட்டால் கற்பகத் தருவை யுணர்த்திற்று. வான்தரு என இயைக்கினுமமையும். (சுஉ)

ஊறன் மதநீ ருவாக்களிறு மொண்சுரும்பும்
தேறல்வாய்க் கொண்டுலவுஞ் சிங்கையே—நாறல்
நவத்துவா ரத்தினு னண்ணுமுடம் பெண்ணார்
தவத்துவா ரத்தினன் சார்பு.

(ப - ரை.) ஊறல் மதநீர்-சுரத்தலையுடைய மதநீர்பொருந்திய, உவாக்களிறும்-உவாவாகிய யானையும், அல்வாய் - இராப்போதில், தேறுகொண்டு - தெளிதலைக்கொண்டு, உலவும் - திரிகின்ற, சிங்கை—; ஒண் சுரும்பும் - ஒள்ளிய வண்டுகளும்,

தேறல் வாய்கொண்டு-(சோலையில்) தேனையுண்டு, உலவும் - திரி கின்ற, சிங்கை—; நாறல் - முடை நாற்றத்தையுடைய, நவத் துவாரத்தினல் - ஒன்பது துவாரத்தினேடு, நண்ணும் - பொருந் திய, உடம்பு-உடம்பை, எண்ணார்-மதியாதவருடைய, தவத்து - தவத்தில், வாரத்தினன் - அன்புடைய சிவபெருமான், சார்பு - சாரும் இடமாகும்.

(கு - ரை.) உவாக்களிறு - இருபெயரொட்டு; காம்பரி, உடுபம், என்பனபோலக் கொள்க. தேறு-முதனிலைத் தொழிற் பெயர். அல் - இருள். தவத்து என்புழி அத்துச்சாரியை. (௬௩)

அங்கம் பசுந்தளிரன் னார்நுதலு மாடவரும்
சிங்கம் புலிபோருதென் சிங்கையே—மங்கை
சுறவுக் குழையார் துணைவிழிதந் தோடாக்
குறவுக் குழையார் குடி.

(ப - ரை.) அங்கம் - உடலம், பசுந்தளிரன்னார் - பசுந்தளி ரையொத்த மகளிரது, நுதலும் - நெற்றியும், சிங்கு - குறைந்த, அம்புலிபொரு - எட்டாநாட் பிறையை ஒத்திருக்கின்ற, தென் - தெற்குத் திக்கிலுள்ள, சிங்கை—; ஆடவரும் - வீரரும், சிங்கம் புலிபொரு-சிங்கத்தையும் புலியையும் மோதுகின்ற, தென் - அழ கிய, சிங்கையே—; மங்கை-உமாதேவியினது, சுறவுக்குழை-மகர குண்டலம், ஆர் - பொருந்திய, துணைவிழி - கண்களிரண்டும், தம் தோள் தாக்குற - தம்முடைய தோளைத் தாக்குற (பார்க்க), உக்கு உழையார் - வாடுகின்ற மானையுடையாராகிய சிவபெரு மான், குடி - குடியிருக்குமிடம்.

(கு - ரை.) தளிர்-மாந்தளிர். சுறவுக்குழை ஆர் துணைவிழி- மகரகுண்டலத்தையுடைய காதளவு பொருந்திய கண்களிரண்டும் எனினுமாம். இப்பொருட்கு சுறவு, குழை - முறையே உவமை யாகுபெயர், தானியாகுபெயர் என்க. உக்குதல் ஈண்டு வாடுதல் மேற்று; உக்குஎன்பதை உட்கு என்பதன் விகாரமாக்கி நடுங்குதல் எனினுமாம். அம்மையாரது கண்ணழகைக் கண்டு மான் நடுங் கியது என்பதாம். (௬௪)

தப்பாத தெய்வமறைச் சைவருமின் னார்முலையும்
செப்பாக மங்களங்கூர் சிங்கையே—கப்பான

சூலங் கரந்திரித்தார் சூழ்ந்துதக்கன் வேள்விதொக்கார்
சீலங் கரந்திரித்தார் சேர்வு.

(ப - ரை.) தப்பாத - தவருத, தெய்வம் - தெய்வத்தன்மையையுடைய, மறைச் சைவரும் - வைதீகச்சைவரும், செப்பு - ஓதுகின்ற, ஆகமங்கள் - சைவாகமங்கள், அங்கு அவ்விடத்தில், ஊர் - மேம்பட்டிருக்கின்ற, சிங்கை—; மின்னூர் முலையும் - மகளிருடைய தனங்களும், செப்புஆக - செப்புக் கிண்ணம்போல, மங்களம் கூர் - மங்களகரம் மிகுந்திருக்கின்ற, சிங்கை—; கப்பு ஆன - மூன்று கிளைகளாகவுள்ள, சூலம் - சூலாயுதத்தை, கரம் திரித்தார் - கையால் சுழற்றி எடுத்தவரும், தக்கன் வேள்வி - தக்கனது வேள்வியை, சூழ்ந்து - வளைந்து, தொக்கார் - கூடிய தேவர் முதலியோரது, சீலம் - ஒழுக்கத்தை, கரந்து - மறைந்து (வீரபத்திரராகத் தோன்றி), அழித்தார் - அழித்தவருமாகிய சிவபெருமான், சேர்பு - சேருமிடம்.

(கு - ரை.) ஆகமங்களில் அறிவு கூர்ந்திருக்கின்ற எனப் பொருள் கோடலுமொன்று. செப்பு - செப்புக் கிண்ணம்; ஆகுபெயர்; ஆக - உவமவுருபு. (சூ௫)

பத்தித் துணர்ச்சோலைப் பைங்கனியு மென்சுரும்பும்
தித்தித் துவைப்பார்க்குஞ் சிங்கையே—சத்திக்கு
வாமங் கொடுக்கின்றூர் வன்சமனை யோர்மகவால்
தாமங் கொடுக்கின்றூர் சார்பு.

(ப - ரை.) பத்தி - வரிசையாகவுள்ள, துணர் - பூங்கொத்துக்களையுடைய, சோலைக் கனியும் - சோலையிலுள்ள பழங்களும், தித்தித்து - இனித்து, வைப்பு - இடங்கடோறும், ஆர்க்கும் - நிறைந்திருக்கின்ற, சிங்கை—; மென் சுரும்பும் - மெல்லிய வண்டுகளும், தித்தித் - தித்தித்தென்கின்ற, துவைப்பு - ஓசையோடு, ஆர்க்கும் - ஒலிக்கின்ற, சிங்கை—; சத்திக்கு - உமாதேவிக்கு, வாமம் - தம் இடப்பாகத்தை, கொடுக்கின்றூர் - கொடுத்தவரும், ஓர் மகவால் - ஒரு பிள்ளையாகிய மார்க்கண்டேய முனிவர்பொருட்டு, வன்சமனை - வலிய யமனை, தாம் அங்கு - தாம் மார்க்கண்டேய முனிவன் பூசை செய்தவிடத்து, ஒடுக்கின்றூர் - அழித்தவருமாகிய சிவபெருமான், சார்பு - சாருமிடமாகும்.

(கு - ரை.) கொடுக்கின்றூர் இயல்புபற்றி வந்த காலவழுவமைதி. ஒடுக்குகின்றூர் என்பது ஒடுக்கின்றூர் என நின்றது;

தழங்குரல் என்பதுபோலத் தொகுக்கும்வழித் தொகுத்தல். ஒடுக் கின்ரூர் என்பதும் கால வழுவமைதி. பைங்கிளியும் எனப் பாடங் கொண்டு அதற்கு எற்பப் பொருள் கூறலுமொன்று. (சுசு)

காரளக மாதருமேன் கான மயினடமும்
சீரளவி ஞடகநேர் சிங்கையே—நீரளவு
கோடீரத் தாரார் குரைகழற்கால் வஞ்சர்கோடும்
கோடீரத் தாரார் குடி.

(ப - ரை.) கார் அளக மாதரும் - மேகத்தையொத்த கூந் தலையுடைய பெண்களும், சீர் - கற்பின் சிறப்பை, அளவு இல் - அளவு இல்லாமல், நாடுஅகம்-நாடுகின்ற மனத்தில், நேர் - கொண் டிருக்கின்ற, சிங்கை—; கானமென்மயில் - காட்டில் வசிக்கின்ற மெல்லிய மயிலினது, நடமும்-நடனமும், சீர் அளவின்-தாள ஒத் தோடு ஒத்த, நாடகம் நேர் - நாடகத்தை ஒத்திருக்கின்ற, சிங் கையே-; நீரளவு-நீர் பொருந்திய, கோடீரத்து-சடையினிடத்து, ஆரார் - ஆத்திமாலை யுடையவரும், வஞ்சகர் - வஞ்சகருடைய, கொடும் கோள் - கொடிய குற்றம், தீர - தீரும்படி, குரைகழல் கால் - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய திருவடியை, தாரார் - தர மாட்டாதவருமாகிய சிவபெருமான், குடி-குடியிருக்குமிடம்.

(கு - ரை.) நேர்தல் - தங்குதல், ஒத்தல். கோடீரம் - சடை. ஆர் - ஆத்தி, குரைகழல் - வினைத்தொகை. கழல் - வீரக்கழல். மென்மயில் - சாயலையுடைய மயில் எனினுமாம்; "மென்மை சாயல்". (சுஎ)

ஆக்கமுறு விண்ணவரு மஞ்சிறைசெஞ் சூட்டனமும்
தேக்கமல மென்றிருக்குஞ் சிங்கையே— நோக்கம்
மதியா தவனழலான் வாழ்த்தினரைத் தாழ்த்த
மதியா தவனழலான் வாழ்வு.

(ப - ரை.) ஆக்கமுறு - போகத்தையுற்ற, விண்ணவரும் - தேவர்களும், தேங்கு - நிறைந்த, அமலம் என்று - தூய இட மென்று கருதி, இருக்கும்-தங்குகின்ற, சிங்கை-; அம் சிறை-அழ கிய சிறகினையும், செம்சூட்டு - சிவந்த உச்சிக்கொண்டையையு முடைய, அன்னமும்-அன்னப்புள்ளும், தேன்கமலமென்றுஇருக் கும் - தேன் பொருந்திய தாமரை இதழை மென்று கொண்டு

இருக்கின்ற, சிங்கையே—; நோக்கம்-கண்கள், மதி ஆதவன் அழலான்-சந்திரனாகவும் சூரியனாகவும் அக்கினியாகவு முடையவரும், வாழ்த்தினரை - தன்னை வாழ்த்தினவர்களை, தாழ்த்த - கீழ்ப் படுத்த, மதியாதவன் - எண்ணாதவரும், அழலான் - (அவரைக்) கோபியாதவருமாகிய சிவபெருமான், வாழ்வு-வாழுமிடமாகும்.

(கு - ரை.) தேங்கு என்பது தேக்கு என விரித்தல் விகாரம் பெற்றது. சிவபெருமான் சோம சூரியாக்கினிகளைத் திருக்கண்களாகவுடைமையால், 'நோக்கம் மதியாதவன் அழலான்' என்றார். சூட்டு - உச்சிக்கொண்டை. அனம் - அன்னம் என்பதன் இடைக்குறை. இனி, தேன் கமலம் மென்று இருக்கும் என்பதற்குக் கமலத்திற்றேனைச் சுவைத்துக்கொண்டு தங்குகின்ற எனினுமாம். இப்பொருட்குக் கமலத்தேன் என மாற்றுக. (சுஅ)

பாரக் குழலார் பயோதரமும் பைங்கூழும்
சேரப் பணைத்துவளர் சிங்கையே—வாரத்து
நச்சரவ மானர் நரகே சரிநடுங்க
அச்சரவ மான ரகம்.

(ப - ரை.) பாரம் குழலார் - இடைக்குப் பாரமாகவுள்ள கூந்தலையுடைய மகளிரது, பயோதரமும்-தனமும், சேர-ஒன்றோடொன்று நெருங்க, பணைத்து - பருத்து, வளர்-வளர்கின்ற, சிங்கை—; பைங்கூழும் - பசிய பயிர்களும், சேர் அப்பு அணைத்து வளர் - சேர்ந்த நீரைப் பொருந்தி வளர்கின்ற, சிங்கை—; வாரத்து-அன்போடு, நச்சு அரவம்-விடம் பொருந்திய பாம்பையும், மானர் - மானையுமுடையவரும், நரகேசரி - திருமாலாகிய நரசிங்கம், நடுங்க - நடுங்கும்படி, அ சரவமானர் - அந்தச் சரப வடிவமானவருமாகிய சிவபெருமானது, அகம் - இடமாம்.

(கு - ரை.) சரபம் - எண்காற்புள். சரபமென்பது சரவமென நின்றது; பாட்டை - வாட்டை என்பது போலப் பகரத்திற்கு வகரம் மயங்கிற்று. இனி, வாரத்து-நெடிய கோபத்தோடு, நரகேசரியைக் கொல்ல அச் சரபவடிவ மானவர் எனினுமமையும். நடுங்குதல் - கொல்லுதல்மேற்று; உபசரித்தல். (சுகூ)

நேசத் தினின்மடமை நீக்கலினல் லோரெவர்க்கும்
தேசத் தினைநிகர்க்குஞ் சிங்கையே—நீசப்

புலைச்சமைய மாற்றினர் பொய்யறிவுக் கெட்டா
துலைச்சமைய மாற்றின ரூர்.

(ப-ரை.) நேசத்தினில் - நட்பினுல், நல்லோர் எவர்க்கும் - நல்லோர் யாவர்க்கும், தேசத்தினை - தங்கள் தேசத்தையே, நிகர்க்கும்-ஒத்திருக்கின்ற, சிங்கையே—; மடமை நீக்கலின் - அறியாமையை ஒழித்தலினுல், நல்லோர் எவர்க்கும்-நல்லோர் யாவர்க்கும், தேசத்தினை - அறிவினை, நிகர்க்கும் - ஒத்திருக்கின்ற, சிங்கை—; நீசப்புலை சமயம்-மிகக் கீழ்மையையுடைய சமயங்களை, மாற்றினர் - மாற்றினவரும், பொய் அறிவுக்கு-பொய்ம்மையாகிய அறிவினுக்கு, எட்டாது - எட்டாமல், உலைச்சு - வருத்துகின்ற, அம் - சிறந்த, ஐயம் - ஐயத்தை, ஆற்றினர் - உண்டாக்கினவருமாகிய சிவபெருமானது, ஊர் - ஊராகும்.

(கு-ரை.) சிறந்த ஐயத்தை யுண்டாக்கினது பொய்யறிவாளர்க்கு என்க. எவர்க்கும் என்புழி உம்மை முற்றும்மை. (௭0)

வெவ்வலரிக் கெத்துறையு மென்சூ லியர்நாவும்
செவ்வலரிப் பூமணக்குஞ் சிங்கையே—மௌவலரும்
பாக முறுவலா ராம்பலித ழாளைவிட்டு
யோக முறுவலா ரூர்.

(ப-ரை.) வெம் அலரிக்கு - வெவ்விய சூரியனுக்கு, எத்துறையும் - எவ்வகைப்பட்ட நீர்த்துறையிலும் (இட்டுப் பூசித்தலால்), செவ் அலரிப் பூ - செவ்விய அலரிப் பூக்கள், மணக்கும்-வாசனை வீசுகின்ற, சிங்கை—; மெல் சூலியர்-மெல்லிய கருவுற்ற மகளிருடைய, நாவும் - நாக்குகளும், செம் - சிவந்த, அலரி - அழகிய, பூ மண் - பூமியிலுள்ள மண்ணை, நக்கும் - நக்குகின்ற, சிங்கை—; மௌவல் அரும்பாக-முல்லை யரும்பு போல, முறுவல்-பற்கள், ஆர் - நிறைந்த, ஆம்பல் - செவ்வல்லியை யொத்த, இதழாளை - இதழையுடைய உமாதேவியை, விட்டு - நீங்கி, யோகம் - யோகத்தை, உற-உறுதலின், வல்லார் - வல்லவராகிய சிவபெருமானது, ஊர் - ஊராகும்.

(கு-ரை.) இனி, எத்துறையிலும் சூரியனுடைய வருகையால் சிவந்த அலரிப்பூக்கள் மணக்கின்ற எனினுமாம். அரும்பாக என்புழி, ஆக : உவம உருபு. இதழாள்: சினையடியாகப் பிறந்த

பெண்பாற் படர்க்கைப் பெயர். உறு - உறுதல்: முதனிலைத் தொழிற் பெயர். (எக)

ஆகுலவா ரங்குறித்த வாயர் குலவணிகர்
சேகுலவா ரம்பிரிக்குஞ் சிங்கையே—கோகுலமுன்
நைவசனத் தோகையினர் ஞானவடி வின்புடையார்
சைவசனத் தோகையினர் சார்பு.

(ப - ரை.) ஆ குலம்-பசுக்கூட்டங்களின், வாரம்-(புணர்ச்சியின்) அன்பை, குறித்த - எண்ணிய, ஆயர் - இடையர்கள், சே குலம்-இடபத்தின் திரளை, வாரம் பிரிக்கும், பங்காகப் பிரிக்கின்ற, சிங்கை—; குலவணிகர்-தலைமையான வியாபாரிகள், சேகு உலவு ஆரம் பிரிக்கும் - வைரம் பொருந்திய முத்துக்களைத் தரமாகப் பிரிக்கின்ற, சிங்கை—; கோகிலம் - குயிற் கூட்டங்கள், முன் - முன்னே, நை-நைகின்ற, வசனம் - சொற்களையுடைய, தோகையினர் - உமாதேவியாருடைய, ஞானவடிவின் - ஞானவடிவினது, புடையார்-பக்கத்திலுள்ளவரும், சைவ சனத்து-சைவ சனங்களிடத்து, ஓகையினர் - மகிழ்ச்சியை யுடையவருமாகிய சிவபெருமான், சார்பு - சாருமிடமாகும்.

(கு - ரை.) சேகு உலவு ஆரம் என்றது கெட்டி முத்தை. ஆரம் - சந்தனக் கட்டையுமாம். கோகிலம் என்பது எதுகை நோக்கிக் கோகுல மென்றாயது. ஓகை : உவகை என்பதன் மரூஉ. (எஉ)

பன்ன வருந்தமிழ்கேட் பாருமவர் மாளிகையும்
தேன்ன மலையனிகர் சிங்கையே—இன்னலெறி
வானடிக்கு நாடகத்தார் வாழவருள் வார்சடிலக்
கானடிக்கு நாடகத்தார் காப்பு.

(ப - ரை.) பன்ன-(பாவலர்) சொல்ல, அரு தமிழ்-அரிய தமிழ்ப் பாக்களை, கேட்பாரும்-கேட்கின்றவர்களும், தென்னன் - தென்னவனையும் (பாண்டியனையும்), மலையன் - அகத்திய முனிவனையும், நிகர்-ஒப்பாயிருக்கின்ற, சிங்கை—: அவர் மாளிகையும் - அவர்களுடைய வீடுகளும், தென்ன - தெற்குத் திசையிலுள்ள,

மலையம் - பொதிய மலையை, நிகர் - ஒத்திருக்கின்ற, சிங்கை—; இன்னல் எறிவான் - துன்பத்தை யொழிக்கும் பொருட்டு, நடு - (பிரமனால்) நிறுவிய, இ கு - இப் பூமியில், நாடு அகத்தார் - (தம்மைக்) கருதுகின்ற மனத்தையுடையார், வாழ - வாழும்படி, அருள்வார் - அருள் செய்பவரும், சுடலைக்கான் - சுடலையாகிய காட்டினிடத்து, நடிக்கும் - நடிக்கின்ற, நாடகத்தார் - நாடகத்தையுடையவரு மாகிய சிவபெருமான், காப்பு - காக்குமிடமாகும்.

(கு - ரை.) அருந்தமிழ் கேட்பார் கொடையினாலும், கல்வி யறிவினாலும் முறையே பாண்டியரையும் அகத்தியனாரையும் ஒப் பாவார். மலைய நிகர் என்பது மலைய னிகர் எனச் சிலேடை நோக்கிப் பொது நகரம் சிறப்பு னகரமாக நின்றது. இனி, தென் அமல் ஐயன் நிகர் - அழகு பொருந்திய அக்கினிப் பிழம்பாகிய சிவ பெருமானை ஒத்திருக்கின்ற எனினுமாம். ஐயன் - சிவன். இன்னல் எறிவான் நாடு அகத்தார் என இயையும். (எந)

சொல்வந்த நல்லோர் தொகுமனையுஞ் சாலிகளும்
செல்வந் தமருறவாஞ் சிங்கையே— இல்வந்து
சேயத் தலைக்கறியார் தீப்பசியார் தீயவனை
மாயத் தலைக்கறியார் வாழ்வு.

(ப - ரை.) சொல் வந்த - புகழ்பெற்ற, நல்லோர் தொகுமனை யும் - நற்குண நற்செய்கைகளையுடைய நல்லவர்கள் சேர்ந்த வீடு களும், செல்வம் தமர் உறவாம் - செல்வமும் சுற்றத்தாரும் உறவா கின்ற, சிங்கை—; சாலிகளும் - நெற்பயிர்களும், செல் வந்து - மேகங்கள் வந்து, அமருற - தங்குதலாலே, ஆம் - விருத்தியா கின்ற, சிங்கை -; இல் வந்து - (சிறுத்தொண்ட நாயனாரது) வீட் டிற்கு வந்து, சேய் அ தலைக்கறி - பிள்ளையின் அத்தலைக்கறியை, ஆர் - உண்ணுதற்குக் காரணமான, தீ பசியார் - கொடிய பசியை யுடையவரும், தீய எனை - கொடிய என்னை, மாயத்து - மாய்கை யில், அலைக்க அறியார் - அலைக்க அறியாதவருமாகிய சிவபெரு மான், வாழ்வு - வாழுமிடமாகும்.

(கு - ரை.) தமர் - சுற்றத்தார். அலைக்கறியார் என்புழி அக ரம் தொக்கது. தான் விரும்பிக் கேட்டமையால், 'அத்தலைக்கறி' யென்றார். எனை: என்னை என்பதன் தொகுத்தல். (எச)

மானந் தரும்பொருநர் வாளிடத்தும் பூந்தடத்தும்
சேனந் துவண்டுலவுஞ் சிங்கையே—ஞானம்
தழைத்தவரைக் காப்பா ரழல்விழிக்கும் பாம்பால்
இழைத்தவரைக் காப்பா ரிடம்.

(ப - ரை.) மானம்தரும் - பெருமையையுடைய, பொருநர் வாளிடத்தும் - வீரரது வாளிடத்தும், சேனம் - பருந்துகள், துவண்டு-வட்டமிட்டு, உலவும்-திரிகின்ற, சிங்கை-; பூ தடத்தும்- அழகிய தடாகங்களிடத்தும், சேல் நந்து வண்டு-சேல்மீன்களும் சங்குகளும் வண்டுகளும், உலவும்-உலவுகின்ற, சிங்கை—; ஞானம் தழைத்தவரை - ஞானம் பொலியப்பட்டவரை, காப்பார்-காப்பவரும், அழல் விரிக்கும்-தீச்சொரிய விழித்துப் பார்க்கின்ற, பாம்பால் இழைத்த - பாம்பால் செய்து அமைத்த, அரைக் காப்பார்- அரைஞாணையுடையவருமாகிய சிவபெருமானது, இடம் - இடமாகும்.

(கு - ரை.) அரைக் காப்பு-அரைஞாண். பொருநர் - வீரர்.

சொன்முனிவ னின்னிசையுந் தோகையர்மென் சொல்லி
[சையும்
தென்மலைய வெற்புருக்குஞ் சிங்கையே—பொன்மலைவில்
கொண்டு புரங்கடந்தார் கோரவிடம் வாய்நிறைய
மண்டு புரங்கடந்தார் வாழ்வு.

(ப - ரை.) சொல்முனிவன்-அகத்தியனது, இன்இசையும்- இனிய பாட்டும், தென்மலைய வெற்பு உருக்கும்-தெற்குத்திசையிலுள்ள பொதியமலையை உருக்குகின்ற, சிங்கை—; தோகையர் - பெண்களுடைய, மென் சொல் இசையும்-மெல்லிய சொற்களின் இசையும், தேன் மலைய - தேன் மயங்கும்படி, என்பு உருக்கும் - என்பையும் உருக்குகின்ற, சிங்கை—; பொன்மலை வில்கொண்டு - பொன்மலையாகிய வில்லால், புரம்கடந்தார்-திரிபுரத்தை வென்றவரும், கோரவிடம் - அச்சத்தை விளைக்கும் விடத்தை, வாய் நிறைய - வாய் நிறைய மண்டுபு - உண்டு (கண்டத்தில்) வைத்தலாலும், உரங்கள் தந்தார் - (தேவர்களுக்கு) வலிமையைக் கொடுத்தவருமாகிய சிவபெருமான், வாழ்வு - வாழுமிடமாகும்.

(கு - ரை.) பொதிய மலையை உருக்கினது இராவணனைக் கந்தருவத்தால் பிணித்த காலத்தில் என்க. சொல்முனிவன் என்றது அகத்தியனை; முத்தமிழையும் அருளினமையால். சொல்- புகழ். தேன் என்பது தென் எனச் சிலேடை நோக்கிக் குறுகிற்று. இனி, விடமானது தம் வாயில் நிறைதலாலே நெருங்கிய தேவர்களுடைய சரீரங்களைக் காத்தவர் எனினுமமையும்; (மண்டு-நெருங்கிய, புரங்கள் - தேவர்களுடைய சரீரங்கள்) (புரம்-சரீரம்) நிறைய: செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம், காரணப் பொருட்டு. மண்டுபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சமும் அப்பொருளில் வந்ததே. (௬௬)

பூணம் புயத்திளைஞர் பொற்படமும் வாம்பரியும்
சேணந் தரத்திரியுஞ் சிங்கையே—தூணம்
கோடுக்குநர கேசரியார் கோளொழித்தா ரென்னைக்
கடுக்குநர கேசரியார் காப்பு.

(ப - ரை) பூண் அம் புயத்து - ஆபரணத்தை யணிந்த அழகிய புயத்தையுடைய, இளைஞர் பொற்படமும் - இளைஞரது அழகிய காற்றூடியும், அந்தரத்து - ஆகாயத்தினது, சேண் - தூரத்தில், இரியும் - பறக்கின்ற, சிங்கை—; வாம்பரியும்-தாவிச் செல்லும் குதிரைகளும், சேணம் - கல்லணையை, தர - இட, திரியும் - சுழன்று வருகின்ற, சிங்கை—; தூண் - தூணுள், ஒடுக்கும் - (தன்னுடலை) மறைத்து வைத்திருந்த, நரகேசரியார்- திருமாலாகிய நரசிங்கத்தினது, கோள் -வலிமையை, ஒழித்தார் - (சரப வடிவெடுத்து) ஒழித்தவரும், என்னை - அடியேனை, கடுக்கும் - வருத்தும், நரகு - நரகத்திடத்து, சரியார் - சரியவிடாதவருமாகிய சிவபெருமான், காப்பு - காக்குமிடமாகும்.

(கு - ரை.) பொற்படம் - காற்றூடி. இதனை வாணி எனவும் தோற்படம் எனவும் கூறுப. இரிதல்-செல்லுதல். சேணந் தரத்து : முன்பின்னாக வந்த ஆறும்வேற்றுமைத் தொகை நிலைத் தொடர். வாவும் என்பது வாம் எனநின்றது. தூண் அங்கு ஒடுக்கும் என்பதில், அங்கு : அசை. இனி, இரணியனுக்கும் பிரகலாதனுக்கும் வாதம் நேர்ந்த காலத்து அவ்விடத்துத் தூணில் ஒடுங்கிக்கிடந்த எனினுமாம்; (அங்கு - அவ்விடம்). சரிவிக்கார் என்பது சரியார் என விவ்விகுதி தொக்கது. நரகே என்புழி, ஏ : அசை. (௬௭)

மீனுகளும் பூந்தடத்து மேதிகளு மென்புறவும்
தேனுவள மேய்ந்துறையுஞ் சிங்கையே—பானு
இனப்பற்று வைத்தா ரிமையமகண் மேலே
மனப்பற்று வைத்தார் மனை.

(ப - ரை.) *மீன் உகளும்*-மீன்கள் குதிக்கின்ற, *பூ தடத்து*-அழகிய தடாகத்தில், *மேதிகளும்*-எருமைகளும், *தேன் உவள* - தேன்பாய, *மேய்ந்து* - (பூக்களை) மேய்ந்து, *உறையும்* - தங்குகின்ற, சிங்கை—; *மென் புறவும்* - மெல்லிய முல்லை நிலமும், *தேனு* - பசுக்களால், *வளம் எய்ந்து* - வளம்பொருந்தி, *உறையும்*-தங்கப்படுகின்ற, சிங்கை—; *பானு* - சூரியனது, *இனம் பல்* - கூட்டமாகிய பற்களை, *துவைத்தார்* - உடைத்தவரும், *இமைய மகள் மேல்* - மலையரையன் மகளாகிய உமாதேவியினிடத்து, *மனப்பற்று வைத்தார்* - மனவிருப்பம் வைத்தவருமாகிய சிவபெருமானது, *மனை* - வீடாகும்.

(கு - ரை.) உறையும் - தங்கும்; தங்கப்படும்: படு விகுதி தொக்கது; முன்னது செய்வினை பின்னது செயப்பாட்டுவினை. புறவம் - முல்லைநிலம். பானு - சூரியன். (எअ)

ஊக்கத் தமர்க்களம்புக் கோர்விழியு மாமடமும்
தீக்கைக் கனல்வழங்குஞ் சிங்கையே—யாக்கையெனும்
தோற்போதியச் சாரலார் தோண்டரெனக் காக்குமிளம்
காற்போதியச் சாரலார் காப்பு.

(ப - ரை.) *ஊக்கத்து* - முயற்சியோடு, *அமர்க்களம்*-யுத்தகளத்தில், *புக்கோர் விழியும்* - புக்க வீரரின் கண்களும், *தீக்கை*-தீத்தலையுடைய, *கனல் வழங்கும்*-அனலைச் சொரிகின்ற, சிங்கை—; *மா மடமும்*-சிறந்த மடங்களும், *தீக்கை* - (சீடர்கட்குத்) தீட்சையின் பொருட்டு, *அனல்* - ஓமாக்கினியை, *வழங்கும்*-வழங்குகின்ற, சிங்கை—; *தோல்பொதி* - தோல் மூடிய, *யாக்கை எனும் அச்சு* - யாக்கை என்கின்ற உடலை, *ஆரலார்*-பொருந்ாதவரை, *தொண்டர் என* - அடியவராகக் கருதி, *காக்கும்* - காக்கின்ற, *இளங்கால்* - தென்றற்காற்றையுடைய, *பொதியச் சாரலார்* - பொதிய மலைச்சாரலையுடையவராகிய சிவபெருமானது, *காப்பு*-காவலிடம்.

(கு - ரை.) யாக்கையின்வேருக உயிர் காணப்படாமையின் ஒற்றுமை நயத்தால், 'யாக்கையெனுமச்சு' என்ருர். (எக)

மேக்களவிட் டோங்குதமிழ் வெற்புமர விந்தமுஞ்சேர்
தேக்கமரப் பூம்பணைபாய் சிங்கையே—நீக்கமிலா
தெங்கு நிலாவிடுவா ரீரச் சடாடவிமேல்
பங்கு நிலாவிடுவார் பற்று.

(ப - ரை.) மேக்கு-ஆகாயத்தை, அளவிட்டு-அளவுபடுத்தி, ஓங்கு - உயர்ந்த, தமிழ் வெற்பும் - பொதியமலையும், சேர் - (தன்னிடத்துப்) பொருந்திய, தேக்கமரம் - தேக்கமரத்தினது, பூ பணை-பூக்களையுடைய கிளைகள், பாய்-பரவுகின்ற, சிங்கை—; அரவிந்தமும் - தாமரைப்பூக்களும், சேர்-(தம்மிடத்துச்)சேர்ந்த, தேன் - தேனை, கமர் - பிளப்பிடத்தையுடைய, அ - அந்த, பூ பணை - பொலிவினையுடைய வயல்களில், பாய்-பாய்ச்சுகின்ற, சிங்கை—; எங்கும்-எவ்விடத்தும், நீக்கம் இலாது - பிரிதல் இல்லாமல், நிலாவிடுவார் - விளங்குகின்றவரும், ஈரச்சடாடவிமேல் - குளிர்ந்த சடைக்காட்டில், பங்கு - வளைந்த, நிலா - பிறையை, இடுவார் - தரிப்பவருமாகிய சிவபெருமான், பற்று - பற்றுமிடமாகும்.

(கு - ரை.) பூம்பணைபாய் என்புழிப் பாய் - முந்தியது தன்வினைமேற்று; பிந்தியது பிறவினைமேற்று. நிலவிடுவார் என்பது நிலாவிடுவார் என நீட்டும்வழி நீட்டல். சடாடவி : தீர்க்கசந்தி; (சடா + அடவி). அரவிந்தம்-தாமரைப்பூக்கள்: ஆகுபெயர். (அ0)

கோற்றத் தகருங் குடிப்பிறந்த கோள்கையரும்
சேற்றத் தமர்வளர்க்குஞ் சிங்கையே—முற்றப்
பொறைக்கமடத் தோட்டார் புலன்போயென் னெஞ்சை
மறைக்கமடத் தோட்டார் மனை.

(ப - ரை.) கொற்றத்தகரும் - வெற்றி பொருந்திய ஆட்டுக்கிடாயும், செற்றத்து-கோபத்தோடு, அமர் வளர்க்கும் - போரை மிகுக்கின்ற, சிங்கை—; குடிப்பிறந்த-நற்குடியிற் பிறந்த, கொள்

கையரும்-(சுற்றந்தழுவும்) கொள்கையினையுடையாரும், செற்ற-நெருங்க, தமர் வளர்க்கும்-சுற்றத்தாரை வளர்க்கின்ற, சிங்கை—; முற்ற - முழுமையும், பொறை - சுமையாக, கமடத்து ஓட்டார் - ஆமையோட்டை யணிந்தவரும், புலன் போய் - ஐம்புலன்களும் சென்று, என் நெஞ்சை மறைக்க - எனது மனத்தை மறைக்க, மடத்து - அறியாமைகளில், ஓட்டார் - (என்னைச்) செலுத்தாத வருமாகிய சிவபெருமானது, மனை - வீடாகும்.

(கு - ரை.) கொற்றம் - வெற்றி. தகர் - ஆட்டுக்கிடாய்; செற்ற - நெருங்க; (செறு+அ). தமர் - சுற்றத்தார். திருமாலாகிய கூர்மத்தின் ஓட்டைப் பறித்து அதன் கொட்டத்தை யடக்கி அதன் ஓட்டைப் பதக்கமாக அணிந்து கொண்டாராதலின், 'கமடத் தோட்டார்' என்றார். ஐம்புலன்களாவன சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. மடத்து என்புழி அத்துச் சாரியை. மடம் - அறியாமை. இனி, யான் புலன்களின் வழியே சென்று மனத்தை மறைக்கும்படி அறியாமைகளில் என்னைச் செலுத்தாதவர் எனினுமாம். (௮௪)

எவ்வேந்தப் பூம்பொழிலு மீர்ங்குமுத நாண்மலரும்
செவ்வந்திப் போதலருஞ் சிங்கையே—அவ்வந்தி
பிட்டுக் கலந்தார் பெருநீர்ப் பழம்புவனத்
தட்டுக் கலந்தார் தலம்.

(ப - ரை.) எவ்வெந்த - எவ்வெவ்விடங்களிலும் உள்ள, பூ பொழிலும் - அழகிய சோலைகளும், செவ்வந்திப்போது - செவ்வந்திமலர், அலரும்-மலருகின்ற, சிங்கை—; ஈர் நாள் குமுத மலரும் - குளிர்ந்த புதிய செவ்வல்லி மலர்களும், செம் அந்திப் போது - சிவந்த மாலைக்காலத்தில், அலரும் - மலருகின்ற, சிங்கை—; அ வந்தி பிட்டுக்கு அலந்தார்-அந்த வந்தி யென்பாள் கொடுத்த பிட்டினுக்கு ஆசைப்பட்டவரும், பெருநீர் - கடல் சூழ்ந்த, பழம் புவனத்தட்டு-பழமையாகிய புவன அடுக்குகளில், கலந்தார் - சேர்ந்துள்ளவருமாகிய சிவபெருமானது, தலம்-இடமாகும்.

(கு - ரை.) எவ்வெந்த என்பது எந்தெந்த என்பதன் மரூஉ. மணிவாசகப்பெருமான்பொருட்டு வைகைக்கரை அடைக்க

நேர்ந்த ஞான்று, செம்மனச் செல்வியாகிய வந்தி என்பாளது பிட்டினுக்கு ஆசையுற்று, ஒட்டராய் வந்து அவள் கொடுத்த பிட்டினையுண்டவராதலான் 'அவ்வந்தி பிட்டுக்கலந்தார்' என்றார். பெருநீர் - கடல்: அன்மொழித்தொகை. (அஉ)

நீரகத்தே யுற்றாளு நீள்வணிகர் பொற்றோளும்
சீரகத் தார்மணக்குஞ் சிங்கையே—தாரகத்தை
அந்தத் தெனக்குனித்தா னன்பினுப தேசிப்பான்
தந்தத் தெனக்குனித்தான் சார்பு.

(ப - ரை.) நீரகத்து-பாற்கடலிலே, உற்றாளும்-தோன்றினவளாகிய இலக்குமியும், சீர் அகத்தார் - சிறப்புப் பொருந்திய வீட்டையுடையவர்களை, மணக்கும்-சேர்ந்திருக்கின்ற, சிங்கை—; நீள்-சிறந்த, வணிகர்-வணிகரது,பொன் தோளும்-அழகிய தோள்களும், சீரகம் தார் - சீரக மாலையை, மணக்கும் - தரிக்கின்ற, சிங்கை—; தாரகத்தை - தாரகமந்திரத்தை, அந்தத்து - சரம திசையில், உன்னி - (அடியேனை) நினைத்து, எனக்கு-எனக்கு, தான் அன்பின்-தான் அன்போடு, உபதேசிப்பான் - உபதேசிப்பவரும், தம்தத்தென-தம்தத்தென்னும் ஒலியொடு, குனித்தான் - நடஞ் செய்தவருமாகிய சிவபெருமான், சார்பு-சாருமிடம்.

(கு - ரை.) நீர்அகம் அத்து-நீரைத்தன்னிடத்துடையது; அன்மொழியாய்க் கடலையுணர்த்திற்று. அத்து: சாரியை. நீரகத்துற்றாள் என்ற குறிப்பினால் பாற்கடலையுணர்த்திற்று. உற்றாள்: இலக்குமி. சீர் அகத்தார் என்புழி, அகம்: வீடு; தூய்மையான மனத்தையுடையார் எனினுமாம். சீரக வடிவமாகப் பொன்னாற் செய்து மாலைபோலத் தொடுத்தணிதலின், 'சீரகத்தார்' என்றார். இவர்கட்குச் "சீரகத் தாமர்" எனப் பெயருண்மை யறிக. (அங)

ஈவதற்கன் பாம்வணிக ரில்லுமறி வோர்மனையும்
தீவகத்தின் சாந்தமுறுஞ் சிங்கையே—நோவறுத்தென்
பாடற் களிப்பான் பணித்ததிருத் தாள்வழுத்தும்
ஆடற் களிப்பா னகம்.

(ப-ரை.) ஈவதற்கு-(இரப்பவர்களுக்குக்)கொடுத்தற்கு,அன்பாம்-அன்பாயிருக்கின்ற, வணிகர் இல்லும்-வணிகருடைய வீடுகளும், தீவகத்தின் - தீவிலுள்ள, சாந்தம் - சந்தனக்கட்டைகள்,

உறும் - தங்குகின்ற, சிங்கை—; அறிவோர் மனையும் - அறிவாளி களுடைய வீடுகளும், தீவு-(பொறாமை) அழிந்த, அகத்தின்-மனத் தில், சாந்தம் உறும்-சாந்த குணத்தையுறுகின்ற,சிங்கை—; நோவு அறுத்து-(எனது)பிறவி நோயை ஒழித்து, என் பாடற்கு அளிப் பான் - எனது பாடலுக்கு (முத்தியை)அளிப்பவரும், பணித்த - (என்னைத்) தொண்டு செய்வித்த, திருத்தாள் - திருவடிகளை, வழுத்தும் - துதிக்கின்ற, ஆடல் - சொற்களைக்கேட்டு, களிப் பான் - மகிழ்பவருமாகிய சிவபெருமானது, அகம் - வீடாகும்.

(கு - ரை.) இனி, திருத்தாளால் (செய்கின்ற) ஆடலில் மகிழ்பவன் எனவும், வழுத்தும் என்பதை ஆடலுக்கு அடையா கக் கொள்ளுதலும் ஒன்று. (அ௬)

விந்தைக் கிணையாம் விறலியரு மெய்யறிவும்
சிந்தைச் சுகம்பயிற்றுஞ் சிங்கையே—முந்தைக்
கடவுண் மறைத்தலையார் காதலித்துத் தம்பால்
கடவுண் மறைத்தலையார் காப்பு.

(ப - ரை.) விந்தைக்கு இணையாம் - வீரலட்சுமிக்கு ஒப்பா கிய, விறலியரும்-பாடுவிச்சியரும், சிந்தை-சிந்து என்னுஞ் செய் யுளை, சுகம் - கிளிப்பிள்ளைக்கு, பயிற்றும்-பழகச் செய்கின்ற, சிங்கை—; மெய்அறிவும்-(அவரது) உண்மை யறிவும், சிந்தை - சிந்தையில், சுகம் - இன்பத்தை, பயிற்றும் - பயிலச் செய்கின்ற, சிங்கை—; முந்தை-முற்பட்ட, மறைக் கடவுள் - பிரமனது, தலை யார்-தலைமாலையுடையவரும், காதலித்து - விரும்பி, தம்பால்-தம் மிடத்து, கடவு - செலுத்துகின்ற, உள்-உள்ளத்தை, மறைத்து - (அஞ்ஞானத்தில்) மறைத்து, அலையார்-வருத்தாதவருமாகிய சிவ பெருமானது, காப்பு - காவலிடமாம்.

(கு - ரை.) சிந்தைச் சுகம் பயிற்றும் என்பதற்குச், சிந்து - (இசைக்குத் தோற்று) ஓடிய, ஐ - அழகிய, சுகம் - கிளிப்பிள்ளை கட்கு, பயிற்றும்-(அவ்விசையைப்)பயிற்றும் எனினுமாம். சிந்து தல் - ஈண்டு ஓடுதல் மேற்று. அலையார் - வருத்தார்: பிறவினை மேற்று. முந்தைக் கடவுண் மறைத்தலையார் என்பதற்கு (மும் மூர்த்திகளில்) முதலில் வைத்து எண்ணப்பட்ட கடவுளாகிய பிரமனது மறுக்கப்பட்ட (கிள்ளப்பட்ட) அழகிய தலையாகிய பிரம கபாலத்தையுடையார் எனலும் ஒன்று. மறுப்பொருந்திய இகழத்தக்க தலையுமாம். (அ௭)

ஆராயு முத்தமிழு மத்தமிழ்மந் தாநிலமும்
சீரா யசைநடைகூர் சிங்கையே—போரானை
வேகத் தசைத்தோன் மிடையு மிருளேறிப்ப
ஆகத் தசைத்தோ னகம்.

(ப - ரை.) ஆராயும்-(சங்கப் புலவர்களால்) ஆராயப்பட்ட, முத்தமிழும் - இயல், இசை, நாடகமென்னு மூன்று தமிழும், சீர்-(செய்யுளகத்து) சீரும், ஆய் அசையும் - நுணுக்கம் வாய்ந்த அசையும், நடைகூர் - (ஆற்றொழுக்கு முதலிய) ஒழுக்கமிக்க, சிங்கை—; அ தமிழ் மந்தாநிலமும் - (பொதிய மலையின்கண்) அத்தமிழொடு பிறந்த தென்றற்காற்றும், சீராய் - சிறப்பாய், அசை - அசைகின்ற, நடைகூர் - நடைமிக்க, சிங்கை—; வேகம்-வேகத்தையுடைய, போர் ஆனை - போர்த் தொழிலையுடைய யானையினது, தசைத்தோல் - தசை பொருந்திய தோலை, மிடையும் இருள் எறிப்ப - நெருங்கிய இருள் பரவ, ஆகத்து - உடலில், அசைத்தோன் - போர்த்தவராகிய சிவபெருமானது, அகம் - வீடாகும்.

(கு - ரை.) தென்றற்காற்றினுக்கு மந்தாநிலம் எனப் பெயருண்மையின், 'சீராயசை நடைகூர்' என்றார். ஆனை : யானை என்பதன் மரூஉ. (அசு)

நாவிக் குழன்முடிக்கு நாரியரும் பல்லுயிரும்
சீவித் தளவளவுஞ் சிங்கையே—நாவிக்
களத்து விடக்கறுப்பார் காமியத்துப் போமேன்
உளத்து விடக்கறுப்பா ரூர்.

(ப - ரை.) நாவி குழல் - புனுகுபூசப் பெற்ற கூந்தலை, முடிக்கும் - (ஐம்பகுப்பாக) முடிக்கின்ற, நாரியரும் - மகளிரும், சீவி - கூந்தலைச் சீவி, தளவு - முல்லையை, அளவும் - வைத்து முடிக்கின்ற, சிங்கை—; பல் உயிரும் - பலவுயிர்களும், சீவித்து - (இடையே) அழியாது, அளவளவும் - கலந்து வாழ்கின்ற, சிங்கை—; களத்து - கண்டத்து, காவி - நீலோற்பலம் போல, விடம் கறுப்பார் - விடக் கறுப்பையுடையவரும், காமியத்து - இட்ட காமியத்து, போம் - போகும், என் உள்ளத்து - எனது எண்ணத்தினுலுண்டாகும், விடக்கு - ஊனை (பிறப்பை), அறுப்பார் - அறுப்பவருமாகிய சிவபெருமானது, ஊர்-ஊராகும்.

(கு - ரை.) விடக்கு - ஊன்; இலக்கணையாய்ப் பிறப்பை புணர்த்திற்று. இனி, என் உள்ளத்து இடக்கு அறுப்பார் - எனது மனத்திலுண்டான வருத்தத்தை யொழிப்பார் எனக் கோடலும் ஒன்று. அப்பொருட்கு, உளத்து இடக்கு என்பன "ஓடும்" என்னும் இலேசால் உடம்படு மெய்பெற்றுப் புணர்ந்தன என்க். (அஎ)

வன்னவிலைப் பாவையர்கை வாளுகிரு மாங்குயிலும்
சின்னவடு கோதியிடுஞ் சிங்கையே—மின்னவிரும்
வேணிபிணு கத்தான் விதிதலைமா லைச்சூல
பாணிபிணு கத்தான் பதி.

(ப - ரை.) வன்னம் - அழகிய, விலைப்பாவையர்-பரத்தையர்களது, வாள் கை உகிரும்-ஒளி பொருந்திய கைந் நகங்களும், சின்னம் - அடையாளமாக, வடு - தழும்புகளை, கோதியிடும் - (விடபுருடர்களுடைய உடலில்) கீறியிடுகின்ற, சிங்கை—; மா குயிலும்-மாமரத்தில் வசிக்கின்ற குயில்களும், சின்ன-சிறிய, வடு-மாம்பிஞ்சுகளை, கோதியிடும் - கிண்டியிடுகின்ற, சிங்கை—; மின் அவிரும் வேணி - மின்னலைப் போல விளங்குகின்ற சடையில், பின் - பின்னிய, நாகத்தான் - பாம்பையுடையவரும், விதிதலைமாலை - பிரமனது தலைமாலையையுடைய, சூல பாணி-சூலமேந்திய கையில், பிணுகத்தான்-பிணுகமென்னும் வில்லையுடையவருமாகிய சிவபெருமானது, பதி - ஊராகும்.

(கு - ரை.) வன்னம்-அழகு. ஆகுபெயராய்ச் செம்பஞ்சுக் குழம்பை உணர்த்தியது எனினுமாம். வாள் உகிர் - வாள் போன்ற நகம் எனினுமமையும். நிலப் பொலிவு தோன்ற 'மாங் குயில்' என்றார். (அஅ)

முந்துதவச் செய்கையரு மோய்குழலார் கைவிரலும்
சேந்துவரைத் தண்ணளிகூர் சிங்கையே—இந்து
முடிக்குத் தரித்தார் முனைவிசையன் போர்வில்
அடிக்குத் தரித்தா ரகம்.

(ப - ரை.) முந்து - முற்பட்ட, தவச் செய்கையரும் - தவச் செய்கையுடைய முனிவர்களும், செந்து வரை - எறும்பு முதலிய செந்துவரைக்கும், தண் அளி கூர்-குளிர்ந்த கருணை மிகுந்திருக்கின்ற, சிங்கை—; மொய்குழலார்-(வண்டுகள்)மொய்த்த கூந்தலை

தும்-முத்துக்களும், சீகரம் - அந்நதித் திவலையின், மா-பெருமை வாய்ந்த, மாலை ஒக்கும்-வரிசையை யொத்திருக்கின்ற, சிங்கை—; எகர் - ஒப்பற்றவரும், அனேக விதம் உடையார் - பலவித கோல முடையவரும், அன்பு செய்வார் தங்கள் - அன்பு செய்பவர்க ளுடைய, சினேகம்-சினேகத்தில், இதம் உடையார் - மனமகிழ்ச்சி யுள்ளவருமாகிய சிவபெருமான், சேர்வு - சேருமிடமாம்.

(கு - ரை.) சீகரம் - கடற்றிரை, இலக்குமீகரம், திவலை. (துளி). மாலை - பூமாலை, வரிசை. சீகரம்-ஆகுபெயராய்ப்பாற் கடலை யுணர்த்திற்று. இனி, இலக்குமீகரம் பொருந்தியபெருமை வாய்ந்த திருமால் எனலும் ஒன்று. திருமால் காத்தற்றொழிலினால் கருணையுடையராதலானும், அவர்க்குப் 'புருஷோத்தமன்' எனப் பெயருண்மையானும் உவமை கூறப்பட்டனர். பலவித கோல முடையவர் என்றது சிவமூர்த்தி பக்தாநுக்கிரக காரணமாகச் சகளீகரித்த அறுபத்துநான்கு அவசரங்களை. அவை இலிங்கம், இலிங்கோற்பவம், முகலிங்கம், சதாசிவம், மகா சதாசிவம், உமா மகேசம் முதலாயின. காஞ்சிப் புராணத்திற் கூறிய இருபத் தெட்டு முகூர்த்தங்களுமாம். (௩௨)

பொன்னியலார் நெற்றியுந்தென் புள்ளு மிசைதெரிவான்
சென்னியரைத் தண்மதிசேர் சிங்கையே—உன்னிமனத்
தின்பாவ மாற்றிஞ னெய்துகதி யெய்தவணி
கன்பாவ மாற்றினன் காப்பு.

(ப - ரை.) பொன் இயலார் நெற்றியும் - இலக்குமியை யொத்த பெண்களது நெற்றியும், இசை தெரி - ஒலிகாணப்படு கின்ற, வான் சென்னி-ஆகாயத்தின்மீதுள்ள, தண் அரைமதி - குளிர்ந்த எண்ணாட்பிறையை, சேர் - ஒத்திருக்கின்ற, சிங்கை—; தென் புள்ளும் - இசைபாடுகின்ற கின்னரப் பறவையும், இசை தெரிவான் - இசையைக் கேட்கும் பொருட்டு, சென்னியரை - பாணரை, தண்மதிசேர் - குளிர்ந்த அறிவோடு சேர்கின்ற, சிங்கை—; மனத்தின் உன்னி-மனத்தில் நினைத்து, பாவம் ஆற்றி ஞன்-(தன்னையே) எண்ணினவராகிய இயற்பகைநாயனர், எய்து கதி எய்த - எய்துகின்ற கதியை அடைய, வணிகன் - அந் நாயன ரது, பாவம் பாவத்தை, மாற்றினன் - ஒழித்தவராகிய சிவபெரு மானது, காப்பு - காவலிடமாகும்.

(கு - ரை.) அரைமதி என்றது எண்ணுட்பிறையை; (அட்டமிச் சந்திரனை). தென்-இசை. சென்னியர்-பாணர். குளிர்ந்த அறிவாவது மகிழ்ந்தமனமாம். பாவம் - எண்ணம், பாவம். இயற்பகை நாயனுர் வணிகர் குலத்தவராதலின் 'வணிகன்' என்ருர். இது சுட்டாய் நின்றது. (கூங)

அக்கங் கறுத்தவர்கற் றைக்குழலிற் புத்தியிற்சேர்
சிக்கங் கறுத்துவிடுஞ் சிங்கையே—மைக்கனம்போய்ச்
சாயுச்சி யந்தருவார் தண்போருந்தத் தாரேனக்குச்
சாயுச்சி யந்தருவார் சார்பு.

(ப - ரை.) அக்கம் கறுத்தவர் - கண்கள் (மைதீட்டுதலால்) கறுத்த மகளிரது, கற்றைக் குழலில் - கற்றையாகிய கூந்தலில், சேர் - சேர்ந்த, சிக்கம் – சீப்பு, கறுத்து விடும் - கறுத்து விடுகின்ற, சிங்கை—; புத்தியில் - (அம் மகளிரது) அறிவில், சேர் சிக்கு - சேர்ந்த (மனச்)சிக்குகளை, அங்கு அறுக்கும்-அவ்விடத்து ஒழித்து விடுகின்ற, சிங்கை—; மைக்கனம் - கரிய மேகங்கள், போய் சாய் - போய்ப் படிகின்ற, உச்சி அம் தரு ஆர் - உச்சியை யுடைய அழகிய தருக்கள் பொருந்திய, தண் பொருந்தத்தார் - குளிர்ந்த பொருநை நதியை யுடையவரும், எனக்கு - அடியேனுக்கு, சாயுச்சியம் தருவார் - சாயுச்சிய பதவியைத் தருபவருமாகிய சிவபெருமானது, சார்பு - சாருமிடமாகும். (கூச)

(கு - ரை.) அக்கம் என்புழி அம் சாரியை. பொருந்தம் - பொருநை. உச்சி ஈண்டுத் தலையை யுணர்த்திற்று; உச்சியை யுடைய தரு என்க.

பார்த்திக்கி லுள்ள பலதலமு முக்களவும்
சீர்த்திக் களவுபடுஞ் சிங்கையே—மூர்த்திக்கு
மானமோழிங் தார்க்கு வடநிழற்கீழ் வந்திருந்து
ஞானமோழிங் தார்க்கு நகர்.

(ப - ரை.) பார் திக்கில் உள்ள-பூமியின் திசைகளிலுள்ள, பலதலமும் - பல சிவஸ்தலங்களும், கீர்த்திக்கு - மிகு புகழுக்கு, அளவுபடும் - ஓரளவு படுகின்ற, சிங்கை—; முக்களவும் - மூன்று களா விருட்சங்களும், சீர் திக்கு -(தமது) மிகு புகழானது

திக்குகடோறும், அளவுபடும் - உண்டாகின்ற, சிங்கை—; மூர்த்திக்கு - தம்வடிவத்தினிடத்து, மானம் ஒழிந்தார்க்கு - பெருமையிழந்த சனகர் முதலிய நால்வர்களுக்கும், வடகிழற்கீழ் - கல்லாலின் நிழலின்கீழ், வந்திருந்து - தங்கியிருந்து, ஞான மொழிந்தார்க்கு - ஞானப் பொருளை யுபதேசித்தவராகிய சிவபெருமானுக்கு, நகர் - நகரமாம்.

(கு - ரை.) முக்களவும் சீர் அளவுபடும் என்பது "சினை வினை முதலொடு செறியும்" என்னும் விதியால் கொள்க மூர்த்தி-வடிவம். மூர்த்திக்கு - வேற்றுமை மயக்கம். மானம் ஒழிந்தார் என்பதற்குத் தேகாபிமானம் இல்லாதவர் எனக்கோடலும் ஒன்று; அவர் சனகர் முதலிய நால்வர். இனி, ஆகுபெயராய்க் கொண்டு ஆன்ம பந்த மில்லாதவர் எனினும் அமையும். (சுரு)

பேர்த்தண் டமிழ்வரையும் பேரறமுஞ் சேர்ந்துகலி
தீர்த்தங் கொடுக்குமியற் சிங்கையே—ஊர்த்தம்
முயலு நடத்தினர் மூதண்டத் தெல்லாச்
செயலு நடத்தினர் சேர்வு.

(ப - ரை.) பேர் தண் தமிழ்வரையும் - பெரிய குளிர்ந்த பொதிய மலையும், சேர்ந்து-(தன்னிடத்துப்) பொருந்தி, கலி - ஒலிக்கின்ற, தீர்த்தம்-தீர்த்தங்களை, கொடுக்கும் - கொடுக்கின்ற, இயல் - இலக்கணமமைந்த, சிங்கை—; பேர் அறமும் - பெருமை வாய்ந்த தருமங்களும், சேர்ந்து - அடைந்து, கலி - துன்பத்தை, தீர்த்து - ஒழித்து, அங்கு ஒடுக்கும் - (அதனை) அவ்விடத்துத் தலையெடுக்காமற் செய்கின்ற, இயல்-இயல்பையுடைய, சிங்கை—; ஊர்த்தம் முயலும் - ஊர்த்துவமாக முயலுகின்ற, நடத்தினர் - நடனத்தையுடையவரும், முதுமை அண்டத்து-பழைய உலகத்து, எல்லாச் செயலும் - பஞ்ச கிருத்தியங்களையும், நடத்தினர் - செய்வித்தவருமாகிய சிவபெருமானது, சேர்வு-சேருமிடமாகும்.

(கு - ரை.) ஊர்த்தம் - ஊர்த்துவம் என்பதன் சிதைவு. பஞ்ச கிருத்தியங்களாவன ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அனுக்கிரகித்தல். (சுசு)

காப்புவளைக் கையாருங் காலவளைக் குண்மடையும்
சீப்பினள கஞ்சேறிக்குஞ் சிங்கையே—கோப்புமுறைக்

குஞ்சிதத் தாளார் கொடும்பா தகர்குடியை
வஞ்சிதத் தாளார் மனை.

(ப - ரை.) காப்பு வளை கையாரும் - காப்பையும் வளையலையுமுடைய மகளிரும், சீப்பு - சீப்பை, இன் அளகம் - இனிய கூந்தலில், செறிக்கும் - நுழைத்து வாருகின்ற, சிங்கை—;கால - கால்வாய்களிலுள்ள, அளைக்குள் - மதகுகளிலுள்ள, மடையும்- மடைகளும், சீப்பின் - சீத்தலினால், அளகம் - நீரை, செறிக்கும்- சேர்க்கின்ற, சிங்கை—; கோப்பு முறை - கோவைப்பட்ட முறையினையுடைய, குஞ்சிதத்தாளர்-குஞ்சிதபாதத்தை யுடைய வரும், கொடும் பாதகர் குடியை - கொடிய பாதகர்களுடைய குடும்பத்தை, வஞ்சிதத்து-(அவர்கள் கொண்ட) வஞ்சகத்தினால், ஆளார் - ஆளமாட்டாதவருமாகிய சிவபெருமானது, மனை - வீடாகும்.

(கு - ரை.) செறிக்கும் - காரணத்தைக் காரியமாக வுபசரித்தல். கோப்பு முறை என்றது மத்தளமுதலிய வரிசைகளின் முறையை. குஞ்சிதம் - வளைவு. வஞ்சிதத்து என்புழி அத்துச் சாரியை, வஞ்சிதம் என்பது வஞ்சகம் என்பதன் மரூஉ. (கூஎ)

காப்பாயர் தோளிணையுங் காந்தளில்வீழ் வண்டினமும்
சேப்பாய் மருப்பொசிக்குஞ் சிங்கையே—காப்பாய
சற்பப் படலையார் தம்படிவ மாம்பவள
வெற்பப் படலையார் வீடு.

(ப - ரை.) காப்பு - (நிரை) காத்தலையுடைய, ஆயர் - இடையர்களுடைய, தோள் இணையும் - இரண்டு தோள்களும், சே - இடபத்தினது, பாய் மருப்பு - பாய்கின்ற மருப்பை, ஒசிக்கும் - ஒடிக்கின்ற, சிங்கை—; காந்தளில் - செங்காந்தளில், வீழ் வண்டினமும் - வீழ்கின்ற வண்டின் கூட்டங்களும், சேப்பாய் - செவ்வையாய், மரு - வாசனையை, பொசிக்கும் - உண்ணுகின்ற, சிங்கை—; காப்பாய - கங்கணமாய, சற்பப் படலையார் - பாம்புமாலையை யுடையவரும், தம்படிவமாம்-தமது வடிவமாகிய, பவள வெற்பு - பவள மலையில், அப்பு - அப்பிய, அடலையார் - சாம்பலையுடையவருமாகிய சிவபெருமானது, வீடு- வீடாகும்.

(கு - ரை.) மருப்பு - கொம்பு. படிவம் - வடிவம். சேப்பு-சிவப்பு என்பதன் மரூஉ; இது செம்மை மேற்று. சர்ப்பம் என்பது எதுகை நோக்கிச் சற்பம் என்றாயது. படலை - மாலை, நீறு பூத்த பவளம்போன்ற மேனியராதலின், 'பவள வெற்பப் படலையார்' என்றார். இதனை "நீறணிந்த கடவுணிறத்தவான்" என்பதனாலறிக. (கஅ)

பாண்டிக் குலவலியிற் பல்கடவு ளாலயத்தில்
சேண்டிக் குரனவிலுஞ் சிங்கையே—வேண்டியெனை
ஆழி மலையவெற்பா ராக்கையடா தாண்டுகோண்ட
வாழி மலையவெற்பார் வாழ்வு.

(ப - ரை.) பாண்டிக்குல வலியில்-பாண்டியர் குலத்தாரது வலியினால், சேண்திக்கு - அதிதூரம் வரைக்கும், உரன் நவிலும்-(அவரது) வலிமையை எடுத்துப் பேசுகின்ற, சிங்கை—; பல் கடவுள் ஆலயத்தில்-பல தேவாலயத்தில், சேண்டி-சேமக் கலத் தினது, குரல் - ஒலி, நவிலும் - முழங்குகின்ற, சிங்கை—; எனை வேண்டி - என்னை விரும்பி, ஆழி - பிறவிக் கடலில், மலைய - வருத்த, எற்பு ஆர் யாக்கை - எலும்பு நிறைந்த உடலை, எடாது - எடாமல், ஆண்டுகொண்ட - அடிமைகொண்ட, மலைய வெற்பார் - பொதிய மலையை யுடையவராகிய சிவபெருமான் வாழ்வு - வாழுமிடமாம். (கக)

குறிப்பு:—இந்நூலில் ஒரு செய்யுள் கிடைக்கப் பெறவில்லை.

சிங்கைச்சிலேடை வெண்பா முற்றிற்று.

———

கழக வெளியீடு : கஅஅ

தொட்டிக்கலை

சுப்பிரமணியத் தம்பிரான்

இயற்றிய

# கலைசைச் சிலேடை வெண்பா

தமிழ்ப் பண்டிதர்

சென்னை திரு கொ இராமலிங்கத் தம்பிரான்

அவர்கள் உரையுடன்

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.

திருநெல்வேலி-6. : : சென்னை-1.

1968

# முன்னுரை

இது கலைசையில் எழுந்தருளிய சிவபெருமான்மீது சிலேடை வெண்பாக்களினுலாகிய நூல் என விரிதலின், மூன்று சொல் இரண்டு சந்தியாய்த் தொக்க அன்மொழித் தொகையாய் நூற்குக் காரணக் குறியாயிற்று. முன்னது ஏழாம் வேற்றுமைத் தொகையதாயும், பின்னது மூன்றும் வேற்றுமைத் தொகையதாயும் வந்த பன்மொழித் தொடரின்கண் நின்ற அன்மொழி.

இனி, கலைசையில் எழுந்தருளிய சிவபெருமானைப் பற்றிப் பாடிய சிலேடை வெண்பாவினுலாகிய நூல் எனப் பொருள் கூறி, இரண்டனுருபும் பொருளும் உடன்தொக்க தொகையோடு மூன்றனுருபும் பொருளும் உடன் தொக்க தொகையதாய் நின்ற அன்மொழித்தொகையாகக் கோடலும் ஒன்று.

சிலேடையென்பது ச்லேஷா என்னும் ஆரிய மொழியின்திரிபு. இங்ஙனம் வரல் தற்பவம். இதனைத் தமிழணி மரபுணர்ந்தார் பல்பொருட் சொற்ருெடரணியென்றும், வடநூலார் ச்லேஷாலங் கார மென்றுங் கூறுப. சிலேடை யென்பதன் பொருள் தழுவுத லுடையது என்பது. அஃதாவது உச்சரிப்பில் ஒரு தன்மைத்தாக நின்ற சொற்ருெடர் ஒன்றற்கு மேற்பட்ட பொருளைத் தழுவுதல். இந் நூலுட் கூறும் சிலேடைகள் பிரிமொழிச் சிலேடை எனப்படும். பிரிமொழிச் சிலேடையாவது ஒருவகையாக நின்ற சொல்லைப் பிரித்துத் தொகை வேறுபடுத்துப் பல பொருள்களாகக் கொள்ளுத லாம். இதில் இருமொழிச் சிலேடையும் மும்மொழிச் சிலேடையும் உண்டு. வெண்பாவாவது பாவகை நான்கனுள் ஒன்று. அவை வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பன. ஆயினும் இந் நூலுட் கூறப்படுவனவெல்லாம் நேரிசை வெண்பாக்களேயாம்.

நேரிசை வெண்பாவாவது, 'நான்கடியாய் இரண்டாமடியிறு திச்சீர் தனிச் சொல்லாய்வர, அடிமுழுதும் ஒரெதுகையாகவேனும்,

## முன்னுரை

முன்னிரண்டும் ஒரெதுகையும் பின்னிரண்டும் மற்றேரெதுகையு மாக வேனும் வரும். இனி, கலைசைச் சிலேடை வெண்பா என்பது தன்னுலாகிய நூற்காதலான் கருவியாகு பெயரெனவும் கொள்ளப் படும்.

கலைசை ஒரு திருப்பதி. இது தொண்டைநாட்டுத் திருப்பதி களில் ஒன்று. அஃது இடவாகுபெயராய், ஆண்டெழுந்தருளிய இறைவன் மேலாயிற்று. இது தொட்டிக்கலையென்றும் வழங்கப் படும். இது வைப்புத்தலம். இதில் எழுந்தருளிய சிவபெருமா னது திருநாமம் - சிதம்பரேசர். அம்மையார் திருநாமம் - சிவகாமி அம்மையார். இக்கோயிலுள் திராவிட மாபாடிய ஆசிரியராகிய சிவஞான யோகிகள் திருவுருவமைந்த கற்சிலை யொன்று உளது.

உ

திருச்சிற்றம்பலம்

# கலைசைச் சிலேடை வெண்பா

## காப்பு

**காப்பு** - காத்தல்; அஃது இங்குக் காக்கின்ற கடவுள் விஷய மான வணக்கத்துக்குத் தொழிலாகு பெயராய்ப் பின்னர்க் காரிய வாகுபெயராய்க் காப்புச் செய்யுளை யுணர்த்திற்று. சைவ சமயி கள் யாதானும் ஒரு நூல் செய்யத் தொடங்குங்கால் முதலில் விநாயக வணக்கங் கூறுதல் மரபாதலால், இந் நூலாசிரியரும் ஆன்றோர் ஒழுக்கத்தின்படி காப்புச் செய்யுளில் விநாயக வணக் கங் கூறினர். இங்ஙனங் கூறுதல் யாதுக்கெனின், தாம் தொடங் கும் நூல் இடையூறின்றி இனிது முடியுமென்பது கருதி.

> கார்மருவுஞ் சோலைக் கலைசைச் சிலேடைவெண்பாச்
> சீர்மருவக் கூறுந் திறம்வருமே—ஏர்மருவுங்
> கோதறுமுத் தோடைக் குளத்திருதாட் செங்கழுநீர்ப்
> போதகமேன் போதகத்தாம் போது.

(இதன் பொருள்.) ஏர் மருவும் - அழகுபொருந்திய, கோது அறு - குற்றமற்ற, முத்து ஓடை - முத்துக்கள் பதித்த நெற்றிப் பட்ட மணிந்த, குளத்து - நெற்றியையும், இருதாள் - இரண்டு திருவடிகளையுமுடைய, செங்கழுநீர்ப் போதகம் - செங்கழுநீர் விநாயக ரென்னும் இயற்பெயரையுடைய விநாயகக் கடவுள், என்போது அகத்து ஆம்போது - எனது தாமரைப் பூப்போன்ற மனத்தில் வந்து தோன்றுங் காலத்தில், கார் மருவும் - மேகங்கள் தவழும், சோலை கலைசை - சோலைகளையுடைய கலைசையில் எழுந்தருளிய சிவபெருமான்மீது கூறும், சிலேடை வெண்பா - சிலேடை வெண்பாவென்னும் இந் நூலை, சீர்மருவ - அழகு பொருந்த, கூறும் திறம் - (யான்) சொல்லும் வகை, வரும் - (எனக்கு) உண்டாகும்; (என்றவாறு).

(குறிப்புரை.) கார் மருவும்சோலை - மேக மண்டலத்தை யளாவிய சோலை எனினுமாம். கலைசை என்பது ஈண்டு இடவாகு பெயராய்ச் சிவபெருமானை யுணர்த்திற்று. சிலேடை வெண்பா - இரண்டு பொருளைத் தருகின்ற வெண்பா. கல்வி வன்மையால் ஒருவர்க்குப் பாடுந் திறமிருக்கினும் அஃது அருள்பெற்றோர் கவித்திறத்தினும் சீரியதன் றென்பார், ''சீர்மருவக் கூறுந் திறம் வரும்'' என்றார். இதனானே ஏனைய அத்துணைச் சிறந்தன அன்றாமெனப் போதரும்; ஈண்டுச் சீராவது சொன்னோக்கும் பொருள் நோக்கும் முதலாயினவாம். ஓடை - யானை நெற்றியில் அணியும் ஓர் ஆபரணம்; அது பட்டம். குளம்-நெற்றி. செங்கழுநீர்ப்போதகம் - செகங்ழுநீர் விநாயகர். போதகம் - யானை. இருதாள் என் அகத்து ஆம்போது கலைசைச் சிலேடை வெண்பா சீர் மருவக் கூறுந்திறம் வரும் என அந்வயம் கூறினும் அமையும். அதற்கு 'இருதாட் செங்கழுநீர்ப் போதகம்' என்பது முன்பின்னாக வந்த ஆறும் வேற்றுமைத் தொகையாகக் கொள்க. குளத்து, அகத்து என்பனவற்றில் அத்துச்சாரியை யென்க. வருமே என்பதில் ஏ - அசை. 'ஓடைக்குளத்து இருதாள் செங்கழுநீர்ப் போதகம் என்போ தகத்தாம்போது' எனச் சாதுரியம்படக் கூறினார். (௧)

வட்டிக் கலைநீர் வடித்தமைப்போர் மன்னுதிருத்
தோட்டிக் கலைவெண்பாச் சொன்மாலை—கட்டிட
செங்கழுநீ ராம்பலிரு செந்தா மரைமலருந் [மேய்ச்
தங்கிடுமேன் னெஞ்சகத்தே தான்.

(இ - ள்.) இக்கு அலைநீர் வடித்து - கரும்பை ஆலையில் (வைத்து) அதன் சாற்றினைப் பிழிந்து, வட்டு அமைப்போர் மன்னு - (காய்ச்சி) வெல்ல வட்டாகச் செய்பவர் நிலைபெற்றிருக்கின்ற, திரு - அழகுவாய்ந்த, தொட்டிக்கலை - தொட்டிக்கலை யென்னுந் திருப்பதியில் எழுந்தருளிய இறைவனுக்கு, சொல் வெண்பா மாலை-சொல்லப்படும் வெண்பாவாலாகிய பாமாலையை, கட்டிட - அணிய, மெய் - உண்மைவாய்ந்த, செங்கழுநீர் ஆம்பல் - செங்கழுநீர் யானையாகிய விநாயகக் கடவுளின், இரு செந்தாமரை மலரும் - செந்தாமரை மலரையொத்த திருவடிகள் இரண்டும், என் நெஞ்சகத்தே தங்கிடும் :— (எ - று.)

(கு - ரை.) இரு செந்தாமரை மலரும் - இரண்டு திருவடித் தாமரைகளும்; உவமையாகுபெயர். உம்மை:முற்றும்மை, நெஞ்சகம் - மனத்தில், அத்து : சாரியை, ஏ : பிரிநிலை. தான் :

அசை, தான்-தேற்றப் பொருளாயின் ஏகாரம் அசையாம். மாலை கட்டிடச் செங்கழுநீர்மலர், ஆம்பல்மலர், செந்தாமரைமலர் என் னெஞ்சகத்துத் தங்கிடும் என வேறுபொருளும் உண்மை காண்க. (உ)

## நூல்

நீருலவும் பூமகளு நெட்டகழின் வார்புனலுங்
காருணிய மீதூர் கலைசையே—ஏருலவுந்
தண்டரங்க மாலையார் தாங்குமுடி யார்வரைக்கோ
தண்டரங்க மாலையார் சார்பு.

(இ - ள்.) நீர் உலவும் - நீரில் விளங்குகின்ற, பூமகளும் - தாமரையிற்றங்கிய அலைமகளும், கலைமகளும், காருணியம் மீதூர் - அருள் மேம்படுகின்ற, கலைசை—; நெடு அகழின் - நீண்ட அகழியிலுள்ள, வார்புனலும் - மிகுந்த நீரையும், கார் - மேக மானது, உண்ணிய - உண்ணும்பொருட்டு, மீது ஊர் - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற, கலைசை—; ஏர் உலவும் - அழகு விளங்குகின்ற, தண்தரங்கம் மால் ஐ - குளிர்ச்சிபொருந்திய பாற்கடலிற் பள்ளி கொள்ளும் திருமாலுக்குத் தலைவரும், ஆர்தாங்கு முடியார் - ஆத்திமாலை யணிந்த முடியையுடையவரும், வரைகோதண்டர் - மேருமலையை வில்லாகவுடையவரும், அங்கமாலையார்-என்பு மாலை யுடையவருமான சிவபெருமான், சார்பு-சார்ந்திருக்குமிடம்;

(கு - ரை.) மீதூர்தல் என ஒரு சொல்லாகக் கொண்டு நெருங்குதல் எனப் பொருள்கோடலும் ஒன்று. இனி, தண்டு அரங்கம் மால் ஐ எனப் பிரித்துத் தண்டாயுதத்தையுடைய திரு வரங்கத்தில் எழுந்தருளியுள்ள திருமாலுக்குத் தலைவர்; அன்றி யும், தண் தரங்க மாலையார் தாங்குமுடியார் என்பதற்குக் குளிர்ச்சி பொருந்திய கங்கையையும் ஆத்திமாலையையும் தாங்கு முடியார் எனக் கோடலும் ஒன்று; மாலை ஆர் என்பது ஆர் மாலை எனமாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது; (ஆர்மாலை - ஆத்தி மாலை). தரங்கம் - கங்கை; ஆகுபெயர். திருமகளின் கருணை செல்வமுடையராகச் செய்தலாலும், கலைமகளின் கருணை கல்வி யுடையராகச் செய்தலாலும் 'நீருலவும் பூமகளும் காருணியமீ தூர் கலைசை' என்றார்,
இதனை,

"நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்பொற்,
பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்"

எனவரும் சிந்தாமணிச் செய்யுளாலுணர்க. காருணியம் - கருணை. இரண்டாவது பொருளில் உணியவென விகாரப்பட்டு நின்ற உன்னிய என்பது செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். சார்பு - சாருமிடம்; ஆகுபெயராய் இடத்தை யுணர்த்திற்று. கலைசையே சார்பு என இயையும். (க)

மாதரணி குங்குமமும் வாளேந்து கையினருங்
காதமருக் கூருங் கலைசையே—போதலரும்
அங்கொன்றைத் தாரா ரறிந்துதமைப் போற்றுதார்க்
கங்கொன்றைத் தாரா ரகம்.

(இ - ள்.) மாதர் அணி குங்குமமும் - பெண்கள் அணிந்த குங்குமக் குழம்பும், காதம் - காததூரம், மரு - வாசனை, கூரும் - மிகுகின்ற, கலைசை—; வாள் ஏந்து கையினரும் - வாளேந்திய கையையுடைய வீரர்களும், காது அமருக்கு ஊரும் - கொல்லு கின்ற போருக்குச் செல்லுகின்ற, கலைசை—; போது அலரும்- மலருங்காலத்தில் மலருகின்ற, அம் - அழகிய, கொன்றைத் தாரார் - கொன்றை மாலையையுடையவரும், தம்மை - சிவத்தை, அறிந்து - தெரிந்து, போற்றுதார்க்கு - துதியாதவர்க்கு, ஒன்றை- ஒப்பற்ற வீட்டுலகத்தை, தாரார் - தராதவருமாகிய பரமன், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) போற்றலாவது தாம் இனிப் பிறவாநெறியடை வான் வேண்டிய காரியத்தைச் செய்தல். "தோட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின்" என்றதும் இக் கருத்தேயாம். கொன்றை: ஆகுபெயர். ஒன்று ஆகுபெயராய் முத்தியை யுணர்த்திற்று. (உ)

வாஞ்சைதரும் பைங்கிளியு மாங்குயில்போல் வார்த்தைய
காஞ்சியிடை யார்க்குங் கலைசையே—ஆஞ்சலத்தால் [ருங்
வெற்றிமதிக் கண்ணியான் வீயாம லாண்டவருள்
வெற்றிமதிக் கண்ணியான் வீடு.

(இ - ள்.) வாஞ்சை - விருப்பத்தை, தரும் - கொடுக்கும், பைங்கிளியும்-பசிய நிறத்தையுடைய கிளிப்பிள்ளைகளும், காஞ்சி யிடை - காஞ்சிமரத்தில், ஆர்க்கும் - ஆரவாரிக்கும், கலைசை—; மா குயில்போல் வார்த்தையரும் - மாமரத்துக் குயிலினது இசை போலும் இனிய இசைவாய்ந்த சொற்களையுடைய பெண்களும், காஞ்சி - எண்கோவைமணிவடத்தை, இடை - இடையில், ஆர்க்

கும் - கட்டும். கலைசை—; ஆம் சலத்தால் - உண்டாகிய வருத்தத்தால், யான் வெறு இ மதிக்கு - நான் வெறுமையான இந்த அறிவை, அண்ணி - அடைந்து, வீயாமல் - கெடாமல், ஆண்ட - அடிமை கொண்ட, அருள் - கிருபையையுடைய, வெற்றி - வெற்றி பொருந்திய, மதிக்கண்ணியான் - பிறை மாலையை யுடையான், வீடு - இடம்; (எ - று.)

(கு - ரை.) காஞ்சி - எண்கோவை மணிவடம் என்பதனை, "எண்கோவை காஞ்சி யெழுகோவை மேகலை, பண்கொள் கலாபம் பதினாறு - கண்கொள், பருமம் பதினெட்டு முப்பத்திரண்டு, விரிசிகை யென்றுணரற் பாற்று" என்பதனுணர்க. நிலப்பொலிவு தோன்ற 'மாங்குயில்' என்றார். மா - மாமரம். மதிக்கு : வேற்றுமை மயக்கம். (௩)

ஆவலுடன் பாவலரு மாறுகால் வண்டினமுங்
காவலரைச் சூழுங் கலைசையே—மேவும்
அரிவையம்பா கத்தா னரணொருமூன் றெய்தோன்
அரிவையம்பா கத்தா னகம்.

(இ - ள்.) ஆவலுடன் - ஆசையுடன், பாவலரும் - பாவில் வல்லவர்களாகிய புலவர்களும், காவலரை - காத்தலில் வல்லவர்களாகிய அரசரை, சூழும் - சுற்றியிருக்கின்ற, கலைசை—; ஆறு கால் வண்டு இனமும் - ஆறு கால்களையுடைய வண்டின்கூட்டமும், கா அலரை - சோலையிலுள்ள மலர்களை, சூழும் - ஆராயும், கலைசை—; மேவும் - விரும்பும், அரிவை - உமாதேவியாரை, அம் பாகத்தான் - அழகிய இடப்பக்கத்தி லுடையவனும், ஒருமூன்று அரண் - ஒப்பற்ற மும்மதில்களையுடைய திரிபுரத்தை, அரி - திருமாலை, வை அம்பு ஆக . கூரிய அம்பாகக் கொண்டு, எய்தோன் - எய்தழித்தவனுமான சிவபெருமான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) ஆராய்தலாவது இம் மலர் உண்ணும் தேனுடைத்து; இம்மலர் உண்ணுத் தேனுடைத்து என ஆய்தலாம். (௪)

இச்சைமட வார்தனமு மீட்டறத்தி னோர்தனமுங்
கச்சங் கடக்குங் கலைசையே—மேச்சிவட
ஆலமருந் தண்ண லறுகணிவோன் வந்தெழுந்த
ஆலமருந் தண்ண லகம்.

(இ - ள்.) இச்சை - காமத்தை விளைக்கின்ற, மடவார் தனமும் - பெண்களினது தனமும், கச்சு அங்கு அடக்கும் - கச்சினை யங்கே யடக்கும், கலைசை—; அறத்திஞேர் ஈட்டு தனமும் - தருமசீலர்கள் அறத்தின்வழியால் தேடிய பொருளும், கச்சம் கடக்கும் - அளவைக் கடக்கும், கலைசை—; மெச்சி - விரும்பி, வட ஆல் அமரும் - வடவால மரத்தடியில் எழுந்தருளும், தண் நல் அறுகு அணிவோன் - குளிர்ச்சியையுடைய நல்ல அறுகம்புல்லைச் சூடியவனும், வந்து எழுந்த - (திருப்பாற்கடலைக் கடைந்த பொழுது) தோன்றி எழுந்த, ஆலம் அருந்து அண்ணல் - விடத்தை யுண்ட பெருமானும் ஆகிய சிவபெருமான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) இச்சை மடவார் - இச்சையை விளைக்கின்ற பெண்கள். மடம் - இளமை, அழகு. 'அறத்திஞேர் ஈட்டு தனம்'-என்பது "தவத்தளவே யாகுமாந் தாம்பெற்ற செல்வம்" என்பதோ டியைந்தது. அண்ணல் - பெருமையிற் சிறந்தவன். (ரு)

நாவலர்தம் புத்திரரு நண்ணும் பிரமரமுங்
காவியங்க ளாயுங் கலைசையே—தூவெள்ளைக்
கோட்டுக் குழையார் கொழுங்கயற்கண் மெல்லியலாங்
கோட்டுக் குழையார் குடி.

(இ - ள்.) நாவலர் தம் புத்திரரும் - புலவர்களுடைய பிள்ளைகளும், காவியங்கள் - காப்பியங்களை, (தொடர்நிலைச் செய்யுள்களை), ஆயும் - ஆராய்ச்சி செய்யும், கலைசை—; பிரமரமும் வண்டுகளும், காவி நண்ணும் அம் கள் ஆயும் - நீலோற்பலத்தி லுள்ள அழகிய தேனைத் தெரிந்தெடுக்கும், கலைசை—; தூ வெள்ளை கோடு குழையார் - தூய்மையாகிய வெள்ளிய சங்கக் குண்டலத்தையுடையவரும், கொழும் கயல் கண் - வளவிய கயல் மீன்போலும் கண்களையுடைய, மெல்இயல் - மென்மைத் தன்மை வாய்ந்த, கோட்டுக்கு - பூங்கொம்பு போன்ற பெண்ணுக்கு, உழையார் - பக்கத்திருப்பவருமாகிய சிவபெருமான், குடி - குடியிருக்குமிடம்;

(கு - ரை.) அம் - அழகு, ஈண்டு இனிமை மேற்று. ஆய்தல் - தெரிந்தெடுத்தல். காவி அம் கள் ஆயும் - சோலையில் மலர்களின் புதிய மதுவை யுண்ணும் எனினுமாம். வீ - மலர்; வி எனக் குறுகியது. அம் - புதுமை. பெண் - ஈண்டு உமாதேவி. இனி, உமாதேவியை இடப்பக்கத்திலுடையவர் எனப் பொருள் கோடலும் ஒன்று. அப்பொருட்கு வேற்றுமை மயக்கம். (சு)

தண்ணார் பொழிற்சுரும்புந் தத்தைமொழி யார்கதுப்புங்
கண்ணாடி வீழுங் கலைசையே—ஒண்ணாறும்
வான்முத் தலைவேலை மைக்கடுவுண் டோன்கரத்தில்
வான்முத் தலைவேலை வாழ்வு.

(இ - ள்.) தண் ஆர் - குளிர்ச்சிபொருந்திய, பொழில் - சோலையில், சுரும்பும் - வண்டுகளும், கள் நாடிவிழும் - (மலரிலுள்ள) தேனை விரும்பி (அதன்மேல்) விழுகின்ற, கலைசை—; தத்தை மொழியார் - கிளிமொழிபோலும் மொழியினையுடைய பெண்களின், கதுப்பும் - கன்னமும், கண்ணாடிவீழும் - கண்ணாடியை யொக்கும், கலைசை—; ஒண்மை நாறும் - மிகுதியாகத் தோன்றும், வால் முத்து - ஒள்ளிய முத்துக்களை, அலை - (கரையில்) ஒதுக்கும், வேலை மை கடு உண்டோன் - பாற்கடலில் தோன்றிய கரிய விடத்தை யுண்டவனும், கரத்தில் - கையில், வான் முத்தலைவேலை - சிறந்த மூன்று தலைகளையுடைய சூலப் படையைத் தாங்கிய கடவுளுமான சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) கள் நாடி வீழும் - தேனைத்தேடி விரும்பும், தத்தை - கிளி; பெயர்த்திரிசொல். கதுப்பு - கன்னம். வீழ்தல்-ஒத்தல். ஒண்ணூரும் என்று பாடங்கொளின், ஒளிபொருந்திய என்க. அலைவேலை - அலைக்கின்ற கடல்: வினைத்தொகை. (எ)

பொற்புரிசை நீள்கொடியும் போர்வயவர் திண்புயமுங்
கற்பகமே லோங்குங் கலைசையே—எற்புருக
நந்தாண்ட வத்த னளினத்தன் வீழ்ந்திறைஞ்சும்
நந்தாண்ட வத்த னகர்.

(இ - ள்.) பொன் புரிசை நீள் கொடியும் - பொன்மயமான மதிலிலுள்ள நீண்டகொடிகளும், கற்பகம்மேல் ஓங்கும் - கற்பகத்தின்மீது உயர்ச்சியுற்றிருக்கும், கலைசை—; போர் வயவர் திண் புயமும் - யுத்தவீரர்களின் வலிய புயங்களும், கல் பக மேல் ஓங்கும் - கல்லும் பிளவுபட மேன்மையொடு வளரும், கலைசை—: என்பு உருக - எலும்புமுருக, நந்து ஆண்ட அத்தன் - சங்கை ஆட்சிகொண்ட கையையுடையவனாகிய திருமாலும், நளினத்தன் - பிரமனும், வீழ்ந்து இறைஞ்சும் - விழுந்து வணங்கும், நம் தாண்டவத்தன் - நமது நடனத்தையுடையவன், நகர் - ஊர்; (எ - று.)

(கு - ரை.) வயம் - வீரம். என்பு உருக என்பது எற்புருக என்றாயது - புணர்ச்சிவிதி. ஈண்டு இழிவு சிறப்பும்மை விகாரத் தாற் றொக்கது. நளினம் - தாமரை. இந்நூலாசிரியர் சைவராத லின், 'நம்' என உரிமை பாராட்டினர். (அ)

சிந்து மதமாவுந் தேனுகர்மா வும்பூவிற்
கந்தங் கலைக்குங் கலைசையே—தந்தாட்
குருக்கங் கணத்தினா னுற்றிடச்செய் தோன்பாம்
புருக்கங் கணத்தினா னூர்

(இ - ள்.) மதம் சிந்து மாவும் - மதத்தைச் சிந்துகின்ற யானையும், பூவில் கந்து அங்கு அலைக்கும் - பூமியில் நாட்டிய கட் டுத்தறியை யங்குள்ள கூடத்தில் அசைக்கின்ற, கலைசை— : தேன் நுகர் - தேனையுண்ணும், மாவும் - வண்டுகளும், பூவில் கந்தம் கலைக்கும் - பூவிலுள்ள வாசனையைக் கலைத்துவிடுகின்ற, கலைசை—; தம் - தம்முடைய, தாட்கு - திருவடிகட்கு, உருக்கம் கணத்தில் நான் உற்றிட - அன்பைக் கணப்பொழுதில் யான் அடையும்படி, செய்தோன் - செய்தவனும், பாம்பு உரு கங்கணத்தினன் - பாம்பு வடிவமாகிய கங்கணத்தை யுடையவனுமாகிய சிவபெருமான், ஊர் - தங்குமிடம் ; (எ - று.)

(கு - ரை.) உரு - வடிவம். இனி, பாம்பாகிய அழகிய கங் கணத்தையுடையான் எனினுமாம். உரு - அழகு. மதமா - யானை. தேனுகர்மா - வண்டு. (௯)

வள்ளமுலை யார்விழியும் மைக்கா மதுகரமுங்
கள்ளம் பயிலுங் கலைசையே—உள்ளவலம்
போகத் திருந்தார் புரமெரித்தார் தேவியொடும்
போகத் திருந்தார் புரம்.

(இ - ள்) வள்ளம் முலையார் விழியும் - கிண்ணத்தை யொத்த தனங்களையுடைய பெண்களின் கண்களும், கள்ளம் பயிலும் - களவினைப் பழகும், கலைசை—; மை - மேகம் பொருந் திய, கா - சோலைகளிலுள்ள, மதுகரமும் - வண்டுகளும், கள் அம்பு அயிலும் - தேனாகிய நீரையுண்ணும், கலைசை—; உள்ள வலம் போக- இருக்கின்ற வலிமை கெடும்படி, திருந்தார் - பகை வர்களாகிய திரிபுரர்களுடைய, புரம் - திரிபுரத்தை, எரித்தார் - சிரித்து அழித்தவரும், தேவியொடும் - உமாதேவியுடன்

போகத்து - போகத்தில், இருந்தார் - இருந்தவருமாகிய சிவபெரு மான், புரம் - நகர். (எ - று.)

(கு - ரை.) மதுகரம் - வண்டு, தேனைச் சேர்ப்பது என்பது பொருள். அயிலுதல் - சிறுகச்சிறுக உண்ணுதல். (௧0)

வான்மிசையே றும்பொழிலு மானார் குழலுமலர்க்
கான்மணந்து வக்குங் கலைசையே—மேன்மைதரும்
பாலத் திருக்கழலார் பண்டிருவர்க் காடியகா
பாலத் திருக்கழலார் பற்று.

(இ - ள்.) வான்மிசை - ஆகாயத்தினிடத்து, ஏறும் - அளாவும், பொழிலும்-சோலைகளும். மலர்-மலரில், கான் மணம்-மிக்க வாசனையை. துவக்கும் - வீசத்தொடங்கும், கலைசை—; மானார் குழலும் - பெண்களின் கூந்தலும், மலர் கால் மணந்து உவக்கும் - மலர்க்கு இடமாகக் கலந்து மகிழப்பெறும், கலைசை—: மேன்மை தரும் - பெருமை பொருந்திய, பாலம் திருக்கு - நெற்றிக்கண், அழலார் - அக்கினியாகவுடையவரும், பண்டு - முற்காலத்து, இருவர்க்கு - பதஞ்சலி வியாக்கிரபாதர் என்னும் முனிவர் இருவர் கட்கும், ஆடிய - ஆடியருளிய, காபாலம் திருகழலார் - காபால மென்னும் கூத்தைச் செய்கின்ற சிறந்த பாதத்தையுடையவரு மான சிவபெருமான், பற்று - விரும்பியிருக்கும் இடம்; (எ - று).

(கு - ரை.) வான் - மேகமுமாம். கான்மணம் : ஒருபொருட் பன்மொழி. மலர்மணம் கால் துவக்கும் எனக்கொண்டு மலர் களின் வாசனையைக் காற்றால் வெளிப்படுத்தும் என்றுமாம். மானார் - மானின் பார்வை போன்று மருட்சிவாய்ந்த பார்வையினை யுடைய பெண்கள்; ஒப்பால் வந்த பெயர். பாலத்திருக்கழலார் என்பதைப் பாலம் அழல்திருக்கார் என்று விகுதி பிரித்து நெற் றியில் நெருப்புக் கண்ணையுடையவர் என்று பொருள்கோடலும் ஒன்று. காபாலம் - சிவபெருமான் கூத்து. (௧௧)

பாயாத மானாரைம் பாலும் பசுந்தோளுங்
காயாவே யொக்குங் கலைசையே—ஏய்புலித்தோல்
அம்பரவ னானை னணிவலைகோண் டங்கொருநாள்
அம்பரவ னானை னகம்.

(இ - ள்.) பாயாத மானார் - பெண்களின், ஐம்பாலும் - ஐந்து பகுப்பையுடைய் கூந்தலும், காயா ஏ ஒக்கும் - காயாம் பூவையே யொத்திருக்கும், கலைசை—; பசும் தோளும் - அப்பெண்க

ளுடைய பசிய தோள்களும், காயா வேய் ஒக்கும் - பச்சை மூங்கிலைப்போலப் பொருந்தும், கலைசை—; ஏய் - பொருந்திய, புலித் தோல் அம்பரவன் - புலித்தோலை யாடையாக வுடையவனும், ஆனன் - இடபவாகனத்தானும், அணிவலைகொண்டு அங்கு ஒரு நான் - அழகிய வலையைக் கையிற்கொண்டு மதுரையில் ஒருகாலத்தில், அம்பரவனானன் - அழகிய வலைஞனவனுமான சிவபெருமான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) பாயாத மான் - பெண், பறவாக் கொக்கு என்பதுபோற் குறிப்பாற் பொருளுணர்த்துவது. ஐம்பால் - பனிச்சை, குழல், கொண்டை, முடி, சுருள் என்பன. காயாவேய் - காயாத மூங்கில் எனவே பசிய மூங்கில். அம்பரம் - ஆடை, பரவன் - வலைஞன், இவ்வரலாறு திருவிளையாடற்புராணம் வலைவீசிய படலத்திற் காணப்படும். ஆன் - ஏறு, இடபம். காய்தல் - உலர்தல். (கஉ)

சேலார் செழுந்தடத்திற் செந்தா மரையினிற்றேன்
காலாறு பாயுங் கலைசையே—சூலேறு
பாணியார் வேணியார் பாகீ ரதியென்னும்
பாணியார் வேணியார் பற்று.

(இ - ள்.) சேல் ஆர்செழு தடத்தில் - சேல்மீன்கள் பொருந்திய செழுமையாகிய தடாகத்தில், தேன் கால் ஆறு பாயும் - தேனனது வாய்க்காலின் வழியாகப் பாயும், கலைசை—;செந்தாமரையினில் - செந்தாமரைப் பூவினில், தேன் காலாறு பாயும் - தேனைப் பருக வண்டுகள் குதிக்கும், கலைசை—; சூல் ஏறு பாணியார் - சூலாயுதம் தங்கிய கையையுடையவரும் வேணி ஆர் பாகீரதி - ஆகாயத்திற் பொருந்திய கங்கை, என்னும் - என்னப்படும், பாணி ஆர் வேணியார் - நீரையும் ஆத்திப்பூவையும் அணிந்த சடையையுடையவருமாகிய சிவபெருமான், பற்று - இடம்; (எ - று.)

(கு - ரை.) ஆர்தல் - பொருந்துதல், உண்ணுதலுமாம், கால் ஆறு - ஆறு கால்களையுடைய வண்டுகள்: அன்மொழி. சூல் - சூலம் என்பதன் கடைக்குறை. வேணி - ஆகாயம்; சடை. பாணி- நீர்; கை. ஆர்- ஆத்தி. (கங)

இது மும்மொழிச் சிலேடை

தாமரைவண் டுங்குளமுஞ் சார்விரகத் தாரிடமுங்
காமரம்பா டுஞ்சீர்க் கலைசையே—மாமதமா

**தங்க முரித்தார் தடங்கேழற் கோட்டினைச்சூர்**
**தங்க முரித்தார் தலம்.**

(இ - ள்.) தாமரை வண்டும் - தாமரைப் பூவிலிருக்கும் வண்டுகளும், காமரம் பாடும் - சீகாமரமென்னும் பண்ணைப் பாடும், சீர்க்கலைசை—; குளமும் - தடாகமும், காமர் அம்பு ஆடும் - அழகிய நீர் அசையும், சீர்க்கலைசை—; விரகத்தாரிடமும் - காமிகளிடத்தும், காமர் அம்பு ஆடும் - மன்மதனது பாணம் வருத்தும், சீர்க்கலைசை—; மா மதம் மாதங்கம் - கரிய மதம் பொருந்திய யானையை, உரித்தார் - உரித்தவரும், தட - பெரிய, கேழல் - திருமாலாகிய பன்றியின், கோட்டினை - கொம்பை, சூர்தங்க - அச்சமுற, முரித்தார் - முரித்தவருமாகிய சிவபெருமான், தலம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) தாமரை - தாமரை மலர்க்கு; முதலாகு பெயர். காமரம் - சீகாமரம் என்பதன் முதற்குறை; ஒரு பண்.

**மண்டமர்செய் யுங்களமும் வான்கரும்பை மள்ளருஞ்சேர்**
**கண்டகரச் சாடுங் கலைசையே—தொண்டர்**
**கணிச்சித் திருக்கையான் காதரத்தைத் தீர்க்குங்**
**கணிச்சித் திருக்கையான் காப்பு.**

(இ - ள்.) மண்டு அமர் செய்யும் களமும் - நெருங்கிப் போர் செய்யும் உயுத்தகளமும், சேர் - சேர்ந்த, கண்டகர் - பகைவரது, அச்சு - உடல், ஆடும் - அழியும், கலைசை—; மள்ளரும் - உழவர்களும், வான் கரும்பை - சிறந்த கரும்புகளை, சேர் கண் தகர சாடும் - பொருந்திய கணுக்கள் உடையும்படி முரிக்கும், கலைசை—; தொண்டர்கண் - அடியாரிடத்து, இச்சித்து - விரும்பி, இருக்கையான் - இருத்தலையுடையவனும், காதரத்தை - அவர் துன்பத்தை, தீர்க்கும் - போக்குகின்ற, கணிச்சி திரு கையான் - மழுவாயுத மேந்திய அழகிய கையையுடையவனுமான சிவபெருமான், காப்பு - காவலிடம்; (எ - று.)

(கு - ரை.) கண்டகர் அச்சு ஆடும் என்பதற்கு அசைந்த வாளுடைய வீரர்கள் உடல் அசையும் என்பதுமாம். அடும் என்பது ஆடும் என நீட்டல் விகாரம். (கடு)

**தொண்டைக் கனிவாயார் சொல்லு நயனமுந்தேன்**
**கண்டவியப் பண்ணுங் கலைசையே—தண்டமிழ்சேர்**
**வண்டணிகைச் சத்தியத்தன் வாரணத்த னத்தனித்தன்**
**வண்டணிகைச் சத்தியத்தன் வாழ்வு.**

(இ - ள்.) தொண்டைக் கனி வாயார் - கொவ்வைக்கனியை யொத்த வாயினையுடைய மகளிரது, சொல்லும் - சொற்களும், தேன் கண்டு - தேனையும் கற்கண்டையும், அவியப்பண்ணும் - (இனிமையிற்) கெடச்செய்யும், கலைசை—; நயனமும் - (அவர்கள்) கண்ணும், தேன் கண்ட வியப்பு அண்ணும் - வண்டைக்கண்ட வியப்பைப் பொருந்தும், கலைசை—; தண் தமிழ் சேர் - (மனக்) குளிர்ச்சியை யுண்டாக்கும் இனிமைபொருந்திய, வண் தணிகை - வளம்பொருந்திய தணிகாசலத்தில் எழுந்தருளிய, சத்தி அத்தன் - வேலையுடைய கையையுடைய முருகனுக்கும், வாரணத்தன் அத்தன் - யானைமுகனாகிய விநாயகனுக்கும் தந்தையானவனும், நித்தன் - அழியாதவனும், வண்டு அணிகை சத்தி அத்தன் - வளையலையணிந்த கையையுடைய உமாதேவியை அர்த்த பாகத்திலுடையவனும் ஆகிய சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) சத்தி அத்தன் - சத்திக்குத் தலைவன்; சத்தியை யுடைய செந்நிறமுடையான்; அத்தம் - சிவப்பு. பவளமேனியன் ஆதலால், "சத்தியத்தன்" என்றார். தேன்கண்டு : உம்மைத் தொகை; தேன் - தேன்வண்டு எனினுமாம். (கசு)

பன்மறைதேர் பூசுரரும் பாறுதலில் வாழ்க்கையருங்
கன்மந் திரஞ்செய் கலைசையே—முன்மதனார்
ஐயம் புதையா ரறிவகல வென்னுளத்தில்
ஐயம் புதையா ரகம்.

(இ - ள்.) பன்மறைதேர் - பலமறைகளையும் ஆராய்கின்ற, பூசுரரும் - பூதேவர்களாகிய பிராமணர்களும், கன்மம் - (தங்கட்குரிய) நித்தியகருமங்களை (நாட்கடன்களை), திரம்செய் - நிலையாகச் செய்கின்ற, கலைசை—; பாறுதல் இல் - கெடுதல் இல்லாத, வாழ்க்கையரும் - செல்வத்தினரும், கல்மந்திரம் செய் - கல்வீடுகளைக் கட்டிக்கொள்ளும், கலைசை—; முன் - முன்னர், மதனார் ஐ அம்புதையார் - மன்மதனது ஐந்து அம்புகளும் (தமது திருமேனியில்) தைக்கப் பெறாதவரும், அறிவு அகல - ஞானம் நீங்க, என் உளத்தின் - என் மனத்தில், ஐயம் புதையார் - சந்தேகத்தைப் புதைத்து வையாதவருமாகிய சிவபெருமான், அகம் - இடம்.

(கு - ரை.) வாழ்க்கையர் - இல்வாழ்க்கையருமாம். மந்திரம் - வீடு. மதனார் - ஆர் : இழிவுபொருட்டு. ஐ அம்பு ஆவன - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்னும் ஐந்து பாணமாம். (கஎ)

வல்லா ரிளமுலையார் வாள்விழியு நீள்வயலுங்
கல்லாரங் காட்டுங் கலைசையே—பொல்லாக்கா
மத்தகத்திற் கண்ணூர் மருவுவதற் கண்ணூர்
மத்தகத்திற் கண்ணூர் மனை.

(இ - ள்.) வல்ஆர் - சூதாடுகருவியை யொத்த, இளமுலை யார் - பெண்களின், வாள்விழியும் - வாளையொத்த கண்களும், கல் லார் அங்கு ஆட்டும் - கல்லாதவரை அங்கே அலைக்கும், கலைசை—; நீள்வயலும் - நீண்ட வயல்களும், கல்லாரம் காட்டும் - செங்கழுநீர் மலர்களைத் தோற்றுவிக்கும், கலைசை-; பொல்லா காமத்து அகத்தில் - கொடிய காமத்தினிடத்தில், கண்ணூர் மருவு தற்கு - கருத்துடையார் சேருதற்கு, அண்ணூர் - பொருந்தாத வரும், மத்தகத்தில் கண்ணூர் - நெற்றியிற் கண்ணையுடையவரு மான சிவபெருமான், மனை - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) வல்ஆர் என்புழி ஆர் - உவமவுருபு, கல்லாரம் காட்டும் - கல்லென்னும் ஒலிக்குறிப்போடு நீரைக் காட்டும் என வுங் கூறுவர். (கஅ)

கொந்துகுழற் கோல்வளையார் கொங்கையுநற் பாகருந்திண்
கந்துகத்தே ரோட்டுங் கலைசையே—சந்தணையுஞ்
செப்பினகி லத்தார் செழுமனையில் வந்திரந்தோர்
செப்பினகி லத்தாரின் சேர்வு.

(இ - ள்) கொந்து - பூங்கொத்துகளை யணிந்துள்ள, குழல் கூந்தலுடைய, கோல்வளையார் - புள்ளிகளையுடைய வளையல்களை அணிந்த மகளிர், கொங்கையும் - தனமும், திண் கந்துகத்து ஏர்- திண்ணிய பந்தின் அழகை, ஓட்டும் - ஓடச்செய்யும், கலைசை—; நல் பாகரும் - (சாரதித் தொழிலில்) வல்ல தேர்ப்பாகரும், திண் கந்துகம் தேர் ஓட்டும் - வலிய குதிரைகள் (பூட்டிய) தேரைச் செலுத்தும், கலைசை—; சந்து அணையும் - அழகு பொருந்திய, செப்பின் - செப்பினைப்போன்ற, நகிலத்தார்- கொங்கையையுடையார், செழுமனையில் - வளப்பமிகுந்த வீட் டில், வந்து இரந்தோர் - பிக்ஷாடனராக வந்து யாசித்தவரும், செப்பின் - சொல்லுமிடத்து, அகிலத்தாரின் - எல்லா முடைய வருமாகிய சிவபெருமானின், சேர்வு - சேருமிடம்; (எ - று).

(கு - ரை.) நகிலத்தார் என்றது தாருகவனத்து இருடிபத்தினிமார்களை. சிவபெருமான் தாருகவனத்து இருடிகளுடைய தவச்செருக்கை யடக்கப் பிக்ஷாடனராகக் கோலங் கொண்டன ரென்பது பழைய வரலாறு. நகிலம் - தனம், அத்து : சாரியை. நகில் எனவுங் கூறுப, கந்துகம் - பந்து, குதிரை, கோல்வளை - அழகிய வளை, கோலம் - அழகு, அம் : கடைக்குறை, கோல் - திரட்சியுமாம். சேர்வு - சேருமிடம்: ஆகுபெயர். இன் சேர்வு எனக்கொண்டு இனிய இடம் எனக் கூறலுமாம். சந்து - சந்தனமுமாம். (கக)

தேன்மருவும் பண்ணைகளுஞ் செல்வர் திருமனையுங்
கான்முளைகண் மாறாக் கலைசையே—வான்மே
விருப்பு வணத்தார்க ணேந்தடியார் காய்ந்த
விருப்பு வணத்தா ரிடம்.

(இ - ள்.) தேன் மருவும் - தேன் பொருந்தியிருக்கின்ற, பண்ணைகளும் - வயல்களிலும், கால்முளைகள் - தோன்றுகின்ற நெல்முளைகள், மாறா - நீங்காத, கலைசை—; செல்வர் திருமனையும்- செல்வர்களது அழகிய வீட்டிலும், கான்முளைகள் - புத்திரர்கள், மாறா - வேறாகாத, கலைசை—; வான் மேவு இருப்பு - ஆகாயத்திற் பொருந்தியிருத்தலையுடைய, உவணத்தார் - கருடனை வாகனமாகவுடைய திருமாலின், கண் ஏந்து அடியார் கண்ணையேந்திய திருவடியையுடையவரும், காய்ந்த இருப்பு வண்ணத்தார் - தீயிற் காய்ந்த இரும்பின் நிறம்போலும் சிவந்த நிறத்தவருமான சிவபெருமான் இடம்; (எ - று.)

(கு - ரை.) தேன் - இனிமையுமாம். கான்முளைகள் - நாற்றங்கால் முளைகள். மாறா - மாறாத: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். உவணம் - கருடன். உவணத்தார் கண் ஏந்தியது- திருமால் சுதர்சனம் என்னும் சக்கரத்தைப் பெறுதற்காக சிவபெருமானடியில் அன்புடன் ஆயிரந்தாமரை மலர்கொண்டருச்சித்தபொழுது ஒருமலர் குறைய அதற்கீடாகத் தம் மலர்க்கண்ணை யெடுத்துப் பூசித்தமையைக் குறித்தது. (உ0)

முத்துநகை யார்குழல்சேர் மொய்யளியும் வீரருநற்
கத்திகையிற் சுற்றுங் கலைசையே—மித்தையுறும்
வண்டருக்கப் பாலார் மறைப்பொருளா லவர்க்குரைத்த
வண்டருக்கப் பாலார் மனை.

(இ - ள்.) முத்து நகையார் - முத்தைப்போன்ற பற்களின் வரிசையினையுடைய பெண்களின், குழல் - கூந்தலில், சேர் - சேர்ந்துள்ள, மொய் அளியும் - நெருங்கிய வண்டினங்களும், நல் கத்திகையில் - (அவர்கள் கூந்தலில் அணிந்துள்ள) நல்ல மாலையில், சுற்றும் - சூழும், கலைசை—; வீரரும் - உயுத்த வீரர்களும், நல் கத்தி- கூரிய கத்தியை, கையில் சுற்றும் – கையில் வைத்துச் சுழற்றும், கலைசை—; மித்தை உறும் வண்டருக்கு - பொய்யை மேற்கொண்ட கீழ்மக்கட்கு, அப்பாலார் - எட்டாதவரும், மறைப்பொருள் - மறைகளின் உண்மையை, நால்வர்க்கு - சனகாதி முனிவர் நால்வர்கட்கு, உரைத்த - கூறிய, வண் தரு கப்பு ஆல் ஆர்- வளவிய கிளைகளையுடைய வடவால மரத்தின்கீழ் எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியுமான சிவபெருமான், மனை - இடம்; (எ - று.)

(கு - ரை.) வண் தருக்கப் பாலார் எனக் கொண்டு வளவிய தருக்கப் பகுதியையுடையார் எனவும், வளவிய ஆராய்ச்சியின்பாற் பட்டவரெனவும் பொருள் கூறுப. வண்டர் - மிண்டர். மறைப் பொருள் - தத்துவப் பொருள். நால்வர் - சனகன், சனந்தன், சனாதன், சனற்குமாரன் என்பவர். (உக)

திக்குலவுங் கண்ணாருஞ் சித்திரயாழ் வல்லோருங்
கைக்கிளைபா ராட்டுங் கலைசையே—மிக்க
திருமாதங் கத்துரியார் செம்பொனக மீன்ற
திருமாதங் கத்தூரியார் சேர்வு.

(இ - ள்.) திக்கு உலவும் கண்ணாரும் - நாலாபக்கங்களிலும் பரவிய பார்வையையுடைய பெண்களும், கை கிளை பாராட்டும் - கையிற் கிளியை வைத்துக் கொண்டாடும், கலைசை—; சித்திரம் - விசித்திரமான, யாழ்வல்லோரும் - வீணை வாசிப்பதில் வல்லவரும், கைக்கிளை - கைக்கிளையென்னும் இராகத்தை, பாராட்டும் - பலகாற் பாடும், கலைசை—; மிக்கு அதிரும் - அதிகமாக முழங்கும், மாதங்கத்து உரியார் - யானைத் தோலையுடையவரும், செம்பொன் நகம் ஈன்ற - செம்பொன்மலை (மலையரையன்) பெற்ற, திருமாது அங்கத்து உரியார் - அழகிய உமாதேவியைத் தமது இடப் பாகத்திலுடையவருமான சிவபெருமான், சேர்வு - சேருமிடம்; (எ - று.)

(கு - ரை.) சித்திரம் - விசித்திரம் என்பதன் குறையுமாம் சித்திரம் - பல நிறங்கொண்டது. கிளை - கிள்ளையின் இடைக் குறை; கிள்ளை . கிளி: பெயர்த்திரிசொல். கைக்கிளை பாராட்டும் என்பதற்கு ஒரு தலைக்காமம் எனலுமாம். யாழ்வல்லோர் கைக்

யாழ் பாராட்டும் என்பதற்குத் தங்கையால் நரம்பை உளர்த்தும் எனினுமாம். மாதங்கம் - யானை, உரி - தோல், (உஉ)

அச்சா னகியனையா ரங்கைகளுங் கோங்கைகளுங்
கச்சூர முந்துங் கலைசையே—நச்சாரக்
கண்டங் கறுத்தார் கரத்தைத்தீ யின்செருக்கைக்
கண்டங் கறுத்தார்தங் காப்பு.

(இ - ள்.) அச் சானகி அனையார் - (அழகில்) அந்தச் சீதையையொத்த பெண்களின், அம் கைகளும் - அழகிய கைகளும், கச்சூரம் உந்தும் - கழற்சிக்காயைச் செலுத்தும், கலைசை—; கொங்கைகளும் - அவர்கள் தனங்களும்; கச்சு ஊர முந்தும் - கச்சானது புடைபெயர மேற்படும், கலைசை—; நச்சு ஆர - விடம் பொருந்த, கண்டம் கறுத்தார் - கண்டத்திற் கருநிறம் வாய்க்கப் பெற்றவரும், தீயின் செருக்கை அங்கு கண்டு - அக்கினிதேவனது அகங்காரத்தைத் தக்கன் வேள்வியிற் கண்டு, கரத்தை அறுத்தார் - அவன் கையை அறுத்தவருமாகிய சிவபெருமான், காப்பு - காவலிடம்.

(கு - ரை.) வீரபத்திரக் கடவுளின் றொழிலை ஒற்றுமை நயத்தால் சிவபெருமான்பேரில் ஏற்றிக் கூறினர். கச்சூரம் - கழங்கு. கச்சு - முலைக்கட்டு. நச்சார என்பதற்கு நஞ்சையுண்ண எனலுமாம். நச்சு - நஞ்சு என்பதன் வலித்தல் விகாரம். (உங)

வம்பலர்தார் வேந்தர் மதகரியும் வாவிகளுங்
கம்பலையோ டூருங் கலைசையே - செம்பதுமத்
தானத்தன் றானத்தன் றங்கட் கிறைவனுசாத்
தானத்தன் றானத்தன் சார்பு.

(இ - ள்.) வம்பு - வாசனை பொருந்திய, அலர்தார் - மலரால் தொடுத்த மாலையையணிந்துள்ள, வேந்தர் மதகரியும் - அரசர்களின் மதம்பொருந்திய யானையும், கம்பலையோடு - முழக்கத்துடன், ஊரும் - (வீதியில்) செல்லும். கலைசை—; வாவிகளும் தடாகங்களும், கம்பு அலையோடு ஊரும் - சங்குகள் திரைகளுடன் தவழும், கலைசை—; செம்பதுமத்தான் - செந்தாமரை மலரில் வாழ்கின்ற பிரமன், நத்தன் - சங்கேந்திய திருமால், தானத்தன் - சொர்க்கலோகத்தையுடைய இந்திரன், தங்கட்கு இறைவன் - ஆகிய இவர்கட்குத் தலைவனும், உசாத்தானத்தன் - திருவுசாத்தான மென்னும் தலத்திலுள்ளவனும், அத்தன் - தலைவனுயுள்ளவனுமான சிவபெருமான், தான் - அவன், சார்பு - சார்ந்திருக்கும் இடம்; (எ - று.)

(கு - ரை.) கரி-யானை; கரத்தையுடையது எனக் காரணக்குறி. நந்து - சங்கு, பாஞ்சசந்நியம் என்னும் பெயருடையது. தானம் - தேவலோகம். (உச)

வேம்பாகி னின்மொழியார் மென்றோளுஞ் செவ்விதழுங்
காம்பீர மல்குங் கலைசையே-பாம்பார்
அகலத்தா னாண்டான்பெண் ணானேன் மம்மர்
அகலத்தா னாண்டா னகம்.

(இ - ள்.) வேம் பாகின் - வெந்த வெல்லப்பாகினை யொத்த, இன்மொழியார் - இன்சொல் வாய்ந்த பெண்களின், மென் தோளும் - மெல்லிய தோளும், ஈரம் காம்பு அல்கும் - பச்சை மூங்கிலை உருவத்திற் கீழ்ப்படுத்தும், கலைசை—; செவ்விதழும் - (அவர்கள்) சிவந்த அதரங்களும், காம்பீரம் - முருக்கம் பூவை, மல்கும் - ஒக்கும், கலைசை—; பாம்பு ஆர் அகலத்தான் - பாம்பை யணிந்திருக்கின்ற மார்பை யுடையவனும், தான் ஆண் பெண் ஆனான் - தானே ஆணும் பெண்ணும் ஆனவனும், என் மம்மர் அகல - எனது மயக்கம் நீங்க, ஆண்டான் - அடிமை கொண்டவனு மாகிய இறைவன், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) பாகின் - இன் ஒப்புப் பொருள், வேகும் என்பது வேம் என நின்றது. காம்பீர மல்கும் என்பதைக் காம்பு ஈர் அம் மல்கும் எனப் பிரித்து மூங்கிலைப் பிளக்கும் அழகு நிறைந்திருக் கும் எனலுமாம். தான் : அசை. (உரு)

மான்றமட வார்குழலும் வண்டரளஞ் சங்கினமுங்
கான்றங் கிவருங் கலைசையே—தேன்றங்
கருக்கங் கணியா ரறிவுடைமை யார்மெய்
யருக்கங் கணியா ரகம்.

(இ - ள்.) மான்ற மடவார் குழலும் - பெருமை பொருந்திய பெண்களின் கூந்தலும், கான் தங்கி வரும் - வாசனை தங்கப் பெற்று வீசும், கலைசை—; சங்கு இனமும் - சங்கின் கூட்டமும், வண் தரளம் - வளவிய முத்துக்களை, கான்று - கக்கி, அங்கு இவரும்-அங்கே உலாவும், கலைசை—; தேன்தங்கு - தேன் பொருந்திய, அருக்கம் கண்ணியார் - எருக்கம் பூமாலையை யுடையவரும், அறிவு உடைமை ஆர் - அறிவுடைமை பொருந்திய, மெய்யருக்கு - உண்மையடியவருக்கு, அணியார் - கிட்டினவருமான சிவபெரு மான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) அணிமையார் - ஈறு போதல் என்றதனால் அணி யார் என்றாயது. இனி, அண்ணியார் - சமீபத்துள்ளவர் எனினும் அமையும். அங்கு - அசை, மால் - பெருமை. கான் - மணம். தரளம்-முத்து. இவர்தல் - உலாவுதல். (உசு)

புண்ணியமெய்ப் பண்ணவரும் பொன்னனையார் பூங்குழ
கண்ணிவா சஞ்செய் கலைசையே—எண்ணியொரு [லும்
மன்னாக மத்தினன் வாரிகடைந் தோர்க்கிரங்கு
மன்னாக மத்தினன் வாழ்வு.

(இ - ள்.) புண்ணிய மெய் பண்ணவரும் - புண்ணியத்தாற் கிடைத்த தேகத்தையுடைய தேவர்களும், கண்ணி - கருதி, வாசஞ் செய் - வசிக்கும், கலைசை—; பொன் அனையார் - இலக் குமியை யொத்த பெண்களின், பூ குழலும் - அழகிய கூந்தலும், கண்ணி - மாலை (யணிதலால்), வாசஞ்செய் - வாசனையுண்டாக் கும், கலைசை—; எண்ணி-ஆலோசித்து, ஒரு மல் நாகமத்தினன்-ஒப் பற்ற வலிமையுள்ள மந்தரமலையாகிய மத்தினால், வாரி கடைந் தோர்க்கு - திருப்பாற்கடலைக் கடைந்த திருமால் முதலிய தேவர்க்கு, இரங்குமன் - அருள்புரியுந் தலைவனும், ஆகமத் தினன்-ஆகமநூலருளியவனுமாகிய சிவபெருமான், வாழ்வு - வாழு மிடம்.

(கு - ரை.) கண்ணி வாசஞ் செய் என்பதனை - கள் திவாசஞ் செய் என்று பிரித்து, தேன் பொருந்தியிருக்கும் என்பதுமாம். மத்தாகிய மலை - மந்தரம். (உஎ)

சிந்துமதுப் பூங்காவிற் செவ்வீதி யிற்றும்பி
கந்தருவந் தேரூர் கலைசையே—யுந்தி
கலசத்த னத்தியத்தன் காஞ்சனவெற் பீன்ற
கலசத்த னத்தியத்தன் காப்பு.

(இ - ள்.) சிந்துமது - துளிக்கின்ற தேனையுடைய, பூங்காவில்- பூஞ்சோலையில், தும்பி - வண்டுகள், கந்தருவம் - கந்தருவம் என்னும் பண்ணை, தேர் - தேர்ந்து பாடி, ஊர் - உலாவும், கலைசை—; செவ்வீதியில் - செழுவிய தெருக்களில், தும்பி கந்த ருவம் தேர் ஊர்—யானைகளையும் குதிரைகளையும் தேர்களையும் செலுத்துகின்ற, கலைசை—; உந்து இகல் அசத்தன் - செலுத்துகின்ற வலிமை பொருந்திய ஆட்டுக்கடாவை வாகனமாகவுடைய முருக னுக்கும், அத்தி அத்தன் - யானை முகத்தையுடைய விநாயகனுக் கும் தந்தையும், காஞ்சன வெற்பு ஈன்ற - பொன்மயமான இமய

மலை (மலையரையன்) பெற்ற, கலசம் தனத்தி - கலசம் போன்ற தனத்தையுடைய உமாதேவியை, அத்தன் - அர்த்த பாகத்தி லுடையவனுமான சிவபெருமான், காப்பு - காவலிடம்.

(கு - ரை.) தும்பி - வண்டு, யானை. செவ்வீதி-செம்மையான தெரு, வளமறுகு என்றபடி. கந்தருவம் - குதிரை. காஞ்சனம் - பொன். அத்தன் - தலைவனுமாம். (உஅ)

ஒண்டொடியார் வாய்மொழியு முண்மைப் புகழுநவ
கண்டங் கடக்குங் கலைசையே—மண்டு
மருத்தருந்தும் பையரவர் வார்சடைமேல் வைத்த
மருத்தருந்தும் பையரவர் வாழ்வு.

(இ - ள்.) ஒண்தொடியார் - ஒள்ளிய வளையை யணிந்த பெண்களின், வாய் மொழியும் - வாயினின்று வரும் சொற்களும், நவம் கண்டு - புதிய கற்கண்டை, அங்கு அடக்கும் - அவ்விடத்தே அடக்கிவிடும், கலைசை—; உண்மைப்புகழும் - (அப்பெண்களின்) மெய்ப்புகழும், நவகண்டம் - ஒன்பது கண்டங்களையும், கடக்கும் - கடந்து செல்லும், கலைசை—; மண்டு - நெருங்கிய, மருத்து அருந் தும் - காற்றையுண்ணும், பை அரவர் - படத்தையுடைய பாம்பை யணிந்தவரும், வார்சடைமேல் வைத்த - நீண்ட சடையில் அணிந்த, மரு தரும் - வாசனையைத் தருகின்ற, தும்பையர் அவர் - தும்பை மாலையுடையவருமாகிய அவ்விறைவரது, வாழ்வு - வாழுமிடம்.

(கு - ரை.) நவம் - புதுமை, ஒன்பது. அடக்குதல் - கீழ்ப் படுத்தல். பை - படம். மருத்து - காற்று. (உகூ)

தண்ணார் வயற்கரும்புந் தத்துவந்தே ரந்தணருங்
கண்ணாரஞ் சிந்துங் கலைசையே—விண்ணாடும்
ஐயரவா விட்டா ரகத்தார்நற் குண்டலங்கள்
ஐயரவா விட்டா ரகம்.

(இ - ள்.) தண் ஆர் - குளிர்ச்சி பொருந்திய, வயல் கரும்பும்- வயலிலுள்ள கரும்புகளும், கண் ஆரம் சிந்தும் - கணுக்களினின்றும் முத்துக்களைச் சிந்தும், கலைசை—; தத்துவம் தேர் அந்தணரும் - உண்மைப் பொருளையாராயும் பார்ப்பனர்களும், கண் நாரம் சிந்தும்-கண்களினின்றும் நீரை (ஆனந்தபாஷ்பத்தை)ச் சொரியும், கலைசை—; விண் நாடும் ஐயர் - தேவர்களால் நாடப்படும் தலைவரும் அவாவிட்டார் அகத்தார் - ஆசையை யொழித்த

ஞானிகளின் உள்ளத்துள்ளவரும், நல் குண்டலங்கள் - சிறந்த காதணிகள், ஐ அரவு ஆக - அழகிய பாம்பாக, இட்டார் - அணிந்து கொண்டவருமான சிவபெருமான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) அந்தணர்-அழகிய தண்மையுடையவர், தண்மை - அருளுடைமை. அந்தணர் என்பதற்கு வேதாந்தத்தையே பொருளாகக் கொண்டு பார்ப்பார் எனவும் கூறுவர். நாரம்-நீர், விண் ஆடும் ஐயர் எனக்கொண்டு சிதாகாயமாகிய சிதம்பரத்தில் நடனமிடும் தலைவர் என்பதுமாம். (௯0)

நிட்டையுறு சிட்டருஞ்செய் நீலங் கடைசியருங்
கட்டங் கழிக்குங் கலைசையே—வட்டக்
குடிலச் சடையார் கொடியேனைப் பீறற்
குடிலச் சடையார் குடி.

(இ - ள்.) நிட்டை உறு சிட்டரும் - யோகத்திலமர்ந்துள்ள பெரியோர்களும், கட்டம் கழிக்கும் - (தமது பிறவித்) துன்பத்தை நீக்குகின்ற, கலைசை—; கடைசியரும் - பள்ளப் பெண்களும், நீலம் - நீலோற்பல மலரை, செய் - வயல்களில், கட்டு - களைந்து, அங்கு அழிக்கும் - அங்கே கெடுக்கும், கலைசை—; வட்டம் - வட்ட மாகிய, குடிலம் - வளைவான; சடையார் - சடையையுடையவரும் கொடியேனை - கொடியேனாகிய என்னை, பீறல் குடில் அச்சு அடையார் - அழிதலையுடைய குடிலாகிய உடம்பில் இனிப் பொருந்தவைக்காதவருமாகிய சிவபெருமான். குடி - இடம்; (எ - று.)

(கு - ரை.) பீறல் - கிழிதல், ஈண்டு அழிதல் மேற்று. குடில் - குடிசை, (சிறு வீடு.) அச்சு - உடம்பு; ஆகுபெயர். இனி, கொடி யேனை - தீயவனாகிய எனது, அச்சு-உயிரை, பீறல் குடில் - ஓட்டைக் கூடாகிய சரீரத்தில், எனவுமாம். குடில் - உவமையாகுபெயராய் உடம்பை யுணர்த்திற்று, கொடியேனை-கொடியேனது: வேற்றுமை மயக்கம். கொடியேன் : வினையாலணையும் பெயர். நிட்டை, கட்டம் என்பன நிஷ்டை கஷ்டம் என்ற வடசொற்களின் திரிபு. வட்டக்குடிலம் - வட்டவடிவமாய் வளைந்த எனினுமாம். நீலம் - குணவாகுபெயராய் நீலோற்பலத்தை யுணர்த்தியது. (௯௬)

கொஞ்சுகிளி யன்னார் குவிமுலையுங் கண்ணுவருங்
கஞ்சமுருக் கும்பூங் கலைசையே—வஞ்சமனக்

கையர வப்பணியார் கண்ணுமனத் துக்கரியார்
கையர வப்பணியார் காப்பு.

**(இ - ள்.)** கொஞ்சு கிளி அன்னார் - கொஞ்சுங்கிளி மொழி போலும் சொற்கள் வாய்ந்த பெண்களின், குவிமுலையும் - குவிந்த தனமும், கஞ்சம் - தாமரையரும்பினை, முருக்கும் - கெடுக்கும், **பூங்கலைசை**-; கண்ணுவரும் - கன்னரும், கஞ்சம் உருக்கும் - வெண்கலத்தை யுருகச்செய்யும், பூங்கலைசை - பொலிவமைந்த கலைசை—; வஞ்ச மனக்கையர் - தீயமனத்தையுடைய கீழோராகிய, அவம் பணியார் - பயனற்ற தொழிலையுடையார், கண்ணும் - கருதுகின்ற, மனத்துக்கு அரியார் - மனத்துக்கு அரியரா யிருப்பவரும்; கை அரவப்பணியார் - கையில் அரவாபரணத்தை யுடையவருமான சிவபெருமான், காப்பு - காவலிடம்; (எ - று.)

**(கு - ரை.)** அவப்பணியாரது கண்ணுக்கும் மனத்துக்கும் காண்டற்கும் நினைத்தற்கும் அரியார் எனினுமாம். ஞானக் கண்ணன்றி யூனக்கண்ணுடைமையாலும், சித்தவிருத்தியடங் குதலன்றித் தற்போத முடைமையாலும், "கண்ணுமனத்துக் கரியார்" என்றார். மனத்துக்கு என்புழியுள்ள நான்கனுருபைக் கண்ணும் என்றவிடத்தும் கூட்டுக. கஞ்சம் - தாமரை, வெண் கலம்; அவம் - வீண். பூ கலைசை - பூங்கலைசை; பூப்பெயர் முன்னின மெய் தோன்றிற்று. (கூஉ)

சீலமுறு மன்னவருஞ் செங்கழுநீர்ப் போதலருங்
காலமளி யேறுங் கலைசையே—மாலில்
வருந்தப் படையார் மனத்தா ரினுநான்
வருந்தப் படையார் மனை.

**(இ - ள்.)** சீலம் உறு மன்னவரும் - நல்லொழுக்கமுடைய அரசர்களும், கால் அமளி ஏறும் - கால்களையுடைய படுக்கையில் ஏறியிருக்கும், கலைசை—; செங்கழுநீர்ப்போது அலரும் - செங்கழு நீர்மலரும், காலம் அளி ஏறும் - (தேனையுண்ணுதற்குரிய) காலத் தில் வண்டுகள் உட்செல்லப்பெறும், கலைசை—: மாலில் வரும் தப்பு அடையார் - மயக்கத்தால் வரும் தவற்றினைப் பொருந்தாத வர்களுடைய, மனத்தார் - மனத்திலிருப்பவரும், இன்னும் நான் வருந்த படையார் - மேலும் நான் (பிறவித்துன்பத்தால்) வருத்த மடைய (எனக்கு உடம்பைப்) படையாதவருமான சிவபெருமான், மனை - வீடு; (எ - று.)

**(கு - ரை.)** அலரும் காலம் அளி யேறும் எனப் பிரித்துச் செங்கழுநீர்ப்போதானது மலருங்காலத்தில் வண்டுகள் ஏறி

மொய்க்கும் எனப் பொருள் கூறுவர்; அப்பொருட்கு எடுப்பழிவு என்னும் குற்றமாம். கால்அமளி - கட்டில். போது - அலரும் பருவத்து அரும்பு, போதலர் : இருபெயரொட்டு. (கூரு)

நற்புலவர் செய்யுளுநன் ஞரியர்கள் வெண்ணகையும்
கற்பனைய வென் னுங் கலிசையே—பொற்பார்
சலசத்தா னந்தனும்பர் சாரா தவசஞ்
சலசத்தா னந்தன் றலம்.

(இ - ள்.) நல்புலவர் செய்யுளும் - சிறந்த பாவலர்களுடைய பாடல்களும், கற்பனைய என்னும் - வருணனையையுடையன என்று (கற்றோர்) கூறும், கலிசை—; நல் நாரியர்கள் வெண் நகையும் - அழகிய பெண்களின் வெண்மையான பற்களும், கற்பு அனைய என்னும் - முல்லையரும்பை யொத்திருக்கின்றன என்று (கண்டோர்) சொல்லும், கலிசை—; பொற்பு ஆர் - அழகு பொருந்திய, சலசத்தான் - தாமரையாசனனாகிய பிரமனும், நந்தன் - பாஞ்ச சன்னியம் என்னுஞ் சங்கேந்திய திருமாலும், உம்பர் - தேவர்களும், சாராத - பொருந்தமுடியாத, அசஞ்சல சத்து ஆனந்தன் - சஞ்சலமில்லாத உண்மையானந்தனாகிய சிவ பெருமான், தலம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) சலசம் - தாமரை, சலத்தில் தோன்றுவது. சஞ்சலம் - அசைவு: அசஞ்சலம் - அசைவின்மை. சத்து - உண்மை.

அன்னநடை யார்மொழியு மாடவர்க டிண்டோளுங்
கன்னலம்போ லாருங் கலிசையே—சென்னியிடை
வாரம் படைத்தார் வளர்சி தம்ப ரேசருமை
வாரம் படைத்தார் மனை.

(இ - ள்.) அன்னம் நடையார் மொழியும் - அன்னத்தின் நடைபோலும் நடைவாய்ந்த பெண்களின் சொல்லும், கன்னல் அம் போல் - கரும்பின் சாற்றைப்போல, ஆரும் - இனிமையாகப் பொருந்தி யிருக்கும், கலிசை—; ஆடவர்கள் திண் தோளும் - புருடர்களுடைய வலிய புயங்களும், கல் நலம் போல் ஆரும் - மலையின் தன்மையைப் போலுயர்ந்து பருத்திருக்கும், கலிசை—; சென்னியிடை - சிரசில், வார் அம்பு அடைத்தார்-ஒழுகுகின்ற கங்கையைத் தரித்திருப்பவரும், வளர் சிதம்பரேசர் - (எல்லாவளனும்) வளர்ந்துள்ள சிதம்பரத்தில் எழுந்தருளிய ஈசரும், உமை வாரம் படைத்தார் - உமையம்மையினது அன்பைப் பெற்றுக் கொண்டவருமான சிவபெருமான், மனை - இடம்; (எ - று.)

(கு - ரை.) அம்-நீர்; ஈண்டுச் சாறு. திண்மை - வலிமை. அம்பு - நீர். கலைசையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் பெயர் சிதம்பரேசன், உமையம்மை பெயர் சிவகாமியம்மையார். (௩௫)

தேந்தா மரைஞிமிறுந் திண்வயவர் தூணிகளுங்
காந்தாரம் பாடுங் கலைசையே—மாந்த
வருங்கடுக்கை யான்வாங்கி மாந்தினன்றேன் றேங்க
வருங்கடுக்கை யான்வாழ் மனை.

(இ - ள்.) தேன் தாமரை ஞிமிறும் - தேன்பொதிந்த தாமரை மலரிலுள்ள வண்டுகளும், காந்தாரம் பாடும் - காந்தார மென்னும் பண்ணைப் பாடும், கலைசை—; திண் வயவர் தூணி களும் - வலிமைபொருந்திய வில்வீரரின் அம்பறுத்தூணிகளும், காந்துஆர் அம்பு ஆடும் - சுடுதலார்ந்த அம்பு பொருந்தும், கலைசை—; மாந்தவரும் கடு - (பிரமாதி தேவர்களுயிரை) உண்ண வந்த விடத்தை, கையான் - கையால், வாங்கி - எடுத்து, மாந் தினன் - உண்டவனும், தேன் தேன் கவரும் - வண்டுகள் தேனை யுண்ணும், கடுக்கையான் - கொன்றை மாலையையுடையவனுமான சிவபெருமான், வாழ்மனை - வாழும் இடம்; (எ - று.)

(கு - ரை.) தேந்தாமரை, தேங்கவரும் என்பன "தேன் மொழி-வலிவரின் ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி" என் பதனுலறிக. தேன் தேங்க வருங் கடுக்கையான் எனக்கொண்டு தேன் ததும்ப வருகின்ற கொன்றை மாலையையுடையவன் என்று பொருள் கூறுவாரும் உளர். (௩௬)

போங்குசுதை மாளிகையும் போர்வீரர் வேற்றசையுங்
கங்குலவித் துய்க்குங் கலைசையே—யெங்குநிறை
வையம் படைத்தான்கம் மாய்த்தாழித் தூணியிற்றன்
வையம் படைத்தான் மனை.

(இ - ள்.) பொங்கு சுதை மாளிகையும் - விளங்குகின்ற சுண்ணச்சாந்து தீற்றிய வீடுகளும், கங்குல் அவித்து - இருட் டைக் கெடுத்து, உய்க்கும் - ஓட்டும், கலைசை—; போர் வீரர் - உயுத்தவீரரது, வேல்தசையும் - வேலாயுதத்திற் பொருந்திய மாமிசத்தையும், கங்கு உலவி - பருந்துகள் உலாவி, துய்க்கும் - புசிக்கும், கலைசை—; எங்கு நிறை - எவ்விடத்தும் நிறைந்துள்ள, வையம் படைத்தான் - பூமியைப் படைத்த பிரமதேவனுடைய, கம் மாய்த்து - தலையைக் கிள்ளி, ஆழித்தூணியில் - பாற்கடலாகிய

தனதம்பறுத்தூணியில், தன் வை அம்பு - தனது கூர்மையாகிய அம்பை, அடைத்தான் - சேர்த்தவனாகிய சிவபெருமான், மனை - இடம்; (எ-று.)

(கு - ரை.) அம்பு - திருமாலாகிய அம்பு. திருமாலை அம் பாகக் கொண்டமையால் அவர் தங்கிய பாற்கடல் அம்பறுத் தூணியாகக் கூறப்பட்டது. கங்குல் - இருள், இரா. (௩௭)

**வேதியர்போற் குண்டலமும் விண்ணு டுடையவருங்**
**காதலம ருஞ்சீர்க் கலைசையே—மாதனங்கள்**
**பந்தங் குலைக்குமம் மான் பாகத்தா னென்னிருண்ட**
**பந்தங் குலைக்குமம்மான் பற்று.**

(இ - ள்.) வேதியர் பொன் குண்டலமும் - அந்தணர்கள் (காதிலணிந்த) பொற்குண்டலங்களும், காது அலமரும் - காதில் சுழலும், சீர்க்கலைசை - சிறப்பினையுடைய கலைசை; விண்ணுடு உடையவரும் - விண்ணுலகத்தை யிருப்பிடமாகவுடைய தேவர்களும், காதல் அமரும் - விருப்புடன் தங்கும், சீர்க்கலைசை—; பந்து அங்கு உலைக்கும் - பந்தை அங்கே வருத்துகின்ற, மாதனங்கள் - பெரிய தனங்களையுடைய, அம் மான் - அழகிய மான்போன்ற உமாதேவியை, பாகத்தான் - இடப்பாகத்திலுடையவனும், என் இருண்ட பந்தம் குலைக்கும் - எனது அஞ்ஞானமாகிய பாசத்தைக் கெடுக்கும், அ மான் - அப்பெரியோனுமான சிவபெருமான், பற்று - சேர்ந்திருக்குமிடம்; (எ-று.)

(கு - ரை.) காதல் - விருப்பம். மான்: உவமையாகுபெயர். பந்தம்-ஆணவமலம். 'இருள்மலம்' என்றுார் பிறரும். (௩௮)

**பொற்கொடியார் செங்கையினிற் பூம்பழனச் சேற்றளையிற்**
**கற்கடக மூருங் கலைசையே—சற்குருவாய்**
**வந்தவலம் பாற்றினர் வார்சடைமேல் விண்மேனி**
**வந்தவலம் பாற்றினர் வாழ்வு.**

(இ - ள்.) பொன் கொடியார் செம் கையினில் - அழகிய பூங்கொடி போன்ற இடையினையுடைய பெண்களின் செவந்த கையினில், கல் கடகம் ஊரும் - இரத்தினக்கற்கள் பதிக்கப் பெற்ற கங்கணம் பொருந்தியிருக்கும், கலைசை—; பூ - பொலிவுற்ற, பழனம்-வயலிலுள்ள, சேறு அளையில் - சேற்றின் வளைகளில், கற்கடகம் - ஞெண்டுகள், ஊரும் - ஊர்ந்து செல்லும், கலைசை—; சற்குருவாய் வந்து - ஞானாசாரியராய் எழுந்தருளி,

**அவலம் பாற்றினர்** - எனது வீணான பிறவிநோயை நீக்கினவரும், **வார்சடைமேல்** - நீண்ட சடைமீது, **விண்மேல்** - ஆகாயத்தில், **நிவந்த** - உயர்ந்த, **அலம்பு ஆற்றினர்** - ஒலிக்கின்ற கங்காநதியை யுடையவருமான சிவபெருமான், **வாழ்வு**-வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) அளே - பொந்து, அவலம் - துன்பம். அவலம் பாற்றினர் என்பதற்கு மனக்கவலையை மாற்றினர் எனினுமாம். நிவந்த - நிவ: பகுதி. (௩௯)

நீர்மண் டிலஞ்சிகளு நீண்டதிருக் கோபுரமுங்
காரண்டந் தோயுங் கலைசையே—வீரநர
பஞ்சான னத்தான் பதைபதைக்கத் தான்பிளந்த
பஞ்சான னத்தான் பதி.

(இ - ள்.) **நீர் மண்டு**-நீர் நிறைந்த, **இலஞ்சிகளும்**-தடாகங் களும், **காரண்டம் தோயும்** - நீர்க்காக்கைகள் மூழ்கும், **கலைசை**- ; **நீண்ட திரு** - நீண்ட அழகிய, **கோபுரமும்** - கோபுரங்களும், **கார் அண்டம் தோயும்** - மேக மண்டலத்தைச் சேரும், **கலைசையே**— ; **வீரம்** - வீரம் பொருந்திய, **நரபஞ்சானனத்தான்** - நரசிங்க வடிவ மான திருமால், **பதைபதைக்க** - துடிதுடிக்க, **பிளந்த** - (எண்காற் புள்ளாகிய சரபபட்சியாக வந்து அவரை) இருகூறுக்கிய, **பஞ்ச ஆனனத்தான்** - ஐந்து முகத்தையுடைய சிவபெருமான், **பதி** - இடம்; (எ - று.)

(கு - ரை.) பஞ்சம் ஆனனம் - ஐந்து முகம். அவை யாவன : ஈசானம், தற்புருடம், வாமனம், அகோரம், சத்தியோ சாதம் என்பன. தான் : அசை. இலஞ்சி - நீர்நிலையுமாம். கார் அண்டம் தோயும் என்பதற்குக் கரிய ஆகாயத்தைப் பொருந்தும் எனலு மாம். பஞ்சானனம் - சிங்கம். சரபம்-எண்காற் பறவை. (௪0)

பொற்பூர் மடந்தையரும் போதகமன் னார்மார்புங்
கற்பூர நாறுங் கலைசையே—விற்போற்
கரும்புருவ மானார்தங் காமுறூர் நெஞ்சிற்
கரும்புருவ மானார்தங் காப்பு.

(இ - ள்.) **பொற்பு ஊர்** - அழகு மிகும், **மடந்தையரும்** - பெண்களும், **கற்பு ஊர நாறும்** - கற்புப் பொருந்தத் தோன்றும், **கலைசை**—; **போதகம் அன்னார் மார்பும்** - யானைக் கன்றையொத்த புருடர்களின் மார்பும், **கற்பூரம் நாறும்**-பச்சைக்கற்பூரஞ்சேர்ந்த

கலவைச் சாந்து மணக்கும், கலைசை—; வில்போல் - வில்லை யொத்த, கரும்புருவம் மாஞர் தம் காமம் உஞர் - கரிய புருவத்தை யுடைய பெண்களின் ஆசை பொருந்தாத ஞானிகளின், நெஞ்சில் - மனத்தில், கரும்பு உருவம் ஆஞர் - கரும்புபோல இனிய வடிவமா யிருப்பவரான சிவபெருமான், காப்பு ; (எ - று.)

(கு - ரை.) நாறும் - தோன்றும், மணக்கும். காமுஞர் - காமம் உஞர். காமம் என்பது, அம் கடைகுறைந்து காம் என வந்தது. (சுக)

மல்லுழவ ரேரிகட்கும் வாளுழவர் வாம்பரிக்கும்
கல்லணைகள் வைக்குங் கலைசையே—முல்லைநல்லார்
மத்தி னடிக்குமெய்யன் மால்விடையாக் கோண்ட
மத்தி னடிக்குமெய்யன் வாழ்வு. [வனீ

(இ - ள்.) மல் உழவர் - வலிவுள்ள உழவர்கள், ஏரிகட்கும் - ஏரிகளுக்கும், கல் அணைகள் வைக்கும் - கல்லால் அணைகளைக் கட்டுகின்ற, கலைசை—; வாள் உழவர் - வாள்வித்தையில் வல்ல வீரர்கள், வாம்பரிக்கும் - தாவிச் செல்லுங் குதிரைகளுக்கும், கல்லணைகள் வைக்கும் -(முதுகின்மேல்) தவிசுகளை எடுத்துவைக்கும், கலைசை—; முல்லை நல்லார் - முல்லை நிலத்தில் வசிக்கும் இடைப் பெண்கள், மத்தின் - மத்திஞல், அடிக்கு மெய்யன் -'அடிக்கப்படும் தேகத்தையுடைய திருமாலை, மால் விடையாக் கொண்டவன் - பெருமைவாய்ந்த இடபமாக வுடையவனும், ஈமத்தில் - சுடலையில், நடிக்கும் மெய்யன் - நடஞ்செய்யும் உண்மைப்பொருளாயினவனுமான சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) வாம் - வாவும் என்பதன் தொகுத்தல். கல்லணை - குதிரையின் மேலிடும் தவிசு. ஈமம் - சுடுகாடு. (சுஉ)

நம்புமடி யார்வினையு நல்லரசர் வீதிகளுங்
கம்பமா வோடுங் கலைசையே—சம்புவெள்ளிப்
பொற்பிஞ கத்தான் புகழ்ச்சிதம்ப ரேசஞரு
பொற்பிஞ கத்தான் புரம்.

(இ - ள்.) நம்பும் அடியார் வினையும் - விரும்புகின்ற மெய்யடியாரின் இருவினைகளும், கம்பம் ஆ ஓடும் - நடுக்கமாகக் கெடும், கலைசை—; நல் அரசர் வீதிகளும் - சிறந்த இராச வீதிகளும், கம்பம் மா ஓடும் - கம்பத்திற் கட்டுதற்குரிய யானைகள் விரைந்து செல்லும். கலைசை—; சம்பு - சம்பு என்னும் திருநாமத்தையுடையானும், பொற்பின் வெள்ளி நாகத்தான் - அழகிய வெள்ளி மலை

யிலிருப்பவனும், புகழ் சிதம்பரேசன் - புகழையுடைய சிதம்ப ரேசன் என்ற பெயருடையவனும், ஒரு பொன் பினாகத்தான் - ஒப் பற்ற அழகிய பினாக மென்னும் வில்லையுடையானுமான சிவ பெருமான், புரம் - நகர்; (எ - று.)

(கு - ரை.) ஆக என்பது ஆ என ஈறு தொக்கது. கம்பம் - கட்டுத்தறி, நடுக்கம். சம்பு - இன்பஞ் செய்பவன். பினாகம் - சிவன்வில். (சு௩)

மாதரம்பொற் கோப்புகளும் வாயார் மதகுகளுங்
காதலையப் போடுங் கலைசையே—கோதில்
பரதத்து வந்தானேன் பார்க்கருளி யென்றும்
பரதத்து வந்தான் பதி.

(இ - ள்.) மாதர் அம் பொன் கொப்புகளும் - பெண்கள் அழகிய பொன்னாற் செய்த கொப்பென்னும் ஆபரணத்தையும், காது அலைய போடும் - காதில் அசையும்படி தரிக்கும், கலைசை—; வாய் ஆர் மதகுகளும்-துவாரம் பொருந்திய மதகுகளிலும், காது அலை அப்பு ஓடும்-கரையை அழிக்கும் அலையையுடைய நீர் ஓடும், கலைசை— ; பரம் தத்துவம் தான் என்பார்க்கு அருளி - மேலான உண்மைப்பொருள் தானே யானவன் என்பவர்க்கு அருள்செய்து, பரதத்து உவந்தான் - நடனத்தில் உவப்புற்றவனான சிவபெரு மான், பதி - இடம்; (எ - று.)

(கு - ரை.) வாய் - ஈண்டு நீர்வரும் வழி. அப்பு-நீர். பரதத்து என்பதில் அத்துச்சாரியை. (சுச)

பட்டங்கோள் வேந்தர் பவனியின்மின் னாருரையிற்
கட்டியங்கூ றுஞ்சீர்க் கலைசையே—சிட்டருளத்
தன்பா னதியானத் தானந்த மாம்பெருமை
யன்பா னதியா னகம்.

(இ - ள்.) பட்டம் - அரச பட்டம், கொள் - கொண்ட, வேந்தர் பவனியில் - அரசரின் உலாவில், கட்டியங் கூறும் - (வந்தியர்) கட்டியஞ் சொல்லும், சீர்க்கலைசை—; மின்னார் உரை யில் - பெண்களின் சொற்களில், கட்டி அங்கு ஊறும் - வெல்லக் கட்டியின் இரசம் அங்கே சுரக்கும், சீர்க்கலைசை—; சிட்டர் உளத்து அன்பு ஆன தியானத்து - பெரியோர்கள் மனத்திலுள்ள அன்பாகிய தியானத்திடத்து, ஆனந்தம் ஆம் பெருமையன் - ஆனந்தமயமாகத் தோன்றும் பெரியோனும், பால் நதியான் -

பாலாற்றங் கரையிலுள்ள திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள வனுமான சிவபெருமான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) கட்டியம் - அரசரின் புகழ் கூறுதற்குரிய பா. மின்னார் - மின்னலையொத்த இடையினையுடைய பெண்கள். (௪௫)

மாசில் வணிகரும்பூ வார்குழலின் மாதரும்பொற்
காசறையுட் கோட்டுங் கலைசையே—வீசுகையின்
மாசுணங்காப் பிட்டவரன் வண்ணத் திருவுருவின்
மாசுணங்காப் பிட்டவரன் வாழ்வு.

(இ - ள்) மாசு இல் - குற்றமில்லாத, வணிகரும் - செட்டிகளும், பொன் காசு - பொற்காசுகளை, அறையுள் - (சேமிக்கும்) அறைகளிடத்தில், கொட்டும் - குவிக்கும், கலைசை—; மாதரும் - பெண்களும், பூ வார் குழலில் - பூக்களையணிந்த நீண்ட கூந்தலில், காசறை - மயிர்ச்சாந்தை, உள் கொட்டும் - உள்ளே யப்பும், கலைசை—; வீசுகையில் - வீசியாடும் கையினிடத்து, மாசுணம் காப்பு - பாம்பாகிய கங்கணத்தை, இட்ட வரன்-தரித்த மேலான வன், வண்ணம் - அழகிய, திருஉருவில் - (தனது) திருமேனியில், மா-பெருமைதங்கிய, சுணம் காப்பு - பொடியாகிய விபூதியை, இட்ட அரன் - அணிந்த உயிர்கட்குப் பாசத்தை யரிப்பவனுமான சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) மாசு-தீயவழியில் ஈட்டும் குற்றம். காசு - நாணயம். கொட்டும் - குவிக்கும், அப்பும். சுணம்-சுண்ணம்; பொடி. அரன் - அழிப்பவன். (௪௬)

மன்னரணி மாளிகையு மாறாக் கொடையினருங்
கன்னன்மணி யேயுங் கலைசையே—வன்னிமதி
என்பரவ மட்டா ரெருக்கணிவார் காமியா
என்பரவ மட்டா ரிடம்.

(இ - ள்.) மன்னர் அணி மாளிகையும் - அரசருடைய அழகிய உப்பரிகைகளிலும், கன்னல் மணி ஏயும்-நாழிகையை யுணர்த்தும் மணி பொருந்தியிருக்கும், கலைசை—; மாறா கொடையினரும் - நீங்காத கொடையாளரும், கன்னன் மணி ஏயும் - கன்னனையும் சிந்தாமணியையும் ஒத்திருக்கும், கலைசை—; வன்னி மதி என்பு அரவு மட்டு ஆர் எருக்கு அணிவார் - வன்னிபத்திரத்தையும் சந்திரனையும் எலும்பையும் பாம்பையும் தேன் பொருந்திய எருக்கமலரையும் தரித்தவரும், கா என்பர் அவம் அட்டார் - காப்

பாய் என்பவருடைய தீமையைக் கெடுத்தவருமான சிவபெருமான், இடம்; (எ-று.)

(கு - ரை,) கொடையாளரைக் கன்னன் சிந்தாமணி முதலியனவாக உவமிப்பது மரபாதலால் இவ்வாசிரியரும் அங்ஙனமே கூறினர். கன்னன் - குந்தி கன்னிகையாயிருந்தபோது ஈன்றவன்; பாண்டவர்கட்கு மூத்தோன். சிந்தாமணி - கருதியதைக் கொடுக்கும் ஒரு தெய்வமணி; அஃது அமராவதிக்கணுள்ளது. கன்னல் - நாழிகை. கன்னல்மணியேயும் என்பதைக் கல்நல்மணி ஏயும் என்று பிரித்து, கல்லாகிய நல்ல மணிகளால் இயைந்திருக்கும் என்பதுமாம். காமியா என்புழி, மியா : முன்னிலை அசை. (சஎ)

மைவாழ் மதிற்கிடங்கு மள்ளர் பெருங்குழுவுங்
கைவேழ மாடுங் கலைசையே—வைவாய்ந்த
கட்டங்கங் கையுடையார் காமருசீர்ச் செஞ்சடைமேற்
கட்டங்கங் கையுடையார் காப்பு.

(இ - ள்.) மை வாழ் - மேகங்கள் சஞ்சரிக்கின்ற, மதில் கிடங்கும் - மதிலைச்சூழ்ந்த அகழியிலும், கை வேழம் - துதிக்கையையுடைய யானைகள், ஆடும்-மூழ்கும், கலைசை;—மள்ளர் பெரும் குழுவும் - உழவர்களின் பெருங்கூட்டத்திலும், கை வேழம் ஆடும் - (அவரவர்) கையில் கரும்பு அசைந்திருக்கும், கலைசை—; வை வாய்ந்த - கூர்மை வாய்ந்த, கட்டங்கம் கை உடையார் - மழுவைக் கையிலுடையவரும், காமரு - அழகிய, சீர்-சிறப்புற்ற, செஞ்சடைமேல் - சிவந்த சடையில், கட்டு அம் கங்கை உடையார் - அணிந்த நீரையுடைய கங்காநதியை உடையவருமான சிவபெருமான், காப்பு - காவலிடம்; (எ - று.)

(கு - ரை.) வேழம் - யானை, கரும்பு. கட்டங்கமுடையார் என்பதற்கு வைரம் பொருந்திய யோகதண்டத்தைத் திருக்கையிலுடையவர் எனினுமாம். காமரு - காமர் + உ. (சஅ)

பொன்னிலகு பூந்தடமும் பொற்பினட மங்கையருங்
கன்னியரங் காடுங் கலைசையே—மன்னு
மலைவிலத்த ரன்பாய் மலைவிலத்த ரேன்றும்
மலைவிலத்தர் வாழு மனை.

(இ - ள்.) பொன் இலகு - அழகு விளங்கும், பூந்தடமும் - மலர் நிறைந்த தடாகமும், கன்னியர் அங்கு ஆடும் - மாதர்கள் அங்கே மூழ்குதற்கிடமான, கலைசை—; பொற்பின் - அழகுள்ள,

நடமங்கையரும் - நாட்டியப் பெண்களும், கன்னி அரங்கு ஆடும் - அழிவில்லாத நாடகசபையில் நடனஞ்செய்யும், கலைசை—; மன்னும் மலைவில் அத்தர் - நிலைபெற்ற மலைவில்லைக் கையிலுடையவரும், அன்பாய் - அன்பாக, மலே - (அன்பர்கள்) சாத்தும், விலத்தர் - வில்வத்தையுடையவரும், என்றும் மலைவு இல் அத்தர் - எப்போதும் அழிதல் இல்லாத தலைவருமான சிவபெருமான், மனை - வீடு; (எ - று.)

(கு - ரை.) மன்னு மலைவு இல் அத்தர் - நிலைபெற்ற கெடுதலில்லாத செந்நிறம் வாய்ந்தவரும்: அன்பாய் மலைவில் அத்தர் - அன்பாக மேருமலையை வில்லாகவுடைய கையையுடையவரும்; என்றும் - எப்போதும், மலைவு - (தனக்கு) ஒப்பு, இல் - (பிறர்) இல்லாத, அத்தர் - தலைவருமாகிய இறைவரது, மனை - வீடாகும், என்றும் பொருள் கொள்ளலாம். அத்தர் என்பதற்கு அர்த்த பாகத்தையுடையவர் எனினுமாம். மலைவில் என்றது பினாகமாகிய வில்லை யொழித்தற்கு. (௬௯)

சுந்தரஞ்சேர் நந்தினமுந் தோகை மயிலுமின்னார்
கந்தரங்கண் டார்க்குங் கலைசையே—கொந்திதழிக்
கண்ணி யரிப்பார் கலங்குமுயிர்க் கஞ்ஞானக்
கண்ணி யரிப்பார்தங் காப்பு.

(இ - ள்.) சுந்தரம் சேர் - அழகு பொருந்திய, நந்து இனமும் - சங்குக் கூட்டங்களும், மின்னார் - மின்னலையொத்த இடையினையுடைய பெண்களது, கந்தரம் கண்டு - கழுத்தைப் பார்த்து, ஆர்க்கும் - (நீர் எமக்கு ஒப்பாகமாட்டீர் என்று இகழ்ச்சிசெய்வது போல) ஒலிக்கும், கலைசை—; தோகை மயிலும் - கலாபத்தையுடைய மயில்களும், மின் ஆர் - மின்னல் பொருந்திய, கந்தரம் - மேகத்தை, கண்டு - பார்த்து, ஆர்க்கும்-அகவி மகிழும், கலைசை—; கொந்து இதழி கண்ணியர் - கொத்தாகிய கொன்றைமாலையை யணிந்தவரும், இ பார் - இப்பூமியில், கலங்கும் உயிர்க்கு-வருந்தும் உயிர்கட்கு, அஞ்ஞானக் கண்ணி - அஞ்ஞானமாகிய வலையை, அரிப்பார் தம் - கொடுப்பவருமாகிய இறைவரது, காப்பு - காவலிடம்; (எ - று.)

(கு - ரை.) கொந்து-கொத்து என்பதன்மெலித்தல். கண்ணி - முடிமாலை. கந்தரம் - கழுத்து. மேகம். (௭0)

செய்யதவத் தோருந் திரிமருப்புப் போர்த்தகருங்
கையடையா ருஞ்சீர்க் கலைசையே—வெய்யவிடத்

துத்திப்பாம் பாட்டினூர் சொன்மூவர் தோத்திரஞ்செய்
தித்திப்பாம் பாட்டினூர் சேர்வு.

(இ - ள்.) செய்ய - செம்மையான, தவத்தோரும் - தவத்தை யுடைய பெரியோரும், கையடை ஆரும் - அடைக்கலத்தானமாகப் பொருந்தும், சீர்க் கலைசை—; திரிமருப்பு - திருகிய கொம்பினை யுடைய, போர் தகரும் - சண்டை செய்யும் ஆட்டுக்கடாக்களும், கை அடை ஆரும் - (மேய்ப்பவன்) கையிலுள்ள இலையையுண்ணும் சீர்க் கலைசை—; வெய்ய விடம் - கொடிய விடத்தையுடைய, துத்தி பாம்பு ஆட்டினூர் - படப் பொறியையுடைய பாம்பை ஆட்டினவரும், சொல் மூவர் - (யாவரும்) துதிசெய்யும் சம்பந்தர், நாவுக்கரையர், சுந்தரர் என்னும் மூவரும், தோத்திரம் செய் - தோத்திரித்துள்ள, தித்திப்பு ஆம் பாட்டினூர் - இனிப்பாகும் பாட்டின்மேல் ஆசையுள்ளவருமான சிவ பெருமான், சேர்வு-சேருமிடம்; (எ - று.)

(கு - ரை.) செய்ய - செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். அடை - இலை. துத்தி - புள்ளி; (படப்பொறி). ஆகும் என்னும் செய்யு மென்னு மெச்சம், 'ஆம்' என்றாயது. (கூக)

சிற்பரணி யாடரங்குந் திண்புரிசைக் கேதனமுங்
கற்பமுற வாக்குங் கலைசையே—பற்பலவென்
றோற்றந் துரத்தினூர் தோன்றிக் கிடந்திமைக்கும்
பாற்றந் துரத்தினூர் பற்று

(இ - ள்.) சிற்பர் - சிற்பிகள், அணி ஆடரங்கும் - அழகிய நடன சாலைகளையும், கல் பல் உற ஆக்கும் - கற்கள் பம்முதலுற வுண்டாக்கும், கலைசை—; திண் புரிசை கேதனமும் - வலிமை யுள்ள மதில்களின் கொடிகளும், கற்பம் உறவு ஆக்கும் - (சொர்க்கத்திலுள்ள) கற்பகத்தருவை யுறவு ஆக்கிக்கொள்ளும், கலைசை—; பற்பல - பலப்பலவாகிய, என் தோற்றம் - எனது பிறவிகளை, துரத்தினூர் - நீக்கினவரும், தோன்றி கிடந்து இமைக்கும் - விளங்கிக் கிடந்து பிரகாசிக்கும், பால் தந்து உரத்தினூர் - வெண்மையுள்ள பூணுநூலை மார்பிலுடையவருமான சிவபெருமான், பற்று - பற்றியிருக்கும் இடம்; (எ - று.)

(கு - ரை.) கற்பம் உற ஆக்கும் எனக்கொண்டு கற்ப காலம் வரைக்கும் பொருந்தும்படி செய்யும் எனினுமாம். பம்முதல் - பொருந்துதல். உறவு - நட்பு. (கூஉ)

## மும்மொழிச் சிலேடை

மாப்பொலிந்த வீகையரு மைந்தருநன் மாதவருங்
காப்பணியாக் கொள்ளும் கலைசையே—தீப்பிறங்கு
மாலாழி யீந்தான்முன் மாலினுக்குப் பாலனுக்குப்
பாலாழி யீந்தான் பதி.

(இ - ள்.) மா பொலிந்த ஈகையரும் - பெருமை விளங்கிய கொடையாளிகளும், கா பணி ஆ கொள்ளும் - கற்பகச்சோலையை ஏவலாகக் கொள்ளும், கலைசை—; மைந்தரும் - சிறுவரும், காப்பு அணி ஆ கொள்ளும் - காப்பைக் கைக்கு ஆபரணமாகக் கொள்ளும், கலைசை—; நல் மாதவரும்-சிறந்த பெரிய தவத்தையுடையவரும், கா - (பிறரைக்) காத்தலை, பணி ஆ கொள்ளும் - தொழிலாகக் கொள்ளும், கலைசை—; தீ பிறங்கும் - தீப்போல் விளங்குகின்ற, மால் ஆழி - பெரிய சுதரிசன மென்னும் சக்கரத்தை, முன் - முன்னம், மாலினுக்கு - திருமாலுக்கு, ஈந்தான் - கொடுத்தவனும். பாலனுக்கு - உபமன்னிய முனிவனுக்கு, பாலாழி - பாற்கடலை, ஈந்தான் - ஈந்தவனுமான சிவபெருமான், பதி - இடம்.

(கு - ரை.) பாலாழி யீந்ததை - "பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கடலீந்த பிரான், மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன்" எனத் திருவிசைப்பாவாலுணர்க. முன்னிரண்டடியில் முப்பொருள் வருதல் காண்க. இது மும்மொழிச் சிலேடை. ஆக என்பது ஆ என ஈறு தொக்கது. அணி - அழகுமாம், மாதவர் காப்பு அணியாக்கொள்ளும் என்பதற்கு, விபூதியை அழகாக் கொள்ளும் எனவுங் கூறுப. (௯௩)

தந்திடையார் தோய்தடமுந் தாவுமிள வாளைகளுங்
கந்தித் தலைசேர் கலைசையே—வந்திதரும்
பிட்டுக் கலந்தார் பிராட்டிகழுத் திற்றொடையல்
இட்டுக் கலந்தா ரிடம்.

(இ - ள்.) தந்து இடையார் - நூலையொத்த இடையையுடைய பெண்கள், தோய் தடமும் - நீராடும் தடாகங்களும், கந்தித்து - பரிமளித்து, அலை சேர் - அலையோடு பொருந்தும், கலைசை—; தாவும் - தாவுகின்ற, இளவாளைகளும் - இளைய வாளை மீன்களும், கந்திதலை சேர் - கமுகின் உச்சியில் பொருந்தும், கலைசை—; வந்தி - வந்தி யென்பவள் (செம்மனச் செல்வி,) தரும் - கொடுக்கும், பிட்டுக்கு - பிட்டுணவுக்கு, அலந்தார் - ஆசையுற்றவரும், பிராட்டி-தடாதகைப் பிராட்டி, கழுத்தில்—, தொடையல்

இட்டுக் கலந்தார் - மாலையிட்டுச் சேர்ந்தவருமான சிவபெருமான், இடம்—;

(கு - ரை.) நூல் - தாமரை நூல், தோய்தல் - மூழ்குதல் - கந்தித்தல் - மணத்தல். பெண்கள் நீராடுங்கால் அவர்களணிந்த கலவைச்சாந்து தோய்தலால், 'கந்தித்து அலைசேர்' என்றார். வந்தி - மதுரையிற் பிட்டுவாணிச்சி. அலத்தல் - அங்கலாய்த்தல்; ஆசைப்படல். (௫௪)

## மும்மொழிச் சிலேடை

அங்கனையார் கையி லணிமதிலிற் றேன்பணையிற்
கங்கணமண் டுஞ்சீர்க் கலைசையே—பொங்கும்
இருபதத்த னையவரைக் கீழிருத்தி யின்பந்
தருபதத்த னையன் றலம்.

(இ - ள்.) அங்கனையார் - பெண்கள், கையில் - கைகளில், கங்கணம் - கைவளைகள், மண்டும் - பொருந்தும், சீர்க்கலைசை—; அணி மதிலில் - அழகிய மதில்களில், கம் கணம் மண்டும் - மேகக் கூட்டங்கள் நெருங்கும், சீர்க்கலைசை—; பணையில் - வயல்களில், தேன் - தேனானது, கங்கு அண்ண மண்டும் - வரம்பைப் பொருந்த நிறைந்திருக்கும், சீர்க்கலைசை—; பொங்கும் இருபது அத்தன் னைய - வலி மிகுந்த இருபது கைகளையுடைய இராவணன் வருந்த, வரைகீழ் - கைலை மலையின்கீழ், இருத்தி - (விரல் நுனி யால் அவனை) அழுத்தி, (பின்னர் அவன் சாமகீதம்பாட அவ னுக்கு) இன்பம் தருபதத்தன் ஐயன் - இன்பத்தைத் தருகின்ற திருவடிகளை யுடையவனாகிய இறைவனது, தலம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) முன்னிரண்டடியில் முப்பொருள் வருதல் காண்க. இது மும்மொழிச் சிலேடை. முன்னர் இராவணன் திக்கு விஜயஞ் செய்த ஞான்று, நந்தி யெம்பெருமான் மொழி யைக் கேளானாய்க் கயிலையைத் தூக்குங் காலத்து அதிர்ச்சி யுண்டாக, அதனால் பயந்த உமாதேவியார் பெருமானைக் கட்டிக் கொள்ள, அப்பெருமான் தம் கால் விரலால் அழுத்தினார். அம் மலையின் கீழ்ச் சிக்கிக்கொண்ட இராவணன் நசுங்கி வருந்திப் பின் சாமவேத கீதம்பாடி அருள் பெற்றான் என்பது புராண வரலாறு. (௫௫)

சூழுமிளங் காவுஞ் சுரிகுழலார் சிற்றிடையுங்
காழகமுற் றேர்கோள் கலைசையே—தாழும்
பவத்துயரப் போக்கினூர் பாலுறா தென்னைச்
சிவத்துயரப் போக்கினர் சேர்வு.

(இ - ள்.) சூழும் - சூழ்ந்துள்ள, இளம் காவும் - இளஞ் சோலைகளும், காழ் அகம் உற்று - வைரமுள்ளே முதிர்தலால், ஏர்கொள் - அழகைக் கொண்ட, கலைசை—; சுரிகுழலார் சிற்றிடையும் - சுருண்ட கூந்தலையுடைய பெண்களின் நுண்ணிய இடைகளும், காழகம் உற்று - புடைவையைப் பொருந்தி, ஏர் கொள் - அழகு கொள்ளும், கலைசை—; தாழும்-தாழ்வான, பவத் துயரம் போக்கினூர் பால் உறாது - பாவமாகிய துன்பவழியின ரிடத்துப் பொருந்தாது, என்னை—, சிவத்து உயர போக்கினர் - நன்மையில் உயர்ச்சியடையச் செலுத்தினவருமான சிவபெரு மான், சேர்வு - இடம்;

(கு - ரை.) முற்று - முற்றுதல்: முதனிலைத்தொழிற் பெயர். போக்கு - வழி, பால் - இடம்; ஏழனுருபு. சிவம் - நன்மை. (கூசு)

தேசிலகு மாவணமுஞ் செம்மைநடு வோர்மொழியுங்
காசினியா யஞ்சேர் கலைசையே—மூசியெனை
யொட்டுஞ் சடைவிரித்தா ரோங்கிவரு நீர்புகுதக்
கட்டுஞ் சடைவிரித்தார் காப்பு.

(இ - ள்.) தேசு - ஒளி, இலகு - விளங்குகின்ற, ஆவணமும் - கடை வீதிகளிலும், காசினி ஆயம் சேர் பூமியிலுள்ள பெண்கள் கூட்டம் அடைகின்ற, கலைசை—; செம்மை - மனக்கோட்டமில் லாத, நடு ஓர் மொழியும் - நடுவு நிலைமையுள்ள பெரியோர்களின் சொற்களும், காசு இல் - குற்றமில்லாத, நியாயம் சேர் - நீதி பொருந்துகின்ற, கலைசை—; என்னை மூசி - என்னை மொய்த்து, ஒட்டும் - பொருந்தியுள்ள, சடைவு இரித்தார் - துன்பத்தைக் கெடுத்தவரும், ஓங்கிவரும் - மேலெழுந்து வருகின்ற, நீர் - கங்கை யானது, புகுத - வந்துதங்குமாறு, கட்டும் சடை விரித்தார் - கட் டிய சடையினை விரித்தவருமான சிவபெருமான், காப்பு - காவ லிடம்; (எ - று.)

(கு - ரை.) நடுவர் என்பது செய்யுளில் நடுவோர் என் ருயது. சடைவு - சடைதல்; தளர்தல் என்னும் பொருள் தளர்ச்சி. (கூஎ)

பூண்டாங்கு காளையரும் பொற்கோயின் மங்கையருங்
காண்டீப மேந்துங் கலிசையே—யாண்டிரவி
பற்றகர மாட்டினார் பன்னகத்தைத் தாமரைபோ
லுற்றகர மாட்டினா ரூர்.

(இ - ள்.) பூண் தாங்கு - பூண்கள் பொருந்திய, காளையரும் ஆடவரும், காண்டீபம் ஏந்தும் - வில்லைப் பிடித்திருக்கும், கலிசை—; பொன் - அழகிய, கோயில் மங்கையரும் - கோயிற் பெண்களும், காண்தீபம் - காணப்படும் குடவிளக்கை, ஏந்தும் - ஏந்தியிருக்கின்ற, கலிசை—; ஆண்டு இரவி பல் தகர மாட்டினார் - (தக்கன் யாகஞ் செய்த) அவ்விடத்தில் சூரியன் பல்லைத் தகரும்படி அடித்தவரும், பன்னகத்தை - பாம்பை, தாமரை போல் உற்ற - தாமரை மலர்போற் பொருந்திய, கரம் ஆட்டினார்- கையினால் ஆட்டினவருமான சிவபெருமான், ஊர்—; (எ - று.)

(கு - ரை.) காண்டீபம் - வில். பன்னகம் - பாம்பு. கோயிற் பெண் - திருக்கோயிற் பணி மேற்கொண் டொழுகும் உருத்திர கணிகையர் என்னும் தாசிமார். சிவபெருமான், பாம்பாட்டிச் சித்தரானமை யுணர்க. (ருஅ)

ஞானமுடை யோருலகை நற்சிறுமி மார்குழலைக்
கானலெனக் காணுங் கலிசையே—மானமருஞ்
செங்கம லக்கரத்தார் தீரா தெனையழுத்தும்
பங்கம லக்கரத்தார் பற்று.

(இ - ள்.) ஞானமுடையோர் - சிவஞானமுடைய பெரியோர், உலகை - உலகத்தை, கானல் என - பேய்த்தேர்போல நிலையில்லாதென, காணும் - அறியும், கலிசை—; நல் சிறுமிமார் - அழகிய வாலிபப் பெண்களது, குழலை - கூந்தலை, கான் அல் என - இருட்காடென, காணும் - (ஆண்டுள்ளவர்) பார்க்கும், கலிசை—; மான் அமரும் செங்கமலம் கரத்தார் - மானேந்திய செந்தாமரை மலர்போன்ற கையினையுடையவரும், தீராது - (என்றும் விட்டு) நீங்காது, என்னை அழுத்தும் - (பிறவிக்கடலில்) என்னை அமிழ்விக்கும், பங்கம் மலக்கு - குற்றமாகிய மலமாகிய இரும்பை, அரத்தார் - (சேதிக்கும்) அரமாயிருப்பவருமான சிவபெருமான், பற்று - இடம்; (எ - று.)

(கு - ரை.) ஞானம் - சிவஞானம்; கானல் - கானல்நீர்; வெப்பின் கொடுமையால் நீர்போல் தோன்றுவது. அல் - இருள். பங்

கம் - குற்றம். மலக்கு - மலத்தை: வேற்றுமை மயக்கம்: அத்துச் சாரியையின்றி வந்தது. (௫௯)

## மும்மொழிச் சிலேடை

வாரியளிப் போர்கரமு மாதருங்கோங் கும்பூவிற்
காரிகைக்கோப் பென்னுங் கலைசையே—யாரியனைக்
கல்லா லடியுற்றார் கான்போ யருச்சுனன்கை
வில்லா லடியுற்றார் வீடு.

(இ - ள்.) வாரி அளிப்போர் கரமும் - பொருளை அளவின்றி யள்ளி (இரப்போருக்கு)க் கொடுக்குங் கொடையாளிகள் கைக ளும், பூவில் - பூமியில், காரி கைக்கு ஒப்பு என்னும் - காரி என் னும் வள்ளலுடைய கைகளுக்கு ஒப்பானவையென்று சொல்லு கின்ற. கலைசை—; மாதரும் - பெண்களும், பூவில் - செந்தாமரை மலரிலிருக்கும், காரிகைக்கு - இலக்குமிக்கு, ஒப்பு என்னும் - ஒப் பென்று சொல்லும். கலைசை—; கோங்கும் - கோங்குமலரும், பூ - பொலிவினையும், வில் - ஒளியையும், காரிகை - அழகையும் உடைய, கொப்பு என்னும் - கொப்பாகிய ஆபரணமென்று சொல்லப்படும், கலைசை—: ஆரியனை - ஆசாரியனை. கல் ஆல் அடி உற்றார் - கல்லால மரத்தின் கீழ் எழுந்தருளிய தட்சிணா மூர்த்தியானவரும், கான் போய் - காட்டிற்போய், அருச்சுனன் கை வில்லால் - அருச்சுனனது கையில்வில்லினாலே, அடி உற்றார் - அடியைப் பெற்றவருமான சிவபெருமான், வீடு—; (எ - று.)

(கு - ரை.) கொப்பு - மாதர் காதணிகளில் ஒன்று. கல் லால் - கைலையின்கணுள்ள ஒருவகை ஆலமரம். இது சுத்த மாயாசொரூபம் என்பர். மும்மொழிச் சிலேடை யிச்செய்யுள் முதலிரண்டடியினும் வருதல் காண்க. (௬௦)

செல்லோதி யார்காற் சிலம்புமவர் தோய்தடமுங்
கல்லோல மாறாக் கலைசையே—பொல்லேன்
அரங்கைக்கோ டீரத்தா னருள்வைத் தாண்ட
கரங்கைக்கோ டீரத்தான் காப்பு.

(இ - ள்.) செல் ஓதியார் கால் சிலம்பும் - மேகத்தை யொத்த கூந்தலையுடைய மகளிரின் காலிலணிந்த சிலம்புகளும், கல் - (அவற்றினுள்ள) பருக்கைக் கற்களின், ஓலம் மாறா - சத் தம் நீங்காத, கலைசை—; அவர் தோய் தடமும் - அம்மகளிர்

நீராடும் தடாகங்களும், கல்லோலம் மாறுத - அலைகள் நீங்காத, கலைசை—; பொல்லேன் - கொடியேனது, அரந்தைக் கோள் - துன்பமாகிய இடையூறு, தீர - நீங்க, ஆர் அருள் வைத்து ஆண்ட - நிறைந்த கிருபை வைத்து ஆட்கொண்ட, கரந்தை - சிவகரந்தைப் பூவைச் சூடிய, கோடீரத்தான் - சடையை யுடையவனாகிய சிவபெருமான், காப்பு - காவலிடம்; (எ - று.)

(கு - ரை.) செல் - மேகம். ஓதி - பெண்பாற் கூந்தல். மாறு - மாறுத: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கோடீரம் - சடை. தான் : அசை. (௬௧)

பூண்டகழற் காளையரும் பூந்தடத்திற் பூவையருங்
காண்டமுகந் தேறுங் கலைசையே—நீண்டசடைக்
கிந்துவளை விற்றா ரெடுத்தணிந்தார் கூடலிலே
வந்துவளை விற்றார் மனை.

(இ - ள்.) கழல் பூண்ட காளையரும் - வீரக்கழலையணிந்த கால்களையுடைய வீரரும், காண்டம் உகந்து ஏறும் - குதிரையின் மீது மகிழ்ந்து ஏறும், கலைசை—; பூ தடத்தில் - தாமரைத் தடாகங்களில், பூவையரும் - பெண்களும், காண்டம் - நீரை, முகந்து ஏறும் - மொண்டுகொண்டு (கரையில்) ஏறிவரும், கலைசை—; நீண்ட சடைக்கு - நீண்ட சடையின்கண், இந்து - சந்திரனாகிய, வளை - வளைந்த, வில் - ஒளியையுடைய, தார் - மாலையை, எடுத்து அணிந்தார் - எடுத்துச் சூடியவரும், கூடலில் - மதுரையில், வந்து வளை விற்றார் - வணிகராக வந்து வளையலை விற்றவருமான சிவபெருமான், மனை - வீடு; (எ - று.)

(கு - ரை.) இந்துதார் - சந்திரனாகிய மாலை. வளை, வில் என்பன தாருக்கு அடைகள். காண்டம் - குதிரை, நீர். சடைக்கு : உருபு மயக்கம். சடையிலணிந்த பிறையைப் "பிறைக்கண்ணி" என்பது மரபு. (௬௨)

சிட்டமுறு யோகியரும் செய்யுளல வன்பெடையுங்
கட்டளையி னாடுங் கலைசையே—யெட்டுருவாய்த்
தோய்ந்த வருக்கோளியார் சுற்றைம் பொறிவழிவிட்
டோய்ந்த வருக்கோளியா ளூர்.

(இ - ள்.) சிட்டம் உறு - பெருமை, பொருந்திய, யோகியரும் - யோகிகளும், கட்டளையில் - நியமத்தில், நாடும்-விரும்பும்,

கலைசை—; செய்யுள் - வயல்களுள், அலவன் - ஆண் நண்டும், பெடையும் - பெண்நண்டும், கட்டு அளையில் - வரம்பிலுள்ள வளைகளில், நாடும் - செல்லும், கலைசை—; எட்டு உருவாய் - அட்டமூர்த்தமாய், தோய்ந்த - பொருந்திய, அருக்கு ஒளியார் - சூரியனைப்போல் பிரகாசமுடையவரும், சுற்று - சுழல்கின்ற, ஐம் பொறி வழிவிட்டு - ஐம்புலன்கள் செல்லும் வழியினின்றும் விலகி, ஒய்ந்தவருக்கு - ஒழிந்த பெரியோர்கட்கு, ஒளியார் - தம் வடிவத்தை மறைக்காதவருமான சிவபெருமான், ஊர்—; (எ - று.)

(கு - ரை.) அலவன் - ஆண் நண்டு. செய் - வயல், பன்றி நாட்டுமொழி. எட்டுரு - மண், நீர், அனல், வளி, வான், உயிர் (ஆன்மா), செங்கதிர், தண்கதிர் என்பன. அருக்கு - பண்பாகு பெயராய்ச் சூரியனை யுணர்த்திற்று. ஐம்பொறி - மெய், வாய், கண், மூக்கு, செவி. (௬௩)

தேற்றாச் சிறாரினமுந் தேம்பொழிலு மல்குசிறு
காற்றேர் கடாவுங் கலைசையே—போற்றியன்போ
டேகுவல யத்தா ரிறைஞ்சும் படப்பாந்தள்
வாகுவல யத்தார் மனை.

(இ - ள்.) தேறு ஆ சிறார் இனமும் - தேறுதலில்லாத சிறு பிள்ளைகளின் கூட்டமும், சிறுகால் மல்கு தேர் - சிறிய உருளை பொருந்திய இரதத்தினை, கடாவும் - செலுத்தும், கலைசை—; தேம் பொழிலும் - தேன் பொருந்திய சோலைகளும், அல்கு சிறு காற்று - தங்கிய தென்றற் காற்றினால், ஏர்கள் - அழகுகள், தாவும் - பொருந்தும், கலைசை—; குவலயத்தார் - பூமியிலுள்ளோர், அன்போடு - அன்புடனே, போற்றி - துதித்து, இறைஞ்சும் - வணங்கும், படம் பாந்தள் - படத்தையுடைய சர்ப்பங்களை, வாகுவலயத்தார் - வாகுவலயமாக உடையவரான சிவபெருமான், மனை - வீடு; (எ - று.)

(கு - ரை.) தேற்றா - தேறா என்பதன் பிறவினை. தெளிவுறாத எனப் பொருள். கால் - காற்று, உருளை. பாந்தள் - பாம்பு. வாகுவலயம் - தோளணி. (௬௪)

ஆயச் சிறார்படமு மார்க்குங் கடாசலமுங்
காயத் திரியும் கலைசையே—நேயமுடன்
பைத்த பதஞ்சலியார் பார்த்துருகப் பொற்பொதுவில்
வைத்த பதஞ்சலியார் வாழ்வு.

(இ - ள்.) ஆயம் சிறார் படமும் - கூட்டமாகிய சிறுவர்களின் காற்றாடியும், காயத்து - ஆகாயத்தில், இரியும் - பறக்கும், கலைசை—; ஆர்க்கும் கடாசலமும் - பிளிறுகின்ற மதத்தைப் பொழியும் யானைகளும், காய திரியும் - பகைவரைக் கொல்லத் திரியும், கலைசை—; நேயமுடன் - அன்புடன், பைத்த - படத்தையுடைய, பதஞ்சலியார் - பதஞ்சலி முனிவர், பார்த்து உருக - கண்டு மனமுருகும்படி, பொன் பொதுவில் - பொன்னம்பலத்தில், வைத்த பதம் - ஆடவைத்த திருவடியால், சலியார் - வெறுப்படையாதவருடைய, வாழ்வு—; (எ - று.)

(கு - ரை.) காயம் - ஆகாயம்: முதற்குறை. கடாசலம் - மதநீர். பை - படம். பைத்த : குறிப்புப் பெயரெச்சம். பொதுவில் - பொது இல்; அம்பலம். (சரு)

ஒன்றுமற்றோ ரான்முலையு முண்மைநெறி கண்டோருங்
கன்றுமறந் தீர்க்குங் கலைசையே—கொன்றைமுடிக்
கங்கா தரனார் கடையேன் கவியுவக்கும்
அங்கா தரனா ரகம்.

(இ - ள்.) ஒன்றும் - பொருந்துகின்ற, மற்றோர் ஆன் முலையும் - வேறொரு பசுவின் முலையையும், கன்று மறந்து ஈர்க்கும் - வேறொரு கன்றுக்குட்டி மறந்து பால் சுவைக்க இழுக்கும், கலைசை—; உண்மை நெறி கண்டோரும் - உண்மையான ஞான மார்க்கத்தை அறிந்தவரும், கன்று - வருந்தும், மறம்-பாவத்தை, தீர்க்கும் - கெடுக்கும், கலைசை—; கொன்றைமுடி - கொன்றை மாலை யணிந்திருக்கும் முடியில், கங்காதரனார் - கங்கையைத் தரித்தவரும், கடையேன் - கீழ்ப்பட்டவனாகிய என்னுடைய, கவி - பாட்டினை, உவக்கும் - விரும்பும், அம் காது அரனார் - அழகிய காதினையுடையவருமான சிவபெருமான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) மறம் - அறத்தின் எதிர்மொழி: பாவம், அது மறுக்கப்பட்டது. ஆன் - ஆ என்பது னகரச்சாரியை பெற்று வந்தது. (சசு)

வாளரவ வல்குனல்லார் வாள்விழியு மாலயமுங்
காளமியம் புஞ்சீர்க் கலைசையே—நீள்வீணைக்
கஞ்சக் கரத்தான் கடும்பிறவி வேரறுக்கும்
அஞ்சக் கரத்தா னகம்.

(இ - ள்.) வாள் அரவம் அல்குல் நல்லார் - ஒளிபொருந் திய பாம்பின் படம்போன்ற நிதம்பத்தையுடைய பெண்களின், வாள் விழியும் - வாளையொத்த கண்ணும், காளம் இயம்பும் - விடம் தம்மிடத்துண்டென்று சொல்லும், சீர்க்கலைசை—; ஆலய மும் - கோயில்களிலும், காளம் - எக்காளம், இயம்பும் - ஒலிக் கும், சீர்க்கலைசை—; நீள் வீணை - நீண்ட வீணையை, கஞ்சம் கரத் தான் - தாமரை மலர்போன்ற கையிலுடையவனும், கடும் பிறவி - கொடிய பிறவியின், வேர் - வேரை, அறுக்கும் - களை, கின்ற, அஞ்சு அக்கரத்தான் - பஞ்சாக்கர வடிவாகவுடையவனு மான சிவபெருமான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) அரவம் : முதலாகுபெயர். காளம் இயம்பும் - நஞ்சுக்குச் சமம் என்று சொல்லும் எனலுமாம். கஞ்சம் - தாமரை; நீரில் தோன்றுவது. அஞ்சக்கரத்தான் என்பதற்கு ஐந் தெழுத்துள்ளான் எனினுமாம். அக்கரம் - எழுத்து. (சுஎ)

உத்தமர்தேர் நூனெறியு மோள்ளொளிசேர் நித்திலமுங்
கத்தங் கொழிக்குங் கலைசையே—தத்தருவி
யுற்றவரை யாள்வா ருறுதனங்க டோய்வரவா
வற்றவரை யாள்வா ரகம்.

(இ - ள்.) உத்தமர் தேர் நூல் நெறியும் - மேலோர் ஆரா யும் சாஸ்திர வழிகளும், கத்து அங்கு ஒழிக்கும் - பிதற்றுதலை அங்கே கெடுக்கும், கலைசை—; ஒள் ஒளி சேர் நித்திலமும் - மிக்க ஒளிவாய்ந்த முத்துக்களையும், கத்து அம் கொழிக்கும் - ஒலிக் கின்ற நீரானது (கரையில்) ஒதுக்கும், கலைசை : தத்து அருவி உற்ற - தாவுகின்ற நீரருவிகள் பொருந்திய, வரையாள் வார் உறு தனங்கள் தோய்வர் - மலைமகளாகிய உமாதேவியின் கச்சுற்ற கொங்கைகளைக் கலப்பவரும், அவா அற்றவரை ஆள் வார் - ஆசைநீங்கியவரை அடிமை கொள்பவருமான சிவபெரு மான், அகம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) கத்து - பிதற்றுரை. வரை - மும்மடியாகு பெயராய் மலையை யுணர்த்திற்று. வார் - கச்சு. தோய்தல் - படி தல், பொருந்துதல். (சுஅ)

பல்வகைநூ லாய்ந்தவரும் பார்த்திவர்சூட் டும்முடியுங்
கல்விரவி யேயுங் கலைசையே—வல்வினையால்
இட்ட தலையுடையா ரெண்ணத்தி னுக்கரியார்
பட்ட தலையுடையார் பற்று.

(இ - ள்.) பல்வகை நூல் ஆய்ந்தவரும் - பலவகையான நூற்களை ஆராய்ந்தவர்களும், கல்வி ரவி ஏயும் - கல்வியினாலே சூரியனை யொக்கும், கலைசை—;பார்த்திவர் சூட்டும் முடியும் - அரசர் தரிக்கும் கிரீடங்களும், கல் விரவி ஏயும் - இரத்தினங்கள் பொருந்தி விளங்கும், கலைசை—;வல்வினையால் இட்ட - தீவினையினால் பொருந்திய, தளை உடையார் எண்ணத்தினுக்கு - பந்தத்தையுடையவரது நினைவிற்கு, அரியார் - (அறிதற்கு) அருமையானவரும், பட்டு அதளை உடையார் - பட்டாடையாகப் புலித்தோலையுடையவருமான சிவபெருமான், பற்று - இடம்; (எ - று.)

(கு - ரை.) பார்த்திவர் - பூமியை விளங்கச் செய்பவர். ஏய்தல் - பொருந்தல். அதள் - தோல். "கொல்புலித்தோல் நல்லாடை" என்பது திருவாசகம். (சுகூ)

நற்றரள நீர்ச்செறுவு நாவலர்கண் முத்தமிழுங்
கற்றையவை யேறுங் கலைசையே—குற்றமில்சீ
ராவினஞ் சாடினா ரன்பிறக்கன் வேள்விபுக்க
தேவினஞ் சாடினார் சேர்வு.

(இ - ள்.) நல் தரளம் - சிறந்த முத்துக்களையுடைய, நீர் செறு உம் - நீர் தங்கிய கழனிகளும், கற்றைய வை - தொகுதியாகிய வைக்கோல், ஏறும் - அதிகமாகும், கலைசை—; நாவலர்கள் - வித்துவான்களால், முத்தமிழும் - இயல், இசை, நாடகமென்னும் மூன்று தமிழும், கற்று - கற்கப்பட்டு, ஐ - அழகு வாய்ந்த, அவை - கற்றவர் சபையில், ஏறும் - உயர்வுறும், கலைசை—: குற்றம் இல் சீர் - குற்றமற்ற சிறப்பினையுடைய, ஆவின் அஞ்சு ஆடினான் - பசுவிலுண்டான பஞ்சகவ்வியத்தில் மூழ்கினவரும், அன்பு இல் தக்கன் - அன்பில்லாத தக்கனது, வேள்வி புக்க - யாகத்திற் சென்ற, தே இனம் - தேவர் கூட்டங்களை, சாடினார் - (வீரபத்திரரால்) அழித்தவருமான சிவபெருமான், சேர்வு - சேர்ந்திருக்குமிடம் ; (எ - று.)

(கு - ரை.) செறு - வயல். கற்றை - தொகுதி. வை - வைக்கோல். "ஆவினுக்கருங்கலம் அரனஞ்சாடுதல்" என்பது காண்க. சாடுதல் - மோதுதல், அழித்தல். (எ0)

செவ்வைமனத் தன்பினருந் தென்மடுவிற் செங்கயலுங்
கவ்வையலைத் துள்ளுங் கலைசையே—கோவ்வைவாய்த்

துப்பிதழி வாமத்தார் சுற்றுசடி லத்தினறை
பப்பிதழி வாமத்தார் பற்று.

(இ - ள்.) செவ்வை மனத்து - பரிசுத்தமான மனத்தில், அன்பினரும் - அன்பினையுடைய அடியவர்களும், கவ்வை அலேத்து - துன்பத்தைக் கெடுத்து, உள்ளும் - சிவத்தியானஞ் செய்யும், கலேசை—; தென் மடுவில் - அழகிய மடுவில், செம் கயலும் - வளவிய கயல்மீன்களும், கவ்வை - ஒலிக்கின்ற, அலே - அலேயினிடத்து, துள்ளும் - தாவிப்பாயும், கலேசை—; கொவ்வை வாய் - கொவ்வைக் கனியை யொத்த வாயினையும், துப்பு இதழி - பவளத்தை யொத்த அதரத்தையுமுடைய உமாதேவியை, வாமத் தார் - இடப்பாகத்திலுடையவரும், சுற்று சடிலத்தில் - (வட்ட மாகச்) சுற்றிய சடையில், நறை பப்பு - தேன்றதும்பும், இதழி - கொன்றைப் பூவை யணிந்த, வாமத்தார் - அழகினையுடையவரு மான சிவபெருமான், பற்று - இடம் ; (எ - று.)

(கு - ரை.) தென் - அழகு, வாமம் - இடம், சுற்று சடிலம் : வினைத்தொகை. பப்பு, பம்பு என்பதன் வலித்தல் விகாரம். (எக)

சீற்றமுறு வாட்கையரும் செங்குமுதத் தேனளியுங்
காத்திரவில் வாங்குங் கலேசையே—நாத்திகமில்
நீதிக் கருத்தினர் நெஞ்சுகந்தார் கற்கரிக்கன்
றேதிக் கருத்தின ரூர்.

(இ - ள்.) சீற்றம் உறு - கோபமுடைய, வாள் கையரும் - வாளேந்திய கையையுடைய வீரர்களும், காத்திரம் வில் - பெரிய வில்லே, வாங்கும் - வளேக்கும், கலேசை— ; செங்குமுதம் - செவ்வாம்பல் மலர்களிலுள்ள, தேன் - தேனே, அளியும் - வண்டு களும், காத்து - (பகற்போதெல்லாம்) காத்துநின்று, இரவில் - இராக்காலத்தில், வாங்கும் - கொள்ளும், கலேசை—; நாத்திகம் இல் - (கடவுள்) இல்லேயென்பது இல்லாத, (உண்டென்று கொள்கின்ற), நீதிகருத்தினர் - நீதியினையுடைய மனத்தை யுடைய பெரியோரது, நெஞ்சு - மனத்தை, உகந்தார் - விரும்பின வரும், கல் கரிக்கு - கல்லானைக்கு, அன்று - அக்காலத்தில், ஓது - சொல்லப்பட்ட, இக்கு அருத்தினர் - கரும்பை யுண்ணக் கொடுத்தவருமான சிவபெருமான், ஊர்—; (எ - று.)

(கு - ரை.) காத்திரம் - பருமன் ; கனம். வாங்குதல் - வளேத்தல், கொள்ளல், நாத்திகம் - இல்லேயென்பது. கற்கரி -

கல்லானை. கல்லானைக்கு இறைவர் கரும்பு அருத்திய கதை திருவிளையாடற் புராணத்திலுள்ளது. இக்கு - கரும்பு. (எஉ)

தேம்பா விசையினருஞ் செய்ந்நீல மாளிகையுங்
காம்போதி யோதுங் கலைசையே—கூம்பா
மருப்பச் சிலையான் மகிழ்ந்திடினு மேற்கும்
பொருப்பச் சிலையான் புரம்.

(இ - ள்.) தேம் பாவு - இனிமை பொருந்திய, இசையினரும் - இசை பாடுகின்றவர்களும், காம்போதி - காம்போதியென்னுமிராகத்தை, ஓதும் - பாடும், கலைசை—; நீலம் செய் - நீலமணிகளாற் செய்த, மாளிகையும் - உப்பரிகைகளும், காம்பு ஓதி ஓதும் - மூங்கிலையுடைய மலைக்கு (ஒப்பு என்று) கூறும், கலைசை—; கூம்பா - வாடாத, மரு பச்சிலை - வாசனை பொருந்திய பச்சிலையை, யான் - நான், மகிழ்ந்து இடினும் - மகிழ்ந்திட்டாலும், ஏற்கும் - அங்கீகரிக்கும், பொருப்பு அ சிலை யான் - மேருமலையாகிய அந்த வில்லையுடையவனாகிய சிவபெருமான், புரம் - ஊர்; (எ - று.)

(கு - ரை.) காம்பு - மூங்கில். ஓதியாவது மூங்கிலை யுணர்த்தும் வரையென்னும் பெயரால் ஓதப்படுவதாகிய மலை. மரு மணம். (எங)

வஞ்சியிளம் பேதையரு மாறு திராப்பொழுதும்
கஞ்சனையைப் பார்க்குங் கலைசையே—நெஞ்சம்
உருக வழுத்துவா ரும்பரின்பத் தேனைப்
பருக வழுத்துவார் பற்று.

(இ - ள்.) வஞ்சி இளம் பேதையரும்-வஞ்சிக்கொடி போன்ற இடையினையுடைய இளம் பெண்களும், கஞ்சனையை-கண்ணாடியை, பார்க்கும் - (தங்களழகைப்) பார்த்திருக்கும், கலைசையே—; இராப்பொழுதும்-இராக்காலமும், கஞ்சம் நையை பார்க்கும் - தாமரைப் பூ நைதலைப் பார்த்திருக்கும், கலைசை—; நெஞ்சம் உருக வழுத்துவார் - மனம் கசிய துதிக்கும் அடியவரை, உம்பர் இன்பம் தேனை - மேலான சிவானந்தமாகிய தேனை, பருக - குடிக்க, அழுத்துவார் - (அதனில்) அமிழ்த்துபவராகிய சிவபெருமான், பற்று - இடம்; (எ - று.)

(கு - ரை.) கஞ்சனை - கண்ணாடி, நை என்பது நைதல் முதனிலைத் தொழிற் பெயர். நைதல் - ஈண்டுக் குவிந்து வாடுதல்.

''இராப்பகலும்'' என்ற பாடங்கொள்ளின் இராப்பகலும் கஞ்சன் மாருது ஐயைப்பார்க்கும் என்பதற்கு இரவும்பகலும் பிரமன் தவருமல் சிவபெருமானைத் தரிசிக்கும் எனக் கொள்க. (எச)

வண்டோடை யம்புயமு மாவீர ரம்புயமுங்
கண்டூதி யாருங் கலைசையே—பண்டோர்கோ
லங்கூ விளத்தா னழற்பிழம்பாய் நீண்டெழுந்த
பைங்கூ விளத்தான் பதி.

(இ - ள்.) வண்டு - வண்டுகள், ஓடை - நீரோடைகளிலுள்ள, அம்புயமும் - தாமரை மலரையும்; கண்டு - பார்த்து, ஊதி ஆரும்- ரீங்காரஞ் செய்து (அம்மலரில்) தங்கும், கலைசை—; மா வீரர் அம் புயமும் - பெருமைவாய்ந்த போர் வீரர்களின் அழகிய தோள் களும், கண்டூதி ஆரும் - (போரின்மையால்) தினவு பொருந்தியிருக் கும், கலைசை—; பண்டு - முன்னர், ஓர் கோலம் - ஒப்பற்ற திருமாலாகிய பன்றி, கூ - பூமியை, விள்ள - பிளக்க, தான் அழல் பிழம்பாய் நீண்டு - தான் (அப்போது) அக்கினித் தம்பமாக மேலுயர்ந்து, எழுந்த - ஓங்கிய, பைங் கூவிளத்தான் - பசிய வில்வத்தையுடையவனை சிவபெருமான், பதி - இடம்; (எ - று.)

(கு - ரை.) அம்புயம்-அம்புஜம் என்பதன் திரிபு. ஊதி ஆரும் என்பதற்கு மூக்கால் உழுது இரைந்து தேனை யுண்ணும் எனலு மாம். கூ - பூமி, கு என்பது நீண்டுவந்தது. கூவிளம் - வில்வம். விள - விள்ள என்பதன் தொகுத்தல். (எரு)

தண்டாச் சவுரியர்க டாக்குமடி யாருமுறு
கண்டீர வங்கூர் கலைசையே—திண்டே
ரருக்கரைக்கண் டோட்டா ரறிவிலா நெஞ்சத்
தருக்கரைக்கண் டோட்டார் தலம்.

(இ - ள்.) தண்டா - (வலிமையும், தைரியமும்) நீங்காத, சவுரியர்கள் - வீரர்களின், தாக்கும் - மோதுதலும், கண்டீரவம் - சிங்கத்தின் மோதுதல் போன்று, கூர் - மிகுந்திருக்கும், கலைசை—; அடியாரும் - அடியவர்களும், உறுகண் - துன்பத்தை, தீர - தவிர்க் கும்படி, அங்கு ஊர் - அங்கே செல்லுகின்ற, கலைசை—; திண் தேர் அருக்கர் - திண்ணிய தேரையுடைய சூரியருடைய, ஐ கண் - அழகிய கண்ணை, தொட்டார் - (தக்கன் யாகத்தில்) தோண்டின

வரும், அறிவு இல்லா நெஞ்சம் தருக்கரை - ஞானமில்லாத மனத்தையுடைய செருக்கரை, கண்டு ஒட்டார் - பார்த்து (அவரிடம்) பொருந்தாதவருமான சிவபெருமான், தலம் - இடம்; (எ- று.)

(கு - ரை.) தண்டா - தண்டாத; ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். சவுரியம்-வீரம். தொடுதல் - தோண்டுதல். "தொட்டனைத்தூறு மணற்கேணி" என்பதிற் காண்க. தருக்கு - செருக்கு.

புட்குலமு மாதரைவேள் போல்வாரு மாலையினிற்
கட்சிவந்து கூடுங் கலைசையே—வெட்சிமல
ரந்தார்க் குமரனு ரையரர வென்றிமையோர்
வந்தார்க் குமரனுர் வாழ்வு.

(இ - ள்.) புள் குலமும் - பறவைக் கூட்டங்களும், மாலையினில் - மாலைக்காலத்தில், கட்சிவந்து கூடும் - கூட்டில் வந்து சேரும், கலைசை—; மாதரை - பெண்களை, வேள் போல்வாரும் - மன்மதனையொத்த அழகினையுடைய ஆடவரும், மாலையினில் - மாலைக் காலத்தில், கண் சிவந்து கூடும் - கண் சிவக்கப் பெற்றுப் புணரும், கலைசை—; வெட்சி மலர் அம் தார் குமரனுர் - வெட்சி மலரால் தொடுத்த அழகிய மாலை அணிந்த குமரக்கடவுளது, ஐயர் - தந்தையாரும், இமையோர் வந்து - தேவர்கள் சேர்ந்து, அர என்று ஆர்க்கும் - அரகரவென்று ஒலிக்கும், அரனுர் - அரனுருமாகிய சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) குலம் - கூட்டம். கட்சி - கூடு. அரன் - அடைந்தார் பாவத்தை அழிப்பவன். சிவந்து கூடும் என்பதைச் சிவக்கக் கூடும் என எச்சத்திரிபு ஆக்கினுமமையும். (எஎ)

வீட்டினெறி தேராரும் வேதியர்வேள் வித்தழலுங்
காட்டத்தெரியுங் கலைசையே—கூட்டரண
நீறு வசித்தார்நன் னேசமிலே னெஞ்சினிற்றே
னூறு வசித்தா ருழை.

(இ - ள்.) வீட்டின் நெறி தேராரும் - முத்திமார்க்கத்தை அறியாதவரும், காட்ட - (ஆசிரியன்) காண்பிக்க, தெரியும் - (அந்நெறியைத்) தெரிந்துகொள்ளும், கலைசை—; வேதியர் வேள்வி தழலும் - பிராமணர்களின் யாகாக்கினியும், காட்டத்து எரியும் - சமிதையினுல் எரியும், கலைசை—: கூட்டு அரணம் - ஒருங்கு சேர்ந்த திரிபுரமாகிய கோட்டையை, நீறு - நீறுக, அசித்தார் -

சிரித்தவரும், நல் நேசம் இலேன் - சிறந்த அன்பில்லாதவனுகிய எனது, நெஞ்சில் - மனத்தில், தேன் ஊருக - தேனூற்றைப்போல, வசித்தார்-ஊறித்தங்கினவருமான சிவபெருமான், உறை - இடம்; (எ - று.)

(கு - ரை.) வீடு - விடுதல். தேர்தல் - அறிதல். வேள்வி - விரும்பிச் செய்யப்படுவது. காட்டம் - சமிதை; ஓமவிறகு. நீருக என்பது நீரு எனக் ககரந்தொக்கு வந்தது. ஊறு - ஊற்று. (எஅ)

கோமளமின் ஞர்முலைக்குங் கோலவத னத்தினுக்குங்
காமர் மதிவீழ் கலிசையே—நாமமரையா
மத்தி னடிப்பார் மதியைக் கலைகெடக்கோ
பத்தி னடிப்பார் பதி.

(இ - ள்.) கோமள மின்னர் - அழகு வாய்ந்த பெண்களின், முலைக்கும் - தனத்திற்கும், காமர் - மன்மதனது, மதி - புத்தி, வீழ் - விரும்பும், கலிசை—; கோலம் - அழகிய, வதனத்தினுக்கும் - (அவர்) முகத்திற்கும், காமர் மதி - அழகிய சந்திரன், வீழ் - கீழ்ப் படும், கலிசை—; நாம் அரை யாமத்தில் - அச்சத்தைத் தரும் நடு இரவில், நடிப்பார் - நடனம் செய்வாரும், மதியை கலை கெட கோபத்தின் அடிப்பார் - (தக்க யாகத்தில்) சந்திரனைக் கலை கெடும்படி கோபத்தினல் அடிப்பவருமான சிவபெருமான், பதி - தலம்.

(கு - ரை.) வதனம் - முகம். மதி - புத்தி, சந்திரன். வீழ் தல் - விரும்புதல், கீழ்ப்படுதல். நாமம் என்பது நாம் எனக் கடை குறைந்தது. நாமம் - அச்சம், (எகூ)

வார்முலையார் நன்னுதற்கும் வாவிவிடா யுற்றவர்க்குங்
கார்முகந்துண் ணென்னுங் கலிசையே—நார்மிகுத்த
வுள்ளத் திருப்பினு ருள்ளேன்றன் கன்மனத்தை
மேள்ளத் திருப்பினர் வீடு.

(இ - ள்.) வார் முலையார் நல் நுதற்கும் - கச்சை அணிந்த தனத்தினையுடைய பெண்களின் அழகிய நெற்றிக்கும், கார்முகம் துண் என்னும் - வில்லானது (யாம் ஒப்பாகோம் என்று) அச்ச மடையும், கலிசை—; வாவி - தடாகமானது, விடாய் உற்றவர்க் கும் - தாகம் உற்றவர்க்கும், கார் முகந்து உண் என்னும் - நீரை மொண்டு உண் ணென்று சொல்லும், கலிசை—; நார் - அன்பு,

மிகுத்த - மிகுந்த, உள்ளத்து இருப்பினர் - அடியார்களின் உள்ளக் கமலத்தில் எழுந்தருளி இருப்பவரும், உள்ளேன் தன் கல் மனத்தை - தம்மை நினையாத என்னுடைய கல்லைப்போலும் வன்மை வாய்ந்த மனத்தினை, மெள்ள - மெல்ல, திருப்பினர் - திருப்பினவருமான இறைவர், வீடு - இடம்; (எ - று.)

(கு - ரை.) துண் : அச்சக் குறிப்புமொழி. உண் என்னும் இஃது, ''அஃறிணை மருங்கினு மறையப் படுமே'' என்பதற் கிணங்கக் கூறுதலைக் கூறியதாகக் கூறினர் என்க. மிகுத்த என்பது மிகுந்த என்பதன் வலித்தல் விகாரம். (அ0)

நூலஞ்சு நுண்ணிடையார் நோக்கமுமம் போருகமுங்
காலஞ்ச மின்னுங் கலைசையே—கோலமுடி
வைத்தகம லத்தார் வருங்கூற்றை யஞ்ஞான்று
தைத்தகம லத்தார் தலம்.

(இ - ள்.) நூல் அஞ்சும் நுண் இடையார் - தாமரை நூலும் (கண்டு) அஞ்சத்தக்க நுட்பமாகிய இடையையுடைய பெண்களின், நோக்கமும் - பார்வையும், கால் - இயமனும், அஞ்ச - அஞ்சும்படி, மின்னும் - பிரகாசிக்கும், கலைசை—; அம் போருகமும் - தாமரைகளிலும், கால் அஞ்சம் மின்னும் - (அழகிய) காலையுடைய அன்னப் பறவைகள் விளங்கும், கலைசை—; கோலம் முடி - அழகிய திருமுடியில், வைத்த கமலத்தார் - தரித்த கங்கை நீரையுடையவரும், வரும் கூற்றை - (மார்க்கண்டனைக் கொல்லும் பொருட்டு) வந்த இயமனை, அஞ்ஞான்று - அக்காலத்து, உதைத்த கமலத்தார் - உதைத்த திருவடித்தாமரையினையுடையவருமான சிவபெருமான், தலம் - இடம்; (எ - று.)

(கு - ரை.) கால் - காலன், உயிர்களின் காலம் பார்ப்பவன். அஞ்சம் - அம்சம் என்பதன் திரிபு; அன்னம். (அக)

மைம்மாறு சிந்தையரு மாறு விதரணரும்
கைம்மாறு கொள்ளாக் கலைசையே—வெம்மான்றேல்
வீக்கு மரையன் விளிபடவேன் சஞ்சிதத்தைப்
போக்கு மரையன் புரம்.

(இ - ள்.) மை மாறு சிந்தையரும்-குற்றம் நீங்கிய மனத்தையுடையவரும், கை மாறுகொள்ளா - ஒழுக்கம் மாறுபடாத, கலைசை—; மாறு விதரணரும் - கோடாத புத்திமான்களும்,

கைம்மாறு கொள்ளா - பிரதியுபகாரத்தை ஏற்றுக் கொள்ளாத, கலிசை—; வெம்மான் தோல் - கொடிய புலித் தோலை, வீக்கும் அரையன் - கட்டும் திருவரையையுடையவனும், விளிபட - கெட, என் சஞ்சிதத்தை - என்னுடைய முன்னுள்ள வினையை, போக்கும் அரையன் - கெடுக்கும் அரசனுமான சிவபெருமான், புரம் - ஊர்; (எ - று.)

(கு - ரை.) மை - குற்றம். கை - ஒழுக்கம். தோல் வீக்குமரையன் என்றதனாலும், வெம்மான் என்றதனாலும் புலியை யுணர்த்திற்று. வெம்மா - கொடிய மிருகம். மான் என்புழி, னகரச் சாரியை. வீக்குதல் - கட்டுதல். விளிதல் - கெடுதல்; அழிதல். சஞ்சிதம் - மூவகை வினைகளில் மிச்சமாயிருக்கும் வினை. (அஉ)

பட்டாரு மிட்டிடையார் பார்வையிலுங் கோதையிலுங்
கட்டா ரிவருங் கலிசையே—யெட்டான
ஆசை யுடுக்கையா ரண்டங் கிடுகிடுக்கும்
ஓசை யுடுக்கையா ரூர்.

(இ - ள்.) பட்டு ஆரும் - பட்டாடை பொருந்திய, இட்டு இடையார் - இடுகிய இடையையுடைய பெண்களின், பார்வையிலும் - நோக்கத்திலும், கட்டாரி வரும் - வாள் செய்யும் துன்பம் போலத் துன்பம் சேரும், கலிசை—; கோதையிலும்- (அவர்கள்) கூந்தலிலும், கள் தார் இவரும் - கள்ளை உடைய மாலை பொருந்தியிருக்கும், கலிசை—; எட்டு ஆன ஆசை உடுக்கையார் - எட்டாய் உள்ள திக்கை ஆடையாக உடையவரும், அண்டம் கிடுகிடுக்கும் - அண்டங்கள் நடுங்கும், ஓசை - ஒலியினை யுடைய, உடுக்கையார் - தமருகத்தையுடையவருமான சிவபெருமான், ஊர்—, (எ - று.)

(கு - ரை.) பட்டு - பட்டாடைக்கு ஆகுபெயர். இட்டிடை - இடுகிய, சிறுத்த இடை. இடுகுதல் - தேய்தல். தார் - மாலை. ஆசை - திக்கு; திசை. திகம்பரன் என்ற பெயருங் காண்க. (அங)

அத்தார் மகவினத்தை யாட்டின் குழவைநன்கு
கைத்தாய ரேந்துங் கலிசையே—கோத்தாருஞ்
சீத வடம்புடையார் தேவி சிவகாமி
மாத வடம்புடையார் வாழ்வு.

(இ - ள்.) அ தார் மகவு இனத்தை - அந்த மாலையை(த் தரித்த) குழந்தைக் கூட்டங்களை, கைத்தாயர் - செவிலித்தாய் கள், ஏந்தும் - கையிற்றாங்கும், கலைசை—; ஆட்டின் குழவை - ஆட்டுக்குட்டிகளை, ஆயர் - இடையர்கள், நன்கு உகைத்து - நன்றாக (மேய)ச் செலுத்தி, ஏந்தும் - (பிறகு) கையிலேந்திக் கொள்ளும், கலைசை—; கொத்து ஆரும் - பூங்கொத்துகள் நிறைந்த, சீதம் அடம்பு உடையார் - குளிர்ந்த அடப்ப மலரை அணிந்துள்ளவரும், சிவகாமி மாதவள் - சிவகாமி தேவியாரென் னும் திருநாமத்தையுடைய பிராட்டியாரை, தம் புடையார் - தமது இடப்பாகத்து உடையவருமான சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) சிவகாமி தேவியார் என்பது ஈண்டு எழுந்தரு ளிய அம்மையாரின் திருநாமம். சீதம் - குளிர்ச்சி. அடப்பமல ரைத் தரித்துள்ளதனை, "வம்புநீ டலங்கன் மார்பின் வன்றொடர் வன்னி கொன்றை, தும்பைவெள் ளடம்பு திங்க டுயநீ றணிந்த சென்னித், தம்பிரா னமர்ந்த தானம் பல பல சார்ந்து தாழ்ந்து, கொம்பனு ராட வீடு கூடலை யாற்றூர் சார" எனவரும் பெரிய புராணம் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்துட் காண்க. (அஉ)

மாதர் விழிவேலும் வண்ணப் பசுங்கிளியுங்
காதை யுரைக்குங் கலைசையே—யோதிடும்பேய்
மண்டுபுறங் காட்டினர் வாணனறக் கண்ணனமர்
கண்டுபுறங் காட்டினர் காப்பு.

(இ - ள்.) மாதர் விழிவேலும் - பெண்களின் கண்களாகிய வேலும், காதை உரைக்கும் - (அவர்கள்) காதினைத் தேய்க் கும், கலைசை—; வண்ணம் - அழகுள்ள, பசுமை கிளியும் - பசிய கிளிப் பிள்ளைகளும், காதை உரைக்கும் - பிறர்கூறும் கதை களை(க் கேட்டுப் பின்) சொல்லும், கலைசை—; ஓதிடும் - சொல் லும், பேய்மண்டு புறங்காட்டினர் - பேய்கள் நிறைந்துள்ள சுடு காட்டிலுள்ளவரும், வாணன் அற - வாணாசுரன் மாள, கண் ணன் அமர்கண்டு - கண்ணன் செய்யத் தொடங்கிய போரைக் கண்டு, புறம் காட்டினர் - பின்னிட்டவருமான சிவபெருமான், காப்பு - காவலிடம்; (எ - று.)

(கு - ரை.) சிவபிரான் கண்ணனுக்கு முதுகு காட்டியது. முற்காலத்தில் கண்ணன் மைநாக மலையிற் றவஞ்செய்து சிவ

பிரான் தனக்குத் தோற்றுப் போகும்படி வரம்பெற்றதைப் பொய்க்காமல் பாதுகாத்தற் பொருட்டு. இதனை,

"இருள்குடி யிருந்தபுன் மனத்தி னீங்கிவன்
முரணினை யடக்கவே போலு முந்தைநாட்
செருவகத் தெம்மினுந் திறல்கொள் வாயென
வரமளிக் கெம்பிரான் வழங்குஞ் சூழ்ச்சியே."

எனவரும் காஞ்சிப் புராணம் வாணீசப்படலம் பதினேழாவது செய்யுளான் உணர்க. காதையுரைக்கும் என்பதற்குக் கொல்லுதலை யறிவிக்கும் எனலுமாம், காது - காதுதல்: முதனிலைத் தொழிற் பெயர். புறங்காடு : இலக்கணப் போலி. (அரு)

அஞ்சநடையார் மொழியி லையிளைஞர் மெய்யிலுருக்
கஞ்சுகஞ்சே ரின்பக் கலைசையே—யஞ்சக்
கிளத்தலை யோட்டினர் கேதமற நாயே
னுளத்தலை யோட்டின ரூர்.

(இ - ள்.) அஞ்சம் நடையார் - அன்னத்தின் நடைபோன்ற நடைவாய்ந்த பெண்களின், மொழியில் - சொல்லில், உருக்கம் சுகம்சேர் - அன்பும் சுகமும் சேர்ந்திருக்கின்ற, இன்பக் கலைசை—: ஐ இளைஞர் மெய்யில் - அழகிய சிறுவர்களின் தேகத்தில், உரு கஞ்சுகம் சேர் - அழகிய சட்டை சேர்ந்திருக்கின்ற, இன்பக் கலைசை—; அஞ்ச கிள் அ தலையோட்டினர் - (பிரமன்) அஞ்சும்படி கிள்ளிய அந்தத் தலையோட்டினையுடையவரும், கேதம் அற - துன்பம் நீங்க, நாயேன் உளத்து - அடியேன் மனத்துள், அலை ஓட்டினர் - அலைதலைப் போக்கினவருமான சிவபெருமான், ஊர்—; (எ - று.)

(கு - ரை.) உருக்கம் - அன்பு; மனவுருக்கமுமாம். உரு - அழகு. அலை : முதனிலைத்தொழிற் பெயர். அலைதல் - வருந்தித் திரிதல். (அசு)

வாணுதலார் பூணுமவர் மையலுறப் பட்டோருங்
காணத் தணியுங் கலைசையே—யேணிவளர்
கையா னடத்தினன் கங்காளன் சங்கரன்வெண்
மையா னடத்தினன் வாழ்வு.

(இ - ள்.) வாள் நுதலார் பூணும் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய பெண்களின் ஆபரணமும், காணத்து - பொன்னினால் செய்யப்பட்டு, அணியும் - அலங்கரிக்கப்பட்டிருக்கும், கலைசை—; அவர் மையல் உறப்பட்டோரும் - அப் பெண்களின், மையலில் அகப்பட்டோரும், காண - (அப் பெண்கள் சிறப்பாகப்) பார்க்க, தணியும் - (அம்மையல்) அடங்கும், கலைசை—; ஏணிவளர் கையான் - மான்பொருந்திய கையையுடையவனும், நடத்தினன் - நடனத்தையுடையவனும், கங்காளன் - முழு எலும்பையணிந்தவனும், சங்கரன் - சுகத்தைச் செய்பவனும், வெண்மை ஆன் நடத்தினன் - வெண்மைநிறமுள்ள இடபத்தை நடத்தினவனுமான சிவபெருமான், வாழ்வு - வாழுமிடம்; (எ - று.)

(கு - ரை.) காணத்து அணியும் - பொற்காசினாலணியும் எனினுமாம். காணம் - பொன்; பொற்காசுமாம். அத்து:சாரியை. அணியும் - அணியப்படும் எனக் கோடலும் ஒன்று. ஏணி - மான். கங்காளம் - முழு எலும்பு. சங்கரன் : காரணக்குறி. சம் - சுகத்தை, கரன் - செய்பவன். (அஎ)

மாணிலைமை வாய்மையரும் வாய்ந்தவிழா விண்ணவருங்
காணியவந் தோயாக் கலைசையே—ஆணவமாம்
பாம்புயங்க வாட்டினார் பைம்பொற் பொதுவரங்கின்
மேம்புயங்க வாட்டினார் வீடு.

(இ - ள்.) மாண் நிலைமை வாய்மையரும் - மாட்சிமை தங்கிய நிலைமையையுடைய உண்மையாளரும், காணி - காணியளவேனும், அவம் தோயா - தீமை பொருந்தப்பெறாத, கலைசை— ; விண்ணவரும் - தேவர்களும், வாய்ந்த விழா - பொருந்திய திருவிழாவை, காணிய வந்து ஓயா - தரிசிக்கும்படி வந்து நீங்காத, கலைசை—; ஆணவமாம் பாம்பு உயங்க வாட்டினார் - (எனது) ஆணவமாகிய பாம்புவருந்த வாட்டினவரும், பைம்பொன் பொது அரங்கில் - பொன்னம்பலத்தில், மே புயங்கம் ஆட்டினார் - மேலான புயங்கமென்னும் கூத்தையுடையவருமாகிய சிவபெருமான், வீடு—;

(கு - ரை.) தோயா - பொருந்தாத; ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். விழா - திருவிழா. பைம்பொன் பொது அரங்கு - பசிய பொன்னாலமைந்த யாவர்க்கும் பொதுவாகிய ஞானசபை. மே - மேலான; உரிச்சொல். (அஅ)

வேரிமலர்ப் பண்ணையிலு மெய்ச்செல்வர் மந்திரமும்
காரணக்கூ ழோங்குங் கலைசையே—வீரமெல்லாம்
மாளத் திகிரியான் மார்பொருவ னைப்பிளந்த
காளத் திகிரியான் காப்பு.

(இ - ள்.) வேரிமலர் பண்ணையிலும் - தேன்பொருந்திய மலர்களையுடைய வயல்களிலும், கார் அண்ண - மேகம்பெய்த தால், கூழ் - பயிர்கள், ஓங்கும் - உயர்ந்துவளரும், கலைசை—; மெய் செல்வர் மந்திரமும் - அழியாத செல்வத்தையுடைய தன வான்களின் வீடுகளிலும், காரணம் கூழ் ஓங்கும் - (அறத்திற்கும் இன்பத்திற்கும்) காரணமான பொன் அதிகரித்திருக்கும், கலைசை—; ஒருவனை - சலந்தராசுரன் என்பவனை, வீரம் எல்லாம் மாள - வீரமெல்லாமழிய, திகிரியால் - சக்கராயுதத்தால், மார்பு- (அவனது) மார்பை, பிளந்த—; காளத்தி கிரியான் - காளத்தி மலையையுடையவனது, காப்பு - காவலிடம்; (எ - று.)

(கு - ரை.) இனி, மேகமண்டலத்தை அண்ணும்படி பயிர்கள் உயர்ந்துவளரும் எனினுமாம், அண்ண என்பது அண எனத் தொகுத்தலாயிற்று. முன்னதற்கு அண்ணுதல் பெய்தல் மேற்று. பின்னதற்கு அண்ணுதல் - கிட்டுதல். கூழ் - பொன். இனி, தேகம் நிலைபெறுதற்குக் காரணமான உணவுமாம். கூழ் - உணவு. அறத்தின் வழி ஈட்டிய பொருளுடையராதலின், 'மெய்ச்செல்வர்' என்றார். (அகூ)

தூக்கணங்கன் ஞர்திருக்குந் தூக்குரைக்கு மாக்கணமுங்
காக்கணங்க ளாருங் கலைசையே—தாக்கணவும்
ஆதிவரா கத்தா னளப்பரிய சேவடியான்
மாதிவரா கத்தான் மனை.

(இ - ள்.) தூக்கு அணங்கு அன்னார் - உயர்ச்சியையுடைய தெய்வப்பெண்களை யொத்த மகளிரின், திருக்கும் - கண்களும், காக்கணங்கள் ஆரும் - காக்கணம் பூக்களை யொத்திருக்கின்ற, கலைசை—; தூக்கு உரைக்கும் மா கணமும் - பாட்டினைப்பாடும் வண்டின் கூட்டங்களும், காக்கண் அம் கள் ஆரும் - சோலை யிடத்து அழகிய தேனை யுண்ணும், கலைசை—; தாக்கு அணவும் - மோதுதலைப் பொருந்திய, ஆதிவராகத்தான் - ஆதிவராக மூர்த்தி யான திருமால், அளப்பரிய சேவடியான் - தேடி அளத்தற்கரிய செவந்த திருவடியையுடையவனும், மாது இவர் ஆகத்தான் -

உமாதேவி பொருந்திய தேகத்தையுடையவனுமான சிவபெருமான், மனை - இடம்; (எ - று.)

(கு - ரை.) தூக்கு - உயர்ச்சி; "அவனினுமிவன் தூக்கு" என்பதிற்போல. திருக்கு - கண். 'தூக்கு உரைக்கும்' என்புழித் தூக்கு - பாட்டு; "தூக்கென்ப பாட்டுங் கூத்துந் துலாமு மாராய் தலும்பேர்" என்பதனுலறிக. அம் - அழகு, ஈண்டு இனிமை மேற்று. தாக்கு - தாக்குதல்; முதனிலைத் தொழிற் பெயர், திருமால் ஆதிவராக மூர்த்தியாயது அண்டங்களைத் தாங்கும்படி எடுத்ததே யன்றியும், பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துச் சென்ற இரணியாட்சனைக் கொல்லும்படியும் எடுத்த அவதாரமாயிருக்க, பிரம விட்டுணுக்களுக்குப் போர் நேர்ந்தபோது எடுத்த பன்றியின் உருவத்தை ஒற்றுமை நயத்தால் குறிப்பிக்க, "ஆதிவராகத்தான்" என்ருர். (௬0)

ஆனகரு மேதிகளு மாயுமிசை யோருமிக்குக்
கான முழக்குங் கலைசையே—மானமறப்
பற்றிப் பரசினுர் பாசத் தளைகளையும்
வெற்றிப் பரசினுர் வீடு.

(இ - ள்.) கரு ஆன மேதிகளும் - கருமையான எருமைகளும், இக்கு கானம் - கருப்பங்காட்டை, உழக்கும் - கலக்கி மிதிக்கும், கலைசை—; ஆயும் இசையோரும் - இசை நூலை யாராய்கின்ற இசைவல்லோரும், மிக்கு கானம் முழக்கும் - மிகுந்து இசைப் பாட்டினைப் பாடும், கலைசை—; மானம் அற - அபிமானம் நீங்க, பற்றி - அன்பு பொருந்தி, பரசினுர்-துதித்தவருடைய, பாசத்தளைகளையும்-பாசபந்தத்தை யொழிக்கின்ற, வெற்றி பரசினுர்-வெற்றி பொருந்திய மழுவாயுதத்தை யுடையவருமான சிவபெருமான், வீடு—; (எ - று.)

(கு - ரை.) இக்கு - கரும்பு. மானம் - அபிமானம்; தேகாபிமானமுமாம். (௬க)

செம்மலர்ப்பூம் பொய்கைகளும் தேம்பொழிலிற் கோண்மூ
கம்மிக் குலாவுங் கலைசையே—தம்மையறி [வுங்
தொண்ட ருளக்கமலர் தோத்திரஞ்செய் வாரன்பு
கண்ட ருளக்கமலர் காப்பு.

(இ - ள்.) செம்மலர் பூ பொய்கைகளும் - செந்தாமரைப் பூக்கணிறைந்த அழகிய தடாகங்களும், கம் மிக்கு உலாவும் - நீர் மிகுந்து அசையும், கலைசை—; தேம்பொழிலில் கொண்மூவும் - தேன் ஒழுகும் சோலையினிடத்துள்ள மேகமும், கம்மி - நெருங்கி, குலாவும்-சஞ்சரிக்கும், கலைசை—; தம்மை அறி - தம்மையுணர்ந்த, தொண்டர் உளம் கமலர் - அடியார்களின் இருதயத் தாமரையில் எழுந்தருளி யிருப்பவரும், தோத்திரஞ் செய்வார் - துதிசெய்யும் அடியார்களின், அன்பு கண்டு அருள் - அன்பினைப் பார்த்து (அவர்களுக்கு) அருள் செய்யும், அக்கு அமலர்-என்பு மாலையணிந்த பரிசுத்தமானவருமான சிவபெருமான், காப்பு—; (எ - று.)

(கு - ரை.) தேன்பொழில்-தேம்பொழில் என்றாயதை, "தேன் மொழி.........வலிவரின், ஈறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி" என்பதனு லறிக. தேம் - வாசனையுமாம். கொண்மூ - மேகம். கம்முதல் - நெருங்குதல். தம்மை என்றது - சிவபெருமானை. அக்கு அமலர் என்பதற்குத் திருக்கண்ணுக்குடைய மலரகிதர் எனினுமமையும். (கூ௨)

திங்கணுத லார்குழலிற் செந்தேன் கழனியிற்சேர்
கங்கங் கறுக்குங் கலைசையே—கொங்கிமயக்
கோம்பா ரிடத்தினர் குண்டுவயிற் றுக்குறுந்தாள்
வெம்பா ரிடத்தினர் வீடு.

(இ - ள்.) திங்கள் நுதலார் குழலில் - அட்டமிச் சந்திரனை யொத்த நெற்றியையுடைய பெண்களின் கூந்தலில், சேர்கங்கம் கறுக்கும் - சேர்ந்த சீப்புகள் கறுக்கின்ற, கலைசை—; கழனியில் - வயல்களில், செந்தேன் - சிவந்த தேன், சேர் கங்கு - சேர்ந்த கரையை, அறுக்கும் - (பெருகிவழிந்து) அறுக்கும், கலைசை—; கொங்கு இமயம் கொம்பு ஆர் இடத்தினர் - இயற்கைமணம் வீசும் இமயமலையிற் பிறந்த பூங்கொம்பினையொத்த இடையினையுடைய உமாதேவியார் பொருந்திய இடப்பாகத்தையுடையவரும், குண்டு வயிறு குறு தாள் - ஆழ்ந்த வயிற்றினையும் குறுகிய கால்களையு முடைய, வெம்பாரிடத்தினர் - கொடிய பூதப் படையையுடைய வருமாகிய சிவபெருமானது, வீடு—; (எ - று.)

(கு - ரை.) அங்கு : அசை. இனி, வயல்களில் நிறைந்துள்ள செந்தேன் அவ்வயலிடத்துப் பெருகிவந்து கரையை அறுக்கும் எனினும் அமையும். பாரிடம் - பூதகணம். (கூங)

எட்டுறுபோ கத்தாரு மீர்ங்குமுத முஞ்செய்ய
கட்டிலணை யிற்சேர் கலைசையே—உட்டியா
னத்துவ சத்தினுர் நாயேனை யாண்டவிட
பத்துவ சத்தினுர் பற்று

(இ - ள்.) எட்டு உறு போகத்தாரும் - எட்டாக வுற்ற போகத்தை யுடையவரும், செய்ய கட்டில் அணையில் சேர் - செப்பமான கட்டிலிலிட்ட மெத்தையில் கூடுகின்ற, கலைசை—; ஈர் குமுதமும் - குளிர்ச்சி பொருந்திய குமுதமலரும், செய் அகட்டில் - கழனியின் மத்தியிலும், அணையில்சேர் - கரையிலும் தங்கியிருக்கும், கலைசை—; உள் தியானத்து வசத்தினுர் - மனத்தினகத்துச் செய்யும் தியான வசமா யிருப்பவரும், நாயேனை ஆண்ட - நாயினும் கடைப்பட்ட என்னை ஆட்கொண்ட, இடப துவசத்தினுர் - இடபக்கொடியை யுடையவருமான சிவபெருமான், பற்று—;

(கு - ரை.) எட்டுறு போகமாவன-பெண், அணிகலம், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கிதம், பூவமளி, போசனம் என்பன. (கூச)

மைப்பறழ்க்குக் கோவலரு மங்கையர்சொற் குக்குயிலுங்
கப்பங் கொடுக்குங் கலைசையே—துப்புறுங்கூர்
மத்தோ டணிவார் வளையிழைத்துச் சேர்த்ததவ
ளத்தோ டணிவா ரகம்.

(இ - ள்.) மை பறழ்க்கு - ஆட்டுக்குட்டிகளுக்கு, கோவலரும் - இடையர்களும், கப்பு - மரக்கிளைகளை, அங்கு ஒடுக்கும் - மேய்க்குமிடத்து (இலையை யருந்தும்படி) வளைத்துக் கொடுக்கும், கலைசை—; மங்கையர் சொற்கு - பெண்களின் சொல்லுக்கு, குயிலும் - குயில்களும், கப்பம் கொடுக்கும் - (தோற்றுத்) திறை கொடுக்கும், கலைசை—; துப்பு உறும் - வலிமை பொருந்திய, கூர்மத்து ஓடு - திருமாலாகிய ஆமையின் ஓட்டையும், அணி வார் வளை - அழகிய நேர்மையுள்ள சங்கை, இழைத்துச் சேர்த்த - இழைத்துச் சேர்க்கப்பட்ட, தவளம் தோடு - வெண்மையாகிய தோட்டையும், அணிவார் - தரிப்பவராகிய சிவபெருமானது, அகம் - இடமாம்; (எ - று.)

**(கு - ரை.) மை - ஆடு. பறழ் - குட்டி. இழைத்தல் - சீவக. தோடு - குழை. இதனை இருமுடிபாக்கி அணிவார், அணிவார் என முடிப்பர், அவர் மடக்கு நயம் கருதார் போலும். (கூரு)**

சுந்தரஞ்சே ராடவருஞ் சூதுமுலை யார்குழலுங்
கந்தனையே யொக்குங் கலைசையே—பந்தஞ்
சிதையத் துதியார் திறங்கண் டவர்தம்
இதையத் துதியா ரிடம்.

(இ - ள்.) சுந்தரம் சேர் ஆடவரும் - அழகு பொருந்திய புருடர்களும், கந்தனையே ஒக்கும் - (அழகு முதலியவற்றால்) முருகனையே ஒப்பாகும், கலைசை—; சூதுமுலையார் குழலும் - சொக்கட்டான் கருவியை யொத்த தனத்தையுடைய பெண்களின் கூந்தலும், கம் தனை ஒக்கும் - மேகத்தை ஒத்திருக்கும், கலைசை—; பந்தம் சிதைய துதியார் திறம் கண்டு - மலபந்தம் சிதையும்படி துதி செய்யாதவர் தன்மை கண்டு, அவர்தம் இதையத்து உதியார் - அவருடைய மனத்திலே தோன்றாதவரது, இடம் - இடமாகும்; (எ - று.)

(கு - ரை.) இந்தக் கலைசை நகரத்திலுள்ள ஆடவர்கள் வனப்பிலும், அறிவிலும், வலிமையிலும், கருணையிலும் சிறந்தவர்கள் என்பார், 'கந்தனை யொக்குங் கலைசையே' என்றார்.
இதனை,

"திருவி ளங்கிய வனப்பினி லறிவினிற்
றிறத்தினி லருடன்னில்
ஒருவர் தங்களை யுயர்த்தமுன் முருகனை
யுவமையாக் குவரன்னான்"

என வருந் தணிகைப் புராணச் செய்யுளா னுணர்க. சூது-சொக்கட்டான்காய். கம்-மேகம். பந்தம்-மலபந்தம்; அவை ஆணவம், மாயை, காமியம். (கூகூ

எண்ணேற்ற வுத்தமரு மெண்டிசையுங் காரிகையார்
கண்ணோட்டஞ் செய்யுங் கலைசையே—பண்ணார்
சுருதிமா வாக்கினார் சுற்றுநரி யெல்லாங்
கருதிமா வாக்கினார் காப்பு.

(இ - ள்,) எண் ஏற்ற - ஆராய்ச்சியுற்ற, உத்தமரும் - பெரியோர்களும், கண்ணோட்டம் செய்யும் - (பிறவுயிர்கள் மாட்டுத்) தாட்சண்ணியம் செய்யும், கலைசை—; எண்திசையும் - எட்டுத் திசையிலும், காரிகையார் கண் - பெண்களின் கண்கள், ஓட்டம் செய்யும்-ஓடுதலைச்செய்யும், கலைசை—; பண் ஆர் - இசைபொருந்திய, சுருதி மா வாக்கினார் - வேதமகாவாக்கியத்தையுடையவரும்,

சுற்றும் - (காட்டில்) திரியும், நரி எல்லாம் - நரிகளை யெல்லாம், கருதி - நினைத்து, மா ஆக்கினர் - குதிரையாகச் செய்தவருமான சிவபெருமான், காப்பு - காக்குமிடம்; (எ - று.)

(கு - ரை.) கண் ஓட்டம் - கண் ஓடுதல். ஓடுதலாவது ஒரு நிலையினின்று பாராது விரைந்து செல்லுதலாம். மா - சிறப்பு, குதிரை. நரியைப் பரியாக்கிய சரிதத்தைத் திருவிளையாடற் புராணத்துட் காண்க. (கஎ)

பம்புபெரும் பாக்கியரும் பஞ்சவனக் கிள்ளையும்பூக்
கம்பலத்தி லேறுங் கலைசையே—உம்பரெல்லாம்
வந்தித்த வக்கரையார் மாதுசிவ காமிபங்கர்
பந்தித்த வக்கரையார் பற்று.

(இ - ள்.) பம்பு பெரும் பாக்கியரும் - நிறைந்த பெரிய தனவந்தர்களும், பூ கம்பலத்தில் ஏறும் - அழகமைந்த கம்பலத்தில் ஏறியிருக்கும், கலைசை—; பஞ்சவன்னம் கிள்ளையும் - பஞ்சவர்ணக் கிளிப்பிள்ளைகளும், பூக்கம் பலத்தில் ஏறும் - பாக்கு மரத்தின் குலைப்பழத்தில் ஏறியிருக்கும், கலைசை—; உம்பர் எல்லாம் - தேவர்களெல்லாம், வந்தித்த - துதித்த, வக்கரையார்-திருவக்கரை என்னும் திருப்பதியை யுடையவரும், மாது சிவகாமி பங்கர் - மாதாகிய சிவகாமியை இடப்பாகத்தி லுடையவரும், பந்தித்த அக்கு அரையார் - வரிசையாகக் கட்டிய சங்குமணியை திருவரையிலுடையவருமான சிவபெருமான், பற்று - பற்றுமிடம்; (எ - று.)

(கு - ரை.) வக்கரை - ஒரு திருப்பதி. அக்கு - சங்குமணி. பூகம், பூக்கம் எனப் பாக்கு மரத்திற்கொரு பெயர். பூக்கம்பலம் - பூத்தொழிலமைந்த கம்பளம் எனினுமாம். (கஅ)

தண்டிகையே றுஞ்செல்வர் தம்மார்பு நன்மடமுங்
கண்டிகையா ரங்கூர் கலைசையே—வண்டுளருந்
தண்டுளசித் தாமத்தன் ருரமா கப்புணர்ந்த
பண்டுளசித் தாமத்தன் பற்று.

(இ - ள்.) தண்டிகை ஏறும் - பல்லக்கில் ஏறும், செல்வர் தம் மார்பும் - தனவந்தர்களுடைய மார்பும், கண்டிகை ஆரம் - கண்டிகை மாலை, கூர் - மிகுந்திருக்கும், கலைசை—; நல் மடமும் - (அவர்களுடைய) சிறந்த வீடுகளும், கண் திகை ஆரம் - கண்களைக் கூசும்படி செய்யும் முத்துக்கள், கூர் - (இழைக்கப்பெற்று) ஒளி

வீசும், கலைசை—; வண்டு உளரும் - வண்டுகள் கிண்டும், தண் துளசி தாமத்தன் - குளிர்ச்சி வாய்ந்த துளசி மாலையைத் தரித் துள்ள திருமாலை, தாரமாகப் புணர்ந்த - மனைவியாகச் சேர்ந்த, பண்டு உள - அநாதியான, சித்து ஆம் அத்தன் - ஞானமே உருவமாகிய இறைவனது, பற்று - பற்றுமிடம்; (எ - று.)

(கு - ரை.) செல்வர்தம் மார்பும், கண் திகைக்கும்படியான முத்துமாலை மிகுந்திருக்கும் எனவும், மடமும், உருத்திராக்க மாலையையுடைய அடியார்கள் அங்கே செல்லும் எனவும் கூறுப. ஆரம் - முத்துமாலை, பதக்கமுமாம். கண்டிகையார்-உருத்திராக்க மாலையையுடைய அடியார்கள். கண்டிகை - உருத்திராக்கம். சித்து ஆம் அத்தன் - சித்துப்பொருளாகிய உயர்ந்தோன். சித்து-ஞானம். (௬௬)

ஐவாய வேட்கை யகன்றவரு மாகதருங்
கைவாரஞ் செய்யுங் கலைசையே—மெய்வாழ்வு
நண்ணியபி ராமிதிரு நாடோறும் போற்றிடுஞ்சேற்
கண்ணியபி ராமிபங்கர் காப்பு.

(இ - ள்.) ஐவாய வேட்கை - ஐவகை யிந்திரிய வாயிலாக வரும் ஆசை, அகன்றவரும் - நீங்கிய முனிவர்களும், கை வாரம் செய்யும் - தவவொழுக்கத்துடன் அன்பும் செய்யும், கலைசை—; மாகதரும் - அரசரின் புகழினையெடுத்துக் கூறுபவரும், கைவாரம்-கரகோஷம், செய்யும்—; கலைசை—; மெய்வாழ்வு - அழியாச் செல்வத்தை, நண்ணிய - அடைந்த, பிராமி - கலைமகளும், திரு-அலைமகளும், நாடோறும் போற்றிடும் - தினந்தோறும் துதிக்கும், சேல்கண்ணி - சேல்மீனை யொத்த கண்ணையுடையவளாகிய, அபி ராமி பங்கர் - உமையம்மையை இடப்பாகத்தில் வைத்திருப்பவ ராகிய சிவபெருமானது ; காப்பு—; (எ - று.)

(கு - ரை.) மாகதர் கைவாரம் செய்யும் என்பதற்கு மாக தர் முறையாக வாரமென்னும் பாடலைப் பாடுதல் செய்யும் என வும் கூறுப. வாரமாவது சொல்லொழுக்கமும் இசையொழுக்கமு முடைய பாடல். பிராமி - சரஸ்வதி; பிரமசம்பந்தம் என்க. அபி ராமி - அழகுடையவளாகிய உமாதேவி; அபிராமம் - அழகு. மாக தர்-பாணர்; இருந்து ஏத்துவோர். (வந்திகர்-நின்றுஏத்துவோர்.)

வாழியதோட் டிக்கலையூர் வாழி சிவகங்கை
வாழி சிவகாமி வல்லியேந்தாய்—வாழி
புகழ்ச்சிதம்ப ரேசரருள் போற்றுமவ ரன்பர்
மகிழ்ச்சியுடன் வாழி வளர்ந்து.

# கலிசைச் சிலேடை வெண்பா

## செய்யுள் முதற் குறிப்பகராதி

கழக வெளியீடு : ககளங

உ

# திருக்கழுக்குன்றச்
# சிலேடை வெண்பா

(விளக்கவுரையுடன்)

ஆசிரியர் :
காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார்
உரையாசிரியர் :
பண்டித வித்துவான், தி. சங்குப் புலவர்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
திருநெல்வேலி - 6. சென்னை - 1.
1964

# பதிப்புரை

தமிழகத்து வாழ்ந்த சான்ருேர் புலவர் பெருமக்களாற் பண்டைக் காலமுதல் இன்றளவும் பாடப்படும் இலக்கியங்கள் இருவகைப்படும். சொற்ருெடர்நிலே, பொருட்டொடர்நிலே என்பன. சொற்ருெடர்நிலே என்பது அந்தாதி கலம்பக முதலாகிய நூல்கள். சொல்லாற்ருெடர்ந்து நிற்பன இவைகள். பொருட்டொடர் நிலேயென்று புகலப்படுவன பொருளால் (வரலாற்ருல்) தொடரப்பட்ட நூல்கள்; அவை சிந்தாமணி, சிலப்பதிகாரம் போல்வன. தொண்ணூற்ருறு வகை (பிரபந்தங்கள்) இலக்கியங்கள் என்று சொல்லப் படுவன இவையே. அகலக்கவி, வித்தாரகவி என விளம்பப் படுவனவும் இவையே.

ஊர்நேரிசை, ஊர்இன்னிசை, ஊர்வெண்பா என முன்ளிற் பெயர்பெற்ற சிற்றிலக்கியங்கள் சிறிது வேறுபட்டுச் சிலேடைவெண்பா என வழங்கப்படுகின்றது போலும். இக்காலத்துத் தமிழகத்துத் தோன்றிய சிலேடைவெண் பாக்கள் எண்ணிறந்தன. மறைந்தன பல. அச்சிற் பதிப்பிக்கப்பெற்று நிற்பனசில. கலேசைச்சிலேடை, சிங்கைச் சிலேடை, மதுரைச் சிலேடை, திருக்கழுக்குன்றச்சிலேடை, நெல்லேச்சிலேடை வெண்பா போல்வன காணலாம். இவற் றுள் உரை கண்டன சில; உரை காணப்படாதன பல; குறிப்புரையுடன் கூடியுள்ளன சில. உரையும் விளக்கமும் இருந்தாலன்றிப் பயன்படாத நூல்கள் சிலேடை வெண்பா. ஒவ்வொன்ருகக் கண்டு கண்டு உரை வரைந்து பதிக்கத் தொடங்குகின்ருர் பயன்பட வாழும் ஆன்ருேர் சிலர்.

'திருக்கழுக்குன்றச் சிலேடைவெண்பா' என்பது ஒரு சிறந்த நூல். திருக்கழுக்குன்றம் என்னும் தலமுஞ் சிறந்தது, சமயகுரவர் நால்வரானும் பாடல் பெற்றுள்ளது ஆதலின், அந்நூலேப் பாடிய புலவர் பெருமானும் சிறப் புடையவர்; காஞ்சீபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் எனப்பேர் பெற்றுப் புலவராற் பாராட்டப்பட்ட

புகழுடையவர். இந்நூலின் பெருமையை அறிந்தே டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் இந்நூற்குக் குறிப்புரை வரைந்து பதிப்பித்தனர் என இந்நூற்கு அவர் வரைந்த முகவுரையால் அறிகின்றோம்.

'திருக்கழுக்குன்றச் சிலேடைவெண்பா' என்னும் இந்நூல் 1933 ஆம் ஆண்டில் குறிப்புரையுடன் வெளிவந்த தன்றிப் பின்னர்ப் புதுக்கியதாக இதுகாறும் அறிந்திலம். நம் கழகம் இதனை நன்முறையிற் பதிப்பித்து வெளியிடக் கருதிற்று; பலரும் பயன்பெறச் செய்தலே நோக்கம் ஆதலின், கழகப் புலமையாளர் சங்குப் புலவரால் சொற் பொருள் விளக்கமேற்கோள் உரை வரைவித்து இந்நாள் கழக வெளியீடாக இது வெளியேறுகின்றது. வெண் பாக்கள் ஒவ்வொன்றுஞ் சீர்பிரிக்கப்பட்டுப் புணர்ச்சி விதிப்படி பொருத்திப் பிழை களைந்து திருத்திப் புதுமுறை யாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இலக்கணக் குறிப்பும் அத் தலபுராண வரலாற்றுக் குறிப்பும் இடையிடையே வேண்டுமிடங்களில் வரையப்பட்டுள்ளன. தமிழ்நூல் பயில்வார்க்குப் பெரும் பயன் விளைக்கும் என்பது ஒருதலை.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்**

# முன்னுரை

## திருக்கழுக்குன்றச் சிறப்பு

திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா என்னும் இந் நூல் காஞ்சீபுரம் மகாவித்வான் சபாபதி முதலியாரவர்களால் இயற்றப்பட்டது. சிறந்த கழுக்குன்றம் என்னும் தலத்தைக் குறித்த சிலேடை என்னும் அணியமைந்த வெண்பாக்களால் யாக்கப்பட்ட நூல் என்பது பொருளாம். கழுக்குன்றம் என்பது தொண்டை நாட்டுத் தலங்களுட் சிறந்த தொன்று. சமயகுரவர் நால்வரானும் பாடப்பட்ட திருப்பதிகங்களையுடையது. ஒருவர் பாடல் பெற்றது; இருவர் பாடல் பெற்றது; மூவர் பாடல் பெற்றது. நால்வரானும் பாடல் பெற்றது எனப் பல தலங்கள் காணப்படுதலின் இது சிறந்ததொன்று என்பது தானே விளங்கும். அந்தகக்கவி வீரராகவ முதலியார் என்னும் தெய்வப் புலமைக் கவிஞர் கோமானு லியற்றப்பட்ட சொற்சுவை பொருட்சுவை மலிந்த தல புராணமும் இதற்கு வாய்த்துள்ளது. பல புலவர்கள் பாடிய தனிப்பாடல்களும் உள்ளன. இத்தலத்தின் பெருமை புராணங்கள் பலவற்றிலும் புகலப்பட்டுள்ளது காணலாம்.

## வரலாறு

சம்பு ஆதி என்னும் இரு முனிவரும் கழுகு வடிவமாய் வந்து கண்டு தெய்வவமுதுண்டு செல்வது. பட்சி தீர்த்தம் என்ற தீர்த்தம் ஒன்றுள்ளது. தமிழகத்தார் சென்று காணக் கருதும் தலங்களுட் சிறந்த தொன்ருக வமைந்தது; ஒருமுறை வலம் வந்தால் உடலின் கண்ணுள்ள தீராப் பிணிகள் பலவும் தீரும் என்பது; திருப்பெருந்துறையிற் குருந்தமரத்தின்கீழ்க் குருவடிவக் காட்சியைச் சிவபெருமான் மணிவாசகப் பெருமானுக்குக் காட்டியது ; இவை போன்ற வரலாறு பலவுங் கொண்ட பெருமையுடையது.

## பெயர்

இத் தலத்துப் பிள்ளையார் திருப்பெயர் வண்டுவனப் பிள்ளையார் என்பது. சிவபெருமான் திருப்பெயர் வேதகிரீசர்

என்பது. அம்மையின் திருப்பெயர் பெண்ணினல்லாள் என்பது. வேதகிரி என்பதும் அதன் பெயர். இத்தகைய பல சிறப்புக்களைக் கொண்டது திருக்கழுக்குன்றம்.

## சிலேடை

சிலேடை என்பது ஒரு சொல்லினை அல்லது சொற்றொடரை இருபொருள் அல்லது பல பொருளுக்குப் பொருத்தியமைப்பது. அஃது செம்மொழியாகவும் காணப் படும்; பிரிமொழியாகவும் காணப்படும். செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை, செம்மொழியும் பிரி மொழியும் இயைந்த சிலேடையெனப் பெயர் கூறப்படும். ஒரு வெண்பாவின் முன்னிரண்டடியில் ஊர்ச்சிறப் புரைத்துப் பின்னிரண்டடியிற் பாட்டுடைத் தலைவன் பெருமை பகர்வது சிலேடை வெண்பாவின் இலக்கணமாம். ஊர்ச் சிறப்புரைக்குமிடம் சிலேடையமைப்பதும், தலைவன் பெருமையமையும் இடம் யமகம் (மடக்கு) திரிபு என்ற சொல்லணியமைப்பதும் இயல்பாம். முன்னிரண்டடியும் சிலேடையாகவும் பின்னிரண்டடியும் யமகம் ஆக, அல்லது திரிபாகக் காணப்படும் சிலேடை வெண்பா நூல்கள்.

## நூலமைப்பு

இந் நூலாசிரியர் முன்னுள்ள 22 வெண்பாவிலும் சிலேடையமைக்காமல் 23 முதல் 28 வரையுள்ள பாக்களிற் சிலேடையமைத்தும் அடுத்து 50 வரையும் சிலேடையமைக் காமல் விடுத்து 51 முதல் இடைவிடாது சிலேடையமைத்தும் பாடினர். இதற்குக் காரணம் இன்னதென விளங்கவில்லை. 52 ஆம் பாவில் முப்பொருட் சிலேடையமைத்துப் பின்னர் முறையேயமையாமல் விடுத்து 90 முதல் மீண்டும் முப் பொருட் சிலேடை தொடுத்தமைத்து 96 முதல் நாற்பொருட் சிலேடையாகவே முடித்துள்ளார். பின்னிரண்டடிகளில் திரிபு என்ற சொல்லணியும் 15, 17, 19, 23, 24, 25, 26, 45, 46, 47, 48, 49, 50, 90, 91, 92, 95, 96, 97, 98, 99 ஆகிய கவிகளில் மடக்கும் (யமகமும்) அமைந்துள்ளன. ஆசிரியர் காலம் சிலேடை வெண்பாப் புதிதாகத் தோன்றிய

காலம் போலும். பின்னர்ப் பாடிய சிலேடை வெண்பா நூல்கள் வரையறையுடன் அமைந்து வழங்குவன காண்கின்றோம்.

## ஆசிரியர் வரலாறு

இந்நூலியற்றிய ஆசிரியர் தொண்டைவள நாட்டிற் காஞ்சிப்பதியிற்றோன்றினர். இளமைப் பருவத்தே இலக்கண நூல்கள் இலக்கிய நூல்கள்பலவும் கற்றுத்தேர்ந்து புலமைத் திறம் பெற்றனர். உள்ளூரிற் பச்சையப்ப முதலியார் பள்ளியில் தலைமைத் தமிழ்ப் புலவராகப் பல ஆண்டுகள் பணிபுரிந்தார். பின்னர்ச் சென்னை நகர் சேர்ந்து பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியராய் அமர்ந்து வாழ்வு நடாத்தினர்.

திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சென்னைக்கு வந்தபோது சபாபதி முதலியார் புலமைத் திறத்தைக் கேள்வியுற்று அவர்பாற் கல்விபயில விழைந்தார். கருத்தையறிந்து பிள்ளையவர்கள் விழைந்த நூல்களையெல்லாம் முதலியார் கற்பித்துவந்தார் எனத்தெரிகின்றது. கல்லாடம் திருவாசகம் திருக்கோவையார் திருக்குறள் பரிமேலழகருரை இவையே அவர் பாடங்கேட்ட நூல்கள். பிள்ளையவர்கள் வந்து பாடங் கேட்கும் பெருமையுடையவர் முதலியார் எனின் வேறு பெருமை கூறவும் வேண்டுமோ? இவர்பாற் கல்விபயின்றவர் பலர்; அவர்களுட் சிறந்த புலமை பெற்றவர் புரசை அட்டாவதானம் சபாபதிமுதலியாராவர். தமிழ்நூல்களைப் பலர்க்குங் கற்பித்துத் தமிழ்மொழி வளர்த்தும் சைவநூற் சொற்பொழிவு நிகழ்த்திச் சைவ சமயத்தை வளர்த்தும் நாட்டுக்கு நலம்புரிந்து வாழ்ந்தனர். இவர் இயற்றிய நூல்கள் சைவ சமய விளக்க வினாவிடை, பிரமோத்திர காண்டப் பொழிப்புரை, பெரிய புராணவுரை, திருவிளையாடற் புராணவுரை, அருணாசல சதகம் முதலியவைகள் எனத் தெரிகின்றன.

திருக்கழுக்குன்றச் சிலேடைவெண்பா நூல் திரிசிரபுரம் தியாகராசசெட்டியார்பால் ஏட்டுச் சுவடியாயிருந்ததெனவும்

அவர் தம்மாசிரியர்க்குப் பாடங் கற்பித்த பேராசிரியார் பாடிய நூல் என்று போற்றிவைத்திருந்தனர் எனவும் அச் சிறப்பு நோக்கித் தாம் அதனை வாங்கிக் குறிப்புரை வரைந்து சுருக்கமாக வெளியிட்டதாகவும் டாக்டர் உ. வே. சாமி நாதையர் முன்னுரையிற் காணப்படுவதால் இந்நூலின் பெருமை இனிது விளங்கும்.

இருபொருட் சிலேடையமைப்பதே எளிதன்று; முப் பொருட் சிலேடையும், நாற்பொருட் சிலேடையும் இவர் அமைத்துள்ளமை காணின் எவரே வியப்புறார்? 93 ஆம் வெண்பாவில், வாவி, வீதி, சான்றோர் ஆகிய மூன்றுபொருட் கும் 'கனவிரதமேவும்' என்ற சொற்றொடர் பொருத்தப்பட் டுள்ளது. கனவிரதம்—நீர். மேவும்—பொருந்தும் வாவியில் நீர் பொருந்தும் எனவும், கனம் இரதம்--பொன்னலாகிய தேர் அல்லது பெரியதேர். வீதியிற் பெற்றோர்கள் பொருந்தும் எனவும்; கனம் விரதம்—பெருமையாகிய விரதம்-சான்றோர்களிடம் பெருமையாகிய விரதங்கள் பொருந்தும் எனவும் பொருந்துவது காண்க. இவ்வாறு நாற்பொருட் சிலேடையமைந்த பாடல்களையும் கண்டு பொருளருமை யுணர்க.

மடக்கு, திரிபு என்னும் சொல்லணிகளைப் பிரித்துக் காட்டிப் பொருள் விளக்கியுள்ளமையால் எளிதிற் கண் டுணர்வர் செந்தமிழன்பர் என்பது தேற்றம். திருக்கழுக் குன்றம் என்ற தலத்தின் சிறப்பும் வரலாற்றுக் கதைகளும், சொற்சுவை, பொருட்சுவையும், தொடை நயமும் நடை நயமும் இந்நூலுள் அமைந்துள்ளன. உரையமைந்த ஒரு சிலேடைவெண்பா நூலையாய்ந்து கண்டால் மற்றைச் சிலேடைவெண்பா நூல்களை உரையின்றியே காணும் ஆற்றல் தானே அமையும். ஆதலால் இதுபோன்ற தமிழ் நூல்களை அன்பர்கள் வாங்கி விழைந்து கற்க.

தி. சங்குப் புலவர்

உ

திருச்சிற்றம்பலம்

# திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா

## காப்பு

### வண்டுவனப் பிள்ளையார்

வெண்பா

திருக்கழுக்குன் றத்துச் சிலேடைவெண்பாக் கூறக்
கருத்தளித்து நாயேனைக் காக்கும்—மருத்துளவார்
விண்டுவனப் பிள்ளையாம் வேதன்முத லோர்போற்றும்
வண்டுவனப் பிள்ளைதான் வந்து.

(இதன்பொருள்.) திருக்கழுக்குன்றத்து - சிறந்த கழுக்குன்றம் என்ற தலத்தைக் குறித்து; சிலேடை வெண்பா கூற - சிலேடையமைந்த வெண்பாக்களால் ஒரு நூல் பாடுவதற்கு; மரு துளவு ஆர் விண்டு - மணங் கமழுந் துழாய்மாலை புனைந்த திருமால்; வனம்பிள்ளை ஆம் வேதன் - அத்திருமாலின் அழகிய மைந்தனாகிய பிரமன்; முதலோர் போற்றும் - முதலாகிய தேவர் யாவரும் வணங்குகின்ற; வண்டுவனப் பிள்ளைதான் வந்து - வண்டு வனப் பிள்ளையார் என்ற தெய்வம்தானே என்னுள்ளத்தில் வந்தமர்ந்து; கருத்து அளித்து - நல்ல சொல்லும் பொருளும் எனக்குத் தோற்றுவித்து; நாயேனை காக்கும் - நாயனைய என்னைக் காப்பாற்றும்.

(விளக்கம்.) வண்டுவனப் பிள்ளையார் என்பது அத்தலத்தி லுள்ள விநாயகர் பெயர். விண்டு - திருமால். வனம் - அழகு. வன்னம் வனம் எனக் குறைந்தது. வனம்+பிள்ளை=வனப்பிள்ளை என மகரங்கெட்டு வல்லொற்று மிக்கது. எடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றி முடிவதன் பொருட்டுப் பிள்ளையார் காப்புக் கூறுவது தமிழக வழக்காதலின் அத் தலப்பிள்ளை யாரைப் பணிந்து நூல் தொடங்கினர் ஆசிரியர். (க)

சீலமறை யோர்வாழ் திருக்கழுக்குன் றத்துவெண்பா
மாலையொரு நூறு மகிழ்ந்துரைக்க—நாலுவாய்
உள்ளானை யைந்துகர முள்ளானை யன்பரகம்
விள்ளானை நெஞ்சகமே வேண்டு.

(இ - ள்.) சீலம் மறையோர் வாழ் - நற்பண்பமைந்த அறிஞர் வாழ்கின்ற; திருக்கழுக் குன்றத்து - திருக்கழுக் குன்றத்தைக் குறித்து; வெண்பாமாலை ஒரு நூறு - ஒரு நூறு வெண்பா மாலை என்ற நூலை; மகிழ்ந்து உரைக்க - மகிழ்வாகப் பாடுவதற்கு; நெஞ்சு அகமே - என் மனமே நீ; நாலுவாய் உள்ளானை - தொங்குகின்ற யானைமுகமமைந்த வாயுடையவனை; ஐந்து கரம் உள்ளானை - ஐந்துகர முடைய வனை; அன்பர் அகம் விள்ளானை - மெய்யடியார் மனத்தை விட்டுப் பிரியாதவனை (பிள்ளையார் என்ற தெய்வத்தை) வேண்டு - விரும்பி நினைப்பாய்.

(வி - ம்.) நெஞ்சகமே வண்டுவனப் பிள்ளையாரை வணங்கி நினைப்பாய் என்பது கருத்து. சீலம் - நல்லொழுக்கம்; நற்பண்பு. மறையோர் - அருமையான நூலாய்ந்த சான்றோர். "அந்தணர் என்போ ரறவோர்" என்ற கருத்தும் ஆய்க. வெண்பா மாலை எனவும் பெயரிட்டனர் போலும் நூலாசிரியர். உள்ளானை; விள்ளானை என ஒரு பொருள்மேற் பல பெயர்கள் வந்தன. யானைமுக முடையவர் என்பதுதோன்ற 'நாலுவாய் உள்ளானை" என்றார். யானையின் வாய் நீண்டு தொங்கும். யானைக்கு நால்வாய் என்ற பெயரும் அதனால் அமைந்ததே. (௨)

வாழ்த்து

வாழ்கவர னஞ்செழுத்து வாழ்கவரன் வெண்ணீறு
வாழ்ககழுக் குன்றத்து வாழ்வார்கள்—வாழ்கபுவி
வாழ்கமறைச் சைவநெறி வாழ்கவரன் மெய்யடியார்
வாழ்கமுத லல்வர்சொலும் வாக்கு.

(இ - ள்.) அரன் அஞ்சு எழுத்து வாழ்க - சிவபெருமானைக் குறிக்கும் ஐந்து எழுத்துக்களும் வாழ்க; அரன் வெண்ணீறு வாழ்க - அரனது திருநீறு வாழ்க; கழுக்

குன்றத்து வாழ்வார்கள் வாழ்க-திருக்கழுக்குன்றப் பதியில் வாழும் மக்கள் யாவரும் வாழ்க; புவி வாழ்க - பூமியிலுள்ள பல்லுயிரும் வாழ்க; மறைச் சைவநெறி வாழ்க - மறைநூல் முறையின் வழிவந்த சைவசமயம் வாழ்க; அரன் மெய்யடியார் வாழ்க - சிவனை வழிபடும் உண்மைத் தொண்டர்கள் வாழ்க; முதல் நால்வர் சொலும் வாக்கு வாழ்க-நாயனருண் முதன்மை வாய்ந்த நால்வர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்திருமுறைகள் வாழ்க.

(வி - ம்.) ஐந்தெழுத்து: சிவயநம. மந்திர மாதலின் இதனை முற்கூறினர். திருநீறு சாதனமாதலின் அடுத்து எடுத்துக்கூறினர். புவி என்பது பல்லுயிர்களையுங் குறித்தது. நூற்றொடக்கத்தில் இவ்வாழ்த்துக்கவி யமைத்திருப்பது ஆசிரியர் கொண்ட சைவ சமயப் பற்றின் தனிச்சிறப்பை விளக்குவதாம். (௬)

## நூல்

திங்கடவழ் மாடந் திருப்பாற் கடனேராய்க்
கங்கையணை நேராங் கழுக்குன்றே—மங்கை
உருவாக் களித்தா னுலகெலா மென்னுந்
திருவாக் களித்தான் சிலம்பு.

(இ - ள்.) திங்கள் தவழ் மாடம் - சந்திரன் தவழ்ந்து செல்லும் உச்சியையுடைய மாளிகைகள்; திருப்பாற் கடல் நேராய் - வெண்மை நிறத்தாற் சிறந்த பாற்கடலைப்போலத் தோன்றி; கங்கை அணை நேர் ஆம் - வானிலுள்ள கங்கை யாற்றங்கரைக்கு நேராக உயர்ந்தும் நிற்கின்ற; கழுக் குன்றே-திருக்கழுக்குன்றம் என்பதே; மங்கைஉருஆ களித் தான் - உமையாகிய பெண்ணுருவொருபால் அமைய மகிழ்ந்தவரும்; உலகெலாம் என்னும் திருவாக்கு அளித் தான் - "உலகெலாம்" என்ற சிறந்த சொற்றொடரைச் சேக்கிழாரடிகளுக்கு எடுத்து வழங்கியவரும் (ஆகிய சிவ பெருமானது) சிலம்பு - மலையாம்.

(வி - ம்.) சிலேடை வெண்பா எனப் பெயரமைந்திருப் பினும் இது முதல் ஐம்பது பாடல்கள் சிலேடையமைந்தில.

ஐம்பதுக்குள்ளும் சில பாடல்களிற் சிலேடையமைந்துள்ளன வெனத் தெரிகிறது. முன்னுரையில் விளக்கம் காண்க. முன்னிரண்டடிகளிற் கழுக்குன்றத்தின் சிறப்பு அமைந்துள்ளது. பின்னிரண்டடிகளிற் சிவபெருமான் சிறப்பும் திரிபு என்னும் சொல்லணியும் அமைந்துள்ளன. திருக்கழுக்குன்றத்துள்ள மாளிகைகள் எல்லாம் சுண்ணச் சாந்து தீற்றி வெண்மையாகத் தோன்றுவதால் அவை திருப்பாற் கடற்கு நேராயின. வானம் வரையுயர்ந்து நிற்கின்றன. ஆதலின் கங்கைக் கரையை யடுத்து நேராக நின்றன. மாளிகைகளின் வெண்மை நிறமும் உயர்வுங் கூறி அந்நகரைச் சிறப்பித்தனர்.

சிவபெருமான் மங்கையுருவாயது, "பெண்ணுருவொரு திறனாகின் றவ்வுருத், தன்னுளடக்கிக் கரப்பினுங் கரக்கும்" என்ற புறநானூற்றுக் காப்புச் செய்யுளானும், "தென்பா லுகந் தாடுந் தில்லைச்சிற் றம்பலவன், பெண்பா லுகந்தான்" என்ற மணிமொழியானும் அறிக. திருத்தொண்டர் புராணம் பாடுவது குறித்துச் சேக்கிழார் பெருமான் தில்லை சென்று மன்றுளாடுவார் திருமுன் நின்று வணங்கியபோது வானில் "உலகெலாம்" என்ற ஒலியெழுந்தது. அதனையமைத்துத் தொடங்கி முடித்தார் என்பது வரலாறு. இது சிவபெருமான் திருவருளால் நிகழ்ந்ததாதலின் "திருவாக்களித்தான்" என்றார். உருவாக்களித்தான் திருவாக்களித்தான் என இரண்டடியும் அமைந்திருப்பது திரிபு: திருவாக்களித்தான் திருவாக்களித்தான் என முதலடியைப் போலவே யமைந்தால் அதனை யமகம் எனக் கூறுவர். மடக்கு என்பதும் அதுவே. ஒரு சொற்கு முதலிற் கூறிய பொருள் மீண்டும் கூறுமாறு அமைந்திருப்பின் அது மடக்கு அன்று, பொருள் வேறுபட்டிருப்பது மடக்கு, திரிபு என்னும் சொல்லணி என வுணர்க. (க)

அம்பரத்திற் செல்குண்டை யண்மியவேய் கோயில்கொடிக்
கம்ப நிகராங் கழுக்குன்றே—நம்பும்
உருவரு வில்லா ரோருமுப் புரத்தார்
வெருவரு வில்லார் விருப்பு.

(இ - ள்.) அம்பரத்தில் செல் குண்டை அண்மிய வேய் - விண்ணிற் செல்கின்ற விடைவடிவ ஓரையை (இடபராசியை) நெருங்கி நிற்கும் மூங்கில்கள்; கோயில் கொடி கம்பம் நிகர் ஆம் - திருக்கோயிலின் முன்பு விடைக் கொடியுடன் நிற்குங் கம்பத்தைப் போன்று தோன்றும்

(பெருமைமிக்க); கழுக்குன்றே-; நம்பும் உரு அரு ஒன்றும் இல்லார்-மக்களால் நம்புதற்குத் தக்க உருவம் அருவம் இல்லாதவரும்; ஒரு முப்புரத்தார் வெருவருவில்லார்-ஒப்பற்ற முப்புரத்து வாழ்ந்த அசுரர் அஞ்சும்படி யெடுத்த இமயமலை வில்லுடையவரும் (ஆகிய சிவ பெருமான்) விருப்பு - விரும்புந்தலமாம்.

(வி - ம்.) கழுக்குன்றில் முளைத்து வளர்ந்தோங்கிய மூங்கில்கள் வானத்தையளாவி நிற்பனவாதலின் அவற்றை யடுத்து இடபராசி வரும்போது அவை விடைக் கொடியுயர்த்திய கோயிற் கொடிக் கம்பம்போலக் காட்சியளிக்கும் என்பது. இதனால் மலையின் உயர்வும் அதன்மேல் வளர்ந்துள்ள மூங்கிலின் உயர்வுந் தோன்றின. உருவம், அருவம், அருவுருவம் என மூவகையும் அமைந்த வடிவம் இறைவனுருவென இயம்புவதாலும் எங்கும் நிறைந்த பொருள் எனக் கூறுவதாலும் "நம்பும் உருவருவில்லார்" என்றார். "மைப்படிந்த கண்ணாளுந் ........,...ஒப்புடைய னல்ல னொருவனல்ல னோரூர னல்லனோ ருவம னில்லி...... இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே" எனவும், "வண்ணந்தான் சேயதன்று வெளியதன்று" எனவும் "ஓசை யொலியெலா மானாய் நீயே" எனவும் வரும் திருமொழிகள் காண்க. சிவபெருமான் இமயமலையை வில்லாக எடுத்து நின்றபோதே தமது முப்புரமும் நீறு பட்டொழிந்தமை கண்டு நாம் இனியென்னாவோமே என்று நடுங்கி நின்றனர் என்பதுதோன்ற "வெருவரு வில்லார்" என்றார். வெருவரு - அஞ்சத்தக்க. இரும்பு, பொன், வெள்ளி என்ற மூன்றால் அமைந்த முப்புரங்களையும் சிரித் தெரித்தார் என்ற வரலாறு குறிப்பிற்றோன்றியது இதனால். (௨)

வண்டுமொய்த்த வெண்டா மரையை மதியென்னக்
கண்டுசிகி தாவுங் கழுக்குன்றே—சண்டனைமுன்
தள்ளிமலைக் கத்தன் றனிமலர்த்தாள் வீசினோன்
வெள்ளிமலைக் கத்தன் விருப்பு.

(இ - ள்.) வண்டு மொய்த்த வெண் தாமரையை - கரிய வண்டுகள் மொய்த்திருக்கும் வெள்ளிய தாமரை மலரை; மதி என்ன கண்டு - சந்திரன் என்று நோக்கி; சிகி தாவும் - கேது என்ற பாம்பு அதன் மேற் பாய்ந்து

பற்றச் செல்லும் (சிறப்பு வாய்ந்த) கழுக்குன்றே-; சண்டனை முன் தள்ளி மலைக்க தன் தனி மலர்த்தாள் வீசினோன் - முற்காலத்தில் இயமன் உள்ளம் மலைக்கும்படி தன் ஒப்பற்ற செங்கமல மலர் போன்ற திருவடியால் அவனை உதைத்துத் தள்ளி வீசியெறிந்தவரும்; வெள்ளி மலை கத்தன் - திருக் கைலாய மலையுறையுங் கடவுளும் (ஆய சிவபெருமான்) விருப்பு - விரும்பும் தலமாம்.

(வி - ம்.) சிகி - கேது என்ற பாம்பு. இது சூரியனைப் பற்றும் பாம்பு இராகு என்பதே சந்திரனைப் பற்றும்பாம்பு. இராகு கேது என்ற ஒற்றுமையால் ஆசிரியர் மதியைப் பற்று வதாகக் குறித்தனர் போலும். சந்திரன் வடிவிற் களங்க மிருப்பது போல் வெண்டாமரைப் பூவில் வண்டுகள் படிந் திருந்தன; அதனைக் கண்டு சிகி மதி யென்று கருதி அதன்மேற் பாய்ந்தது எனக்கொள்க. முன் - முற்பக்கம்: நேர் எனவும் கொள்ளலாம். முன் சண்டனை மலைக்கத் தன் தனி மலர்த்தாள் தள்ளி வீசினோன் என மாற்றிப் பொருள் காண்க. மலர்த்தாள்: உவமைத் தொகை. தாள் தள்ளி - தாளால் தள்ளி என மூன்றனுருபு விரிக்க. மார்க் கண்டனைப்பற்றப் பாசம் எறிந்த போது அவன் இறைவன் றிருவுருவை இறுகப்பற்ற அத் திருவுருவினின்று பெருவுருத் தோன்றிக் காலை நீட்டியது கண்டு இயமன் மனங்கலங்கியது என்பது தோன்ற "மலைக்க" என்றார். மலைத்தல் - மயங்குதல். சண்டன் - யமன். கத்தன்: வடமொழி. இது எத்தொழிலும் வல்லவன் என்பது குறிக்கும். (௫)

அடியவர்போல் வெண்ணீ றணிந்தக்கம் பூண்டு
கடுவன் பணிகழுக் குன்றே—முடியினின்மண்
வைத்தன் பரையாண் மகதேவ னண்டர்தொழும்
அத்தன் பரையா னகம்.

(இ - ள்.) கடுவன் அடியார் போல் - ஆண் குரங்குகள் சிவனடியார் போல; வெண்ணீறு அணிந்து அக்கம் பூண்டு - திருநீறு பூசிக் கண்மணிமாலை யணிந்து நின்று; பணி - வணங்கும் (பெருமையுடைய) கழுக் குன்றே-; முடியினின் மண் வைத்து அன்பரை யாள் மகதேவன் - தன் திருமுடிமேல் மண் கூடை வைத்துச் சுமந்து அடியார்களையாண்ட பெருந்தேவரும், அத்தன்

பரையான் - எவ்வுயிர்க்குந் தந்தையும், உமையொருபாக முடையவரும் (ஆகிய சிவபெருமான்) அகம் - அமர்ந்த இடமாகும்.

(வி - ம்.) குரங்கு மக்கள் செய்யுந் தொழில் கண்டு அத்தொழிலை யியற்றும் அறிவும் குறும்பும் உடையது. ஆதலால் அம் மலையில் அடியவர் எஞ்ஞான்றும் இடையறாது வந்து நீறு பூசி அக்குவடம் பூண்டு திருமுன் நின்று பணிவது கண்ட குரங்குகள் நீற்றுப்பையைக் கவர்ந்தும் அக்குமணியைக் கவர்ந்தும் வைத்துப் பூசிப் புனைந்து பணியும் என ஆய்ந்தறிக. சூலும் குட்டியும் கொண்டு திரிவன துணிந்து உட்சென்று பூசை புரியா எனப் பெண் குரங்கினைக் கூறாது "கடுவன்" என்றார். சிறப்பினாற் கூறினர் எனவும் கொள்ளலாம். "முடியினின் மண்வைத்து" என்றது வையையாற்றின் கரையின்முன் மண் கூடை வைத்துச் சுமந்த வரலாற்றினைக் குறித்தது. அன்பரை என்று பன்மையிற் கூறியது மணிவாசக ரையும் வந்தியம்மையையும் குறிக்கும். பொதுவாக அத்திரு விளையாடல் புரிந்து அடியவரை யாண்டனர் எனினும் பொருந்தும். பரை - உமை. பரன் என்பதன் பெண்பால். அத்தன் - அப்பன். (௪)

கொன்றை மரத்தைக் கோடிபடர்ந்து சுற்றிமறிக்
கன்றுடையான் போலாங் கழுக்குன்றே—துன்றுதிரு
நாவண் கரத்த னலவரவக் கங்கணஞ்சேர்
பூவண் கரத்தன் பொருப்பு.

(இ - ள்.) கொன்றை மரத்தை கொடிபடர்ந்து சுற்ற - (அம் மலையில் உள்ள) கொன்றை மரங்களை யடுத்துள்ள பூங் கொடிகள் அவற்றின் மேற் படர்ந்து சுற்றியிருக்கும் தோற்றத்தால்; மறி கன்று உடை யான் போல் ஆம் - மான் கன்றினைக் கையேந்திய சிவ பெருமான் போலத் தோன்றும்; கழுக் குன்றே -; துன்று திரு நா அண் கரத்தன் - நெருங்கிய திரு நாவினிற் பொருந்திய நஞ்சுடையவரும், நலம் அரவம் கங்கணம் சேர் பூவண் கரத்தன் - நல்ல பாம்புக் கங்கணம் பூண்ட பூப்போன்ற வண்மை யமைந்த திருக்கையுடைய வரும் (ஆகிய சிவபெருமான்) பொருப்பு - தங்கும் மலையாம்.

(வி - ம்.) கொன்றை மலர் பூத்து நிற்கும் மரம், கொன்றை மலர் புனைந்த திருமுடியுடைய சிவனுக்கும் அம் மரத்தைச் சுற்றிய பூங்கொடி உமைக்கும் இயைத்துக் கொள்க. மறிக் கன்றுடையான் என்பது சிவன் என்பது மட்டுந் தெரிந்து நின்றது. கரம் - நஞ்சு. கரம் - கை. கரம் + அத்து + அன் = கரத்தன் எனப் புணர்ந்து நின்ற சொல். மகரமெய் கெட்டு அத்துச் சாரியையின் முதல் கெட்டு இறுதியுகரமுங் கெட்டு நின்றதெனக் காண்க. அண் கரத்தன் - வினைத்தொகை. வண்மை - மை விகுதி கெட்டு வண் என நின்றது. வண்மை - கொடையையும் வளமையையும் உணர்த்தும். (ரு)

விண்ணார் மதிமணஞ்செய் வேடர்பந்த ரிற்கட்டுங்
கண்ணாடி போலாங் கழுக்குன்றே—நண்ணார்
செருக்கடவூ ரத்தத் திகிரி விடையோன்
திருக்கடவூ ரத்தன் சிலம்பு.

(இ - ள்.) விண் ஆர் மதி - வானில் வரும் நிறை நிலாவானது; மணம் செய் வேடர் - திருமணம் புரியும் குறவர்களது; பந்தரிற் கட்டும் கண்ணாடி போல் ஆம் - பந்தலின் அவர் முகம் பார்ப்பதற்குக் கட்டிய கண்ணாடி போலத் தோன்றும் (வியப்பமைந்த); கழுக்குன்றே -; நண்ணார் செருக்கு அட ஊர் அத்தம் திகிரி விடையோன் - பகைவர் செருக்கினை யொழிக்கக் கருதிச் செலுத்திய கையிற் சக்கரப் படையுடைய விடையுடையவரும், திருக் கடவூர் அத்தன் - திருக்கடவூர் என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் இறைவரும் (ஆகிய சிவபெருமான்) சிலம்பு - அமர்ந்த மலையாம்.

(வி - ம்) மலைமேற் குறவர் குடிலமைத்து வாழ்வர் என்பதும் அவர்கள் திருமணத்திற் கிட்ட பந்தர் மதிமண்டலம் வரை யுயர்ந்து நிற்கும் என்பதும் ஆங்குவரும் நிறைநிலா அவர் கண் முகம்பார்ப்பதற்குக் கட்டிய கண்ணாடி போலத் தோன்றும் என்பதும் குறிப்பாற் றோன்றுவது காண்க. கழுக்குன்றத்தின் உயர்வும் பெருமையையும் உணர்த்தியது இது. அத்தம் - கை. திகிரி - சக்கரம். விடை - காளை; ஏறு. கையிற் சக்கரமுடைய விடை எனவே குறிப்பால் திருமாலை விடையாகக் கொண்டவர் என்பது விளங்கிற்று. ஊர் - ஊர்ந்த; செலுத்திய. ஊர்ந்த விடையுடையோன் எனவும் பொருந்துக. நண்ணார் செருக்கு

அட ஊர்ந்த விடை எனக் காரணந்தோன்றநின்றது. நண்ணார் - பகைவர். ஈண்டு முப்புரத்தாரை யுணர்த்திற்று. "தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில், இடபமதாய்த் தாங்கி ளுன் திருமால் காண்சாழலோ" என்ற மணிமொழியார் பாங்ட காண்க. (௬)

சந்தமிகுங் காந்தளிடைச் சார்மதிய மாதர்கள்கைக்
கந்துக மேய்க்குங் கழுக்குன்றே—இந்து
சிகரத் துவைத்தான் செயிர்த்தரக்கன் ேறாள்கள்
தகரத் துவைத்தான் றலம்.

(இ - ள்.) சந்தம் மிகும் காந்தள் இடை சார் மதியம்- அழகு மிகுந்த செங்காந்தட் பூவினிடத்திற் சேர்ந்த சந்திரன்; மாதர்கள் கை கந்துகம் ஏய்க்கும் - மகளிர் கையிற் பற்றிய பந்துபோலத் தோன்றும் (சிறப்பமைந்த); கழுக் குன்றே -; இந்து சிகரத்து வைத்தான் - வெண்பிறையைத் திருமுடியில் வைத்தவரும்; செயிர்த்து அரக்கன் தோள் கள் தகர துவைத்தான் - சினந்து இராவணனுடைய இரு பது தோள்களும் நெரியுமாறு பூமியில் அழுத்தினவரும் (ஆகிய சிவபெருமான்); தலம் - வீற்றிருக்கும் தலமாம்.

(வி-ம்.) மலைமேற் சுனையில் மலர்ந்திருக்குஞ் செங்காந்தட்பூ மதிமண்டிலத்தையடுத்துக் காணப்படும் எனவும், ஆங்கு வரும் நிலவு அப்பூவின்மேற் படிந்து திகழும் எனவும். செங்காந்தண் மலரும் நிலவும் நெருங்கிச் சேர்ந்தபோது மகளிர்கையும் பந்தும் போலக் காட்சியளிக்கும் எனவும் ஆய்ந்து மலைச்சிறப்புக் காண்க. சிகரம் - திருமுடி. இந்து - சந்திரன்; பிறைநிலவை யுணர்த்தியது. தகர - உடைய; நெரிய; நொறுங்க - இராவணனைப் பூமியுள் அழுந்தும்படி விரலால் ஊன்றியபோது தோள்கள் நெரிந்தன எனக் கொள்க. கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க முயன்றதும் அச்செயல்கண்டு சிவபெருமான் சினந்து உள்ளழுத்தியதும் பின்னர் இசை பாடி விடுதலை பெற்றதும் ஆகிய வரலாறு காண்க. (எ)

பிள்ளைமதி யைக்குறவர் பேரேனக் கோடென்று
கள்ளமுட னெட்டுங் கழுக்குன்றே—கொள்ளும்
அலையாலங் காட்டினு ளுருங் களத்துத்
தலையாலங் காட்டினுன் சார்வு.

**(இ - ள்.)** பிள்ளைமதியை - இளம்பிறைச் சந்திரனை- பேர் ஏனம் கோடு என்று - பெரிய பன்றிக் கொம்பு என்று கருதி; குறவர் கள்ளம் உடன் எட்டும் - மலையில் வாழுங் குறவர் அப்பிறையைக் கள்ள மனத்துடன் எட்டிப் பிடிக்கும் (இயல்பு வாய்ந்த) கழுக்குன்றே -; கொள்ளும் அலை ஆலம் காட்டினன் ஆரும் களத்து - தாம் எடுத்துக் கொண்ட கடலிற்றோன்றிய நஞ்சின் கறுப்பு நிறத்தை நிறைந்த கண்டத்திற் காட்டியவரும்; தலையாலங் காட்டினன் - தலையாலங்காடு என்ற தலத்தில் வீற்றிருப்பவரும் (ஆகிய சிவபெருமான்) சார்வு - சார்ந்து 'வாழிடமாம்.

(வி - ம்.) கழுக்குன்றமானது மதிமண்டலத்தை யடுத்து மேலுயர்ந்து நிற்றலால் அம்மலைமேல் வாழுங் குறவர்கட்கு எட்டிப் பற்றுமளவில் வெண்பிறை வந்துலவும் எனவும், அதனைப் பன்றிக் கொம்பு எனக் கருதிக் கைந்நீட்டுவர் பற்றுதற்கு எனவும் உணர்க. எவர் கொன்ற பன்றிக்கொம்போ இது வென மனத்தில் எண்ணுவது குறித்துக், "கள்ள முடன்" என்றார். பன்றிக் கொம்பும் குறவர்க்குப் பயன்படும் பொருளாம். கொள்ளும் அலை ஆலம் ஆரும் களத்துக் காட்டினன் என மாற்றிப் பொருள்கொள்க. அலை-கடல். ஆலம் - நஞ்சு. அலையாலம் - ஏழனுருபும் பொருளும் தொக்க தொகை. (அ)

குன்மம் படுகாசங் குட்ட முதலாய
கன்மவினை நீக்குங் கழுக்குன்றே—வன்மனத்தார்
காண்கைக் கரியான் கருதுமிரண் டாயிரங்கோட்
டேண்கைக் கரியா னிடம்.

**(இ - ள்.)** குன்மம் - குன்மம் என்ற நோயும்; படுகாசம் - மக்கட்கு உண்டாகும் ஈளை இருமல் நோயும்; குட்டம் - தொழுநோயும்; முதலாய கன்மவினை நீக்கும் - இவை முதலாகக் கூறப்படும் முன்செய் பாவத்தால் வந்த நோய்களை யெல்லாம் போக்குகின்ற; கழுக்குன்றே-; வன் மனத்தர் காண்கைக்கு அரியான் - இரும்பு போன்ற வலிய நெஞ்சுடைய மாந்தர் காண்பதற்கு அருமையானவரும்; கருதும் இரண்டாயிரம் கோட்டு ஏண் கை கரியான் - எவ

ரும் வியப்பாகக் கருதத்தக்க இரண்டாயிரங் கொம்புகளை யுடைய வலிய துதிக்கையுடைய அயிராவணம் என்ற யானையையுடையவரும் (ஆகிய சிவபெருமான் இடம் - அமர்ந்த இடமாகும்).

(வி - ம்.) கன்மவினை - முற்பிறப்பிற் செய்த தொழிலால் வரும் பாவம் குன்மம் முதலிய நோய்கள் எல்லாம் கன்மவினையால் வரும் என அறிஞர் கூறுவர். ஆதலால் அந்நோய்கள் வராமல் அவை வருதற்கேதுவாய கன்ம வினையைப் போக்குவது கழுக் குன்றம் என அம்மலையின் சிறப்புத் தோன்றுவது காண்க. மெழுகுபோல் இளகும் மென்மனத்தராற் காணப்படுவாரேயன்றி வன்மனத்தாராற் காணப்படாதவர் இறைவர் எனக் கொள்க. காண்கை - காண்டல்: கைவிகுதி பெற்ற தொழிற் பெயர். குவ்வுருபு சேர்ந்து காண்கைக்கு என நின்றது. ஏண்- வலிமை; பெருமை. கை+கரி=கைக்கரி-;கையையுடையகரி; கரி ஈண்டு இடுகுறியாய் யானை எனப் பொருள்பட்டது. இரண்டாயிரங் கொம்புகளையுடைய ஐராவணம் என்ற யானை சிவபெருமானுக்குரியது. "அயிரா வணமேறு தானே றேறி" என வருவதும் காண்க. (க)

வாய்ந்தகழை முத்த மதிக்கதிர்வீ சச்சந்த்ர
காந்தநீ ரூறுங் கழுக்குன்றே—சேந்தமலர்த்
தாளா னனந்தந் தவழ்கடலி னஞ்சருந்தி
மாளா னனந்தன் வரை.

(இ - ள்) வாய்ந்த கழை முத்தம் மதி கதிர்வீச - மலைமேற் பொருந்திய மூங்கிலின் வெடித்த முத்துக்கள் வெண்ணிலாவின் ஒளியைப் பரப்புவதால்; சந்த்ரகாந்தம் நீர் ஊறும் - ஆங்குக் கிடக்கும் சந்திரகாந்தக் கற்களில் நீர் ஊறிப் பெருகும் (வளம் பொருந்திய) கழுக்குன்றே-; சேந்த மலர் தாளான் - சிவந்த மலர் போலும் திருவடியுடையவரும்; நல் நந்தம் தவழ் கடலின் நஞ்சு அருந்தி மாளான் - நல்ல சங்குகள் ஊர்கின்ற கடலிலெழுந்த நஞ்சினையுண்டு இறவாதவரும்; அனந்தன் - முடிவில்லாதவரும் (ஆகிய சிவபெருமான்) வரை - தங்கும் மலையாம்.

(வி - ம்.) மூங்கில் முத்துக்கள் வெடித்துச் சிதறியெங்கும் பரந்து கிடந்து ஒளி வீசுவது நிலவொளிபோலத் தோன்றும்

எனவும், நிலவொளி கண்டு நீர்காலும் சந்திரகாந்தக் கற்கள் நிலவொளி தோன்றாத போதும் முத்துக்களின் ஒளியையே கண்டு நீர்காலும் எனவும், அவ்வியல்பு வாய்ந்த காந்தக் கற்கள் பல கிடைக்கும் என மலைவளம் காண்க. திருமால் முதலிய தேவருங் கண்டு அஞ்சி யோடிய கொடிய நஞ்சினையுண்டும் மாளாது நிலைபெற்றுவாழ்வான் எனப் பெருமான் சிறப்புத் தோன் றிற்று. தாளான் + நல் + நந்தம் = தாளானனந்தம் எனவும் மாளான் + அனந்தன் - மாளானனந்தன் எனவும் திரிந்து புணர்ந் தது. இது "னலமுன்றனவும்" என்ற நன்னூல் விதிப்படியென வுணர்க. (௧௦)

மாணிக்கப் பாறையுறு மாதர்கம லாசனி
காணத் திகழுங் கழுக்குன்றே—பூணும்வினை
விஞ்சாக் கையினான் மேலியாது வந்தாளுந்
தஞ்சாக் கையினான் றலம்.

(இ - ள்.) மாணிக்கம் பாறை உறு மாதர்-மாணிக்கக் கற்பாறையின்மேல் அமர்ந்திருக்கும் மடந்தையர்; கமலம் ஆசனிபோல் காணத்திகழும்-செந்தாமரை மலராசனத்தில் வீற்றிருக்குந் திருமகள்போல விளங்கும் (சிறப்பு வாய்ந்த) கழுக்குன்றே-; பூணும் வினை விஞ்சு ஆக்கையில் நான் மெலியாது வந்து ஆளும் - முன் செய்தவினை மிஞ்சிய உடலால் நான் வருந்தாமல் என்னுள்ளத்து வந்து என்னை யாட்கொண்ட; தஞ்சாக்கையினான் - தஞ்சாக்கை என்னும் தலத்தில் அமர்ந்தவர் (ஆகிய இறைவர்) தலம் - வாழ் திருத்தலமாம்.

(வி - ம்.) மாணிக்கம் - சிவப்பு நிறமுடையகல்; அப்பாறை வட்ட வடிவுடையது; ஆதலால் செந்தாமரைப் பூப்போல் திகழும்; அங்கு வாழ் மங்கையர்யாவரும் திருமகள் எனவே வனப் பிற் சிறந்து திகழ்வர்; என அத்தலத்தின் சிறப்புத் தோன்றுதல் காண்க. கமலாசனி - வடமொழிச் சந்தி. கமலம் - தாமரை. ஆசனி - இருக்கையாகக் கொண்டவள். பூணும் வினை என்றார்; முன்செய்த வினைவந்து இப் பிறப்பிற் பூண்போல அகலாது பற்றி நிற்றலின். விஞ்சு ஆக்கை என்றார்; மிஞ்சு வினையான் வந்த யாக்கை என்பது தோன்றுதற்கு. நல்வினை தீவினையின் மிஞ்சியவையே பிறப்பிற்குக் காரணம் என்பது அறிவுநூற் கொள்கை. மெலியாது உவந்து எனவும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். (௧௧)

விண்டோடர்மே டம்வருடை வேங்கை யருகிருத்தல்
கண்டுபய நீங்குங் கழுக்குன்றே—தொண்டர்வினைக்
கோடத்து வந்தான் குறைத்தா னொருவேடு
வேடத்து வந்தான் விருப்பு.

(இ - ள்.) விண்தொடர் மேடம் - வானிற்றொடர்ந்து செல்கின்ற மேடவடிவுடைய ஓரையானது; வருடை வேங்கை அருகு இருத்தல் கண்டு - வரையாடு புலியின் அருகில் இருத்தலை நோக்கி; பயம் நீங்கும் - சிங்க வடிவுடைய ஓரையை யடுத்துச் செல்லும் அச்சம் நீங்கும் (சிறப்பு வாய்ந்த) கழுக்குன்றே-; தொண்டர் வினை கோள் தத்துவம் தான் குறைத்தான் - அடியார் தம் வினையாற் கொள்ளப்படும் தத்துவங்கள் கூடிய பிறப்பினை நீக்கியவரும்; ஒரு வேடு வேடத்து வந்தான் - ஒரு வேடன் வடிவங் கொண்டு வந்தவரும் (ஆகிய கடவுள்) விருப்பு - விரும்புந் தலமாம்.

(வி - ம்.) விண்ணில் மேட வோரையை யடுத்துச் சிங்க வோரையுஞ் செல்லும். மலையில் வருடையும் வேங்கையை யடுத்துத் திரியும் என்க. வருடை-வரையாடு. பன்னிரண்டு ஓரையும் ஒன்றையொன் றடுத்து நிற்பனவாதலின் இடபம் மிதுனம் கடகம் இடையில் நிற்பினும் சிங்க வோரையடுத்து மேடம் செல்லும் எனக் கொள்க. மேடம் ஆட்டின் வடிவமைந்த ஓரை. கழுக்குன்றிற் புலியருகில் வருடையிருப்பது கண்டு மேடமானது சிங்கத்தை யடுத்திருக்கும் அச்சம் நீங்கும் எனக் கொள்க. வேங்கையருகில் வருடையிருப்பது சிவபெருமான் திருவருளால் எனக் கொள்க. கொடிய புலியும் வரையாட்டினைக் கொல்லாது எனவும் அப் புலியருகே வரையாடு இருக்கும் எனவும் மலைச் சிறப்புத் தோன்றிற்று. தத்துவம் - பிறப்பு. தொண்ணூற்றாறு தத்துவங்கள் கூடிய உடம்பினைத் தத்துவம் என்றார். "தத்துவர் தொண்ணூற்றறுவர் தாமாய் வாழிவ் வுடம்பைப், பித்தனெனென்னும் பிதற்றொழிவ தெந்நாளோ" என்ற தாயுமானர் வாக்குக் காண்க. அருச்சுனன் தவத்தை ஆய்ந்து வரங் கொடுத்தற்காகவும் அருச்சுனனைக் கொல்லுமாறு துரியோதனன் அனுப்பிய மூகதானவன் என்ற பன்றியைக் கொல்வதற்காகவும் அன்று வேட வடிவம் கொண்டதைக் குறிக்க "ஒருவேடு வேடத்து" என்றார். தான்: அசை. கோள் + தத்துவம் = கோடத்துவம் எனக் கூடிநின்றது. (கஉ)

மாந்தளிர்க்கை யேந்திவன மான்றேனிற் றேய்க்கமதி
காந்திமிகுத் தோங்குங் கழுக்குன்றே—சாந்தந்
தகவருந்த வந்தான் றழைத்தசிறுத் தொண்டர்
மகவருந்த வந்தான் மலை.

(இ - ள்.) வனமான் மா தளிர் கை ஏந்தி தேனில் தோய்க்க - வனமாகிய பெண் தனது மாந்தளிராகிய கையால் மதியை யேந்தித் தேன் கூட்டிலுள்ள தேனில் தோயும்படி செய்வதால்; மதி காந்தி மிகுத்து ஓங்கும் - சந்திரன் முன்னுள்ள தன்னொளியினும் மிகுந்த ஒளி யேற்று உயர்வாகத் தோன்றும் (சிறப்பு வாய்ந்த) கழுக் குன்றே-; சாந்தம் தகவு அருந்தவம் தான் தழைத்த சிறுத் தொண்டர் - சாந்தமும் நற்பண்பும் அரிய தவமும் பெருகிய சிறுத் தொண்டருடைய; மகவு அருந்த வந்தான்- பிள்ளையைக் கறியாக்கி உண்ணவந்தவர் (ஆகிய பைரவர்); மலை - வாழும் இடமாம்.

(வி - ம்.) வனம் - பூஞ் சோலை; பொழில். மலை மேலுள்ள பூஞ்சோலையை ஒரு மங்கையாகவும் அச்சோலையிலுள்ள மாவின் றளிர்களை அம் மங்கையின் செங்கைகளாகவும், மதி மாந்தளிர் மேற்படிந்து செல்வதை ஏந்துவதாகவும், ஆங்குள்ள தேனிறாலிற் றேய்வதை அம் மங்கை தோய்ப்பதாகவும், தளிரிலும் தேனிலும் அழுந்தியதால் ஒளி மிகுந்ததாகவும் கற்பித்தது காண்க. இஃது உருவகத்தோடியைந்த தற்குறிப்பேற்றம். சாந்தம்-பொறுமை. தகவு - பெருமை; பண்பு. தவம்-நெஞ்சினை ஒருவழி நிறுத்துதல். உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை, யற்றே தவத்திற் குரு'' என்ற வள்ளுவர் வாய்மொழி காண்க. (கக)

சேல்வெகுண்டு பாயவரைத் தேனிறால் கீண்டுபுனற்
கால்வழிய வோடுங் கழுக்குன்றே—மால்கெட்டுத்
துன்னும் பரியான் சுகமுறவே யாள்வன்மறை
யென்னும் பரியா னிடம்.

(இ - ள்.) சேல் வெகுண்டு பாய - கெண்டைமீன்கள் சினந்து மேலே துள்ளிப் பாய்வதால்; வரை தேன் இறால் கீண்டு - மலையில் மரங்களிலுள்ள தேன்கூடுகள் கிழிந்து வடிந்த தேன்; புனல் கால் வழிய ஓடும் - நீர் செல்லும்

வாய்க்கால் வழியாக நீருடன் கலந்து ஓடும் (வளம் பொருந்திய) கழுக்குன்றே-; மால் கெட்டு துன் உம்பர் யான் சுகம் உறவே யாள்வன் - நான் மயக்கம் நீங்கிக் கிட்டிய மேலுலகிற் சென்று இன்ப முறும்படி என்னை யாள்பவரும்; மறை என்னும் பரியான் - வேதங்களாகிய நான்கினையும் குதிரைகளாகக் கொண்டவரும் (ஆகிய சிவபெருமான்) இடம் - உறையும் இடமாம்.

(வி - ம்.) சேல் மீன்கள் செருக்குற்றுச் சினந்து ஒன்றோ டொன்று மோதி மேலே துள்ளும் எனவும், அதனால் கூடு கிழிந்து தேன் வழிந்தொழுகிக் கால்வழி செல்லும் எனவும் நீர்வளமும், தேன்வளமும், நிலவளமும் கூறினர். உம்பர் + யான் உம்பரியான் எனப் புணர்ந்தது. "தன்னொழி மெய்ம்முன் யவ்வரின் இகரம், துன்னும்" என்னும் நன்னூல் விதிகொள்க. முப்புரம் எரிக்க முயன்றபோது பூமியைத் தேராகவும் பரிதி மதியை யுருளாகவும் நான்மறையைப் பரிகளாகவும் பிரமனைத் தேரோட்டியாகவும் அமைத்துக் கொண்டார் என்பது வரலாறு. ஆதலின் "மறை என்னும் பரியான்" என்றார். (கசு)

அண்டர்தொழுங் காழியர்கோ னப்பர்திரு வன்றொண்டர்
கண்டுதமிழ் பாடுங் கழுக்குன்றே—தொண்டருக்குப்
பஞ்ச முகத்தான் படிக்கா சருளினன்
பஞ்ச முகத்தான் பதி.

(இ - ள்.) அண்டர் தொழும் காழியர்கோன் அப்பர் திருவன்றொண்டர் - தேவரும் வணங்கும் சிறப்புப் பெற்ற ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் சுந்தரரும்; கண்டு தமிழ் பாடும் - வந்து நோக்கித் தமிழ்ப்பாடல் பாடிய (சிறப்புப் பொருந்திய) கழுக்குன்றே-; தொண்டருக்கு பஞ்சம் உக தான் படிக்காசு அருளினன் - அடியார்கட்குப் பஞ்சத் தால் உண்டாய வருத்தம் நீங்குமாறு படிக்காசு வழங்கிய வரும், பஞ்ச முகத்தான் - ஐந்து முகங்களையுடையவரும் (ஆகிய பரம்பொருள்) பதி - அமர்ந்த திருப்பதியாம்.

(வி - ம்.) மூவரும் பாடிய தேவாரப் பாடல் அமைந்த சிறப்புடையது திருக்கழுக்குன்றம். மூவருள் ஒருவர் இருவர் பாடல் அமைந்த தலங்களும் உளவாதலின் இது அவற்றுள்

உயர்ந்தது என்க. மூவர் பாடலும் பெற்றதும் அன்றி வாதவூரடிகள் பாடலும் பெற்றது இது. "பூணொணாத...... காணொணாத்திருக் கோலம் நீவந்து காட்டினாய்கழுக் குன்றிலே" எனவரும் பதிகம் காண்க. இறைவன்றிருவுருவங் காட்டிய சிறப்பும் இதற்கமைந்துளது. சம்பந்தருக்கும் அப்பருக்கும் படிக்காசு அருளியது திருவீழிமிழலையில். புகழ்த்துணை நாயனார்க்குப் பொற்காசு அருளியது அரிசிற்கரைப்புத்தூரில். இவ்வரலாறு கருதித்தொண்டருக்கு எனப்பன்மையிற் கூறினர். ஈசானம், தற்புருடம், வாமனம், அகோரம், சத்தியோசாதம் என்பன ஐந்து முகங்களின் பெயர் என அறிக. (கசி)

ஏந்திழையார் தங்கரத்தி லேய்வதுபோற் பைங்கிள்ளை
காந்தளிடை மேவுங் கழுக்குன்றே—பாந்தணாண்
பூட்டியவில் லத்தர் பொழிலேழோ டேழீன்று
காட்டிய வில்லத்தர் காப்பு.

(இ - ள்.) ஏந்து இழையார் தம் கரத்தில் ஏய்வது போல்-பசுங் கிளிகள் மங்கையர் செங்கைகளிற் றங்குவது போல; பைங்கிள்ளை காந்தளிடை மேவும் - பச்சைக்கிளிகள் செங்காந்தட் பூவில் அமர்ந்திருக்கும் (காட்சி யமைந்த) கழுக்குன்றே-; பாந்தள் நாண் பூட்டிய வில் அத்தர் - பாம்புக் கயிறு பூட்டிய மலைவில்லைக் கையில் பிடித்தவரும்; பொழில் ஏழ் ஒடு ஏழ் ஈன்று காட்டிய இல் அத்தர் - மேலுலகம் ஏழுடன் கீழுலகம் ஏழும் ஈன்று யாவர்க்கும் தான் அன்னை யெனக் காட்டிய மனைவியை ஒரு பாகத்திற் கொண்டவரும் (ஆகிய இறைவர்) காப்பு - காவல் கொண்ட பதியாம்.

(வி - ம்.) ஏந்து இழையார் - இழை ஏந்தியார் என விகுதி பிரித்துக் கூட்டுக. அணிகலம் பூண்டவர் என்பது பொருள். பைங்கிளியை மங்கையர்தங் கரத்தில் வைத்து வளர்ப்பது இயற்கை. செங்காந்தட் பூவிற்றங்கிய பைங்கிளிகள் அவ்வியற்கையைக் காட்டியது எனச் சிறப்புத் தோன்றிற்று. இஃது மிகவும் வியப்பான காட்சி என்க. முப்புரம் எரிக்கத் தொடங்கியபோது இமயமலையை வில்லாகவும் வாசுகி என்ற பாம்பை நாணாகவும் அமைத்தனர் என்பது வரலாறு. அத்தர் - கையுடையவர். அத்தர் - பாகத்திற் கொண்டவர். அத்தம் - கை எனவும், பாதி எனவும் பொருள் தந்தது. "அத்தம் பொன்

பாதி கை கண்ணுடி சொற்பொருள் காடோர் நாள்'' என்ற சூடாமணி நிகண்டு வரி காண்க. "அண்ட மீன்றளித்த கன்னி,'' என உமையம்மையைப் புகழ்வதால் ஈரேழுலகும் ஈன்று காட்டிய இல் என வியந்தார். இல் - இல்லாள்; மனைவி. (கசு)

மாதர்நடங் கண்டு மயின்மறைய நாகங்கள்
காதலுட ஞடுங் கழுக்குன்றே—ஓதுங்
கலிக்கம் பனகத்தர் காணு மடியார்
கலிக்கம் பனகத்தர் காப்பு.

(இ - ள்.) மாதர் நடம் கண்டு மயில் மறைய - ஆங்கு வாழும் மடந்தையர் ஆடலைக் கண்டு மயில்கள் தம் ஆடலை விடுத்து நாணி ஒளிக்க (அது கண்டு), நாகங்கள் காதலுடன் ஆடும் - பாம்புகள் விருப்பத்துடன் படமெடுத்து ஆடும் (காட்சி யமைந்த), கழுக்குன்றே-; ஓதும் கலிக் கம்பன் அகத்தார் - துதிக்கின்ற கலிக்கம்ப நாயனரது உள்ளத்துறைபவரும்; காணும் அடியார் கலிக்கு அம்பு அன கத்தர் - தம்மைநோக்கிய தொண்டர்கள் வறுமைப் பகைக்கு அம்பு போன்ற கடவுளரும் (ஆகிய ஒருவர்), காப்பு - காவல் செய்யிடமாம்.

(வி - ம்.) பாம்புக்கு மயில் பகை யாதலின், மயிலாடும் போது பாம்பு மறைந்து மாதர் நடத்தைக் கண்டிருக்கும் எனவும், அது மறைந்தபோது மாதர் நடம்போல ஆடக்கருதிப் பாம்பு படமெடுத்து ஆடும் எனவும் ஆய்ந்து காண்க. மயிலைக் கண்டு பாம்பு அஞ்சும் என்பது "கோம்பிக் கொதுங்கி மேயா மஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும்' பாம்பைப் பிடித்துப் படங் கிழித் தாங்கு'' என்ற திருக்கோவையார்ப் பாடலாலும் அறியலாம். அம்பு பகைவரை யழித்தல்போல அடியார் வறுமையை யொழித்த லால் இறைவரைக் கலிக்கு அம்பு அன கத்தர் என்ருர். கலி- வறுமை. இதனைப் பகையாக்கி அப்பகையை யழிக்கும் அம்பு போன்றவர் எனப் பொருள் காண்க. கத்தர் வடமொழிச் சிதைவு. (கஎ)

இமிர்சேம் மணிகதிர்போ லெங்குமொளி வீசக்
கமலமல ருங்கழுக் குன்றே—தமர
மறைக்கு மருக னலனிமய மால்வேற்
பிறைக்கு மருக னிடம்.

(இ - ள்.) இமிர்செம் மணி கதிர்போல் எங்கும் ஒளி வீச - நிறைந்த சிவந்த மாணிக்கக் கற்கள் சூரியனைப் போல எங்கணும் செவ்வொளியைப் பரப்புவதால் (அவ்வொளிகண்டு); கமலம் மலரும் - தாமரைப் பூக்கள் மலரும் (சிறப்புப் பொருந்திய); கழுக்குன்றே-; தமரம் மறைக்கும் அருகன் அலன் - ஒலியுடைய வேதங்கட்கும் அருகில் உள்ளவர் அல்லாதவரும்; இமயம் மால் வெற்பு இறைக்கு மருகன் - இமயம் என்ற பெரியமலை யரசனுக்கு மருகரும் (ஆகிய சிவபெருமான்); இடம் - அமர்ந்த தலமாம்,

(வி - ம்.) செம்மணி எனவே மாணிக்கமணி யெனக் குறிப்புப் பொருள் கொள்க. கதிர் என்பதும் முன்பின்னுள்ள பொருட் குறிப்பால் செங்கதிரோன் எனப் பொருள் கொள்ள நின்றது. சூரிய வொளி கண்டு மலரும் கமலம். மணி யொளி கண்டு மலரும் எனவே இரவினும் மலரும் என்பது கூறுமலே அமையும். அருகன் - அண்மையில் இருப்போன்; அடுத்திருப்போன். அலன் என்ற எதிர்மறையால் சேய்மையில் இருப்பவன் என்ற பொருள் தோன்றிற்று. மறை முடிவிற்கும் எட்டாதவன் என்க. மலைமகளை மணந்ததால் மலையரையன் மருகனுயினன் இறைவன். (கஅ)

மதிதவழு மாட மரகதத்தி னுற்செங்
கதிர்பச்சை யாங்கழுக் குன்றே—வதியும்
மதியரவம் பாற்றினுன் வாழ்த்தி வணங்கு
மதியரவம் பாற்றினுன் வாழ்வு.

(இ - ள்.) மதிதவழும் மாடம் மரகதத்தினுல் - சந்திரனும் தவழ்ந்து செல்லுமாறு உயர்ந்த மாளிகைகளிற் பதித்த மரகத மணியின் பச்சையொளிப் பரப்பினுல்; செங்கதிர் பச்சையாகும் - செவ்வொளியுடைய சூரியனும் பச்சையாகத் தோன்றும் (வியப்பமைந்த); கழுக்குன்றே-; வதியும் மதி அரவு அம்பு ஆற்றினுன் - முடிமேல் தங்கும் பிறைமதியையும் பாம்புகளையும் கங்கை நீரையும் தாங்கியவரும்; வாழ்த்தி வணங்கும் மதியர் அவம் பாற்றினுன்-துதித்துப் பணியும் அறிஞர்க்கு வரும் கேட்டினை நீக்குபவரும் (ஆகிய அரனுர்); வாழ்வு - வாழ் இடமாம்.

(வி - ம்.) மதிதவழும் மாடம் என உயர்வும், மரகதவொளி சூரிய வொளியைப் பச்சையாக்கும் என்பதால் மரகதம் பல மாளிகைக டோறும் பதித்திருப்பர் என அந்நகரமக்கள் செல்வச் சிறப்பும் தெரிந்தன. ஆற்றினன் - பொறுத்தான், தாங்கினன். ஆற்றுதல் - பொறுத்தல். அம்பு ஆற்றினன் - நீர் நிறைந்த கங்கையாற்றினையுடையவன் எனக்கொள்வது பொருத்தமன்று. மதி, அரவு, அம்பு இவற்றைத் தாங்கினன் என்பதே பொருட் பொருத்தமாம். மதியர்-அறிவுடையோர். (கக)

தொண்டின்மிகு வாதவூர்த் தோன்றல் குருவடிவங்
கண்டு களிக்குங் கழுக்குன்றே—விண்டுமுனம்
வேகத்தா னுகத்தான் மேவியுகைத் தானுமையாள்
பாகத்தா னுகத்தான் பற்று.

(இ - ள்.) தொண்டில் மிகு வாதவூர் தோன்றல் - அடியார்களிற் சிறந்த வாதவூரடிகள் ஆகிய மணிவாசகர் வந்து; குரு வடிவம் கண்டுகளிக்கும் - தம் குருவின் வடிவம் தோன்றக் கண்டு மகிழ்ச்சியடையும் (இடமாகிய); கழுக்குன்றே-; விண்டு முனம் வேகத்து ஆன் ஆக தான் மேவி உகைத்தான் - திருமால் முற்காலத்தில் விரைவுடைய விடைவடிவமாக அவ்விடைமேல் தான் ஏறியமர்ந்து செலுத்தியவரும்; உமையாள் பாகத்தான் - உமையாளை யொருபாகத்திலுடையவரும்; நாகத்தான் - பாம்பு அணியுடையவரும் (ஆகிய சிவபெருமான்); பற்று - விரும்பி வாழும் இடமாம்.

(வி - ம்.) மணிவாசகப் பெருமான் முதலிற் றிருப்பெருந்துறையிற் குருந்த மரத்தடியிற் கண்ட குருவடிவாம் திருவடிவை இக்கழுக்குன்றிற் கண்டனர் என்பது, "கலங்கி னேன்கலங் காம லேவந்து காட்டி னுய்கழுக் குன்றிலே" என்பதுபோன்ற பொருளமைந்த கழுக்குன்றப் பதிகத்தால் விளங்கும். உகைத்தான் - செலுத்தினன். பாகத்தான் ஆகத்தான் எனப் பிரித்து பாகத்தான் ஆகிய ஆகத்தான் எனப் பொருள் கொள்ளினும் பொருந்தும். ஆகத்தான் - உடலுடையவன். ஆகம் - உடம்பு. விண்டு ஆன் ஆக வேகத்துஆன் ஆக-ஆனுக்கு வேகத்தை அடையாக்குக. விண்டு - திருமால். ஆன் - விடை, காளை. முனம்விண்டு வேகத்து ஆன் ஆக தான் மேவியுகைத்தான் எனக் கூட்டுக. (உ0)

குலவுமந்த ரத்துவருங் கோளரவைக் கண்டு
கலவமயி ருவுகழுக் குன்றே—குலவரியா
மோட்டாமை யோட்டினன் மூளுநமன் கையிலெனைக்
காட்டாமை யோட்டினன் காப்பு.

(இ - ள்.) அந்தரத்து குலவும் வரும்கோள் அரவை - விண்ணில் உலவி வரும் ஒன்பது கோள்களுட் பொருந்திய இராகு கேது வென்னும் பாம்புகளை; கலவம் மயில் கண்டு தாவும் - தோகையுடைய மயில் இயற்கைப் பாம்புகள் என்று மருண்டு நோக்கிக் கவ்வுதற்கு விரைந்து செல்லும் (வியப்பமைந்த); கழுக்குன்றே-; குலம் அரி ஆம் மோட்டு ஆமை ஓட்டினன் - மேன்மையான திருமாலாகிய பெரிய ஆமையோட்டை யணிந்தவரும்; மூளும் நமன் கையில் எனை காட்டாமை ஓட்டினன் - சினமூண்டுவரும் இயமன் கைக்கு அடியேனைக் காட்டாமல் நல்வழியிற் செலுத்தின வரும் ஆகிய (சிவபெருமான்); காப்பு - காவலிடமாம்.

(வி - ம்.) கழுக்குன்றத்தில் உலவு மயில்கள் விண்ணில் வரும் இராகு கேதுக்களைப் பற்றும் என்றதனால் அம்மலை வானளாவி நிற்கின்றது என்பதும், மயில்கள் பல வளர்ந்து செருக்கித்திரிந்து பெரும்பாம்புகளையும் பற்றும் எனவும் சிறப்புக் காண்க. திருமால் ஆமையாகப் பிறந்து திருப்பாற்கடல் கடையும்போது மந்தர மலையை யுள்ளழுந்தாமல் தாங்கினர் என்பதும், பின்னர்ச் செருக்கித் திரிந்து உலகத்தார்க்குத் துன்பம் விளைக்க அவ்வாமையைக் கொன்று அதன் ஓட்டைத் தம் முடம்பில் அணியாகத் தரித்தனர் என்பதும் வரலாறு. ஆசிரியர் சிவபெருமானைப் பாடித் துதித்து வருவதால் கூற்றுவன் தம்மைக் கொல்லான் சிவனுலகஞ் சேர்வது திண்ணம் என்ற தமது குறிக்கோளை "நமன்......ஓட்டினன்" என விளக்கினர். (௨௧)

வானதிதோ யும்பர் மடவனங்கு றத்தியர்தங்
கானடைகண் டேங்குங் கழுக்குன்றே—ஞானமே
ஆன்றதிருக் கண்ணார்த மற்பகத்தார் சேவ்வனலைக்
கான்றதிருக் கண்ணார்தங் காப்பு.

(இ - ள்.) வான் நதி தோய் உம்பர் மடம் அனம் - விண்ணின் கண்ணுள்ள கங்கையாற்றிற் படியும்

வானுலகில் வதியும் இளமையான அன்னப் பறவைகள்; குறத்தியர் கால்நடை கண்டு ஏங்கும் - மலைவாழுங் குறவர் குலமகளிர் கால்நடையைக் கண்டு தம் நடையினும் அழகிய நடையெனப் பெருமூச்சு விட்டு நிற்கும் (பெருமை சேர்ந்த); கழுக்குன்றே-; ஞானமே ஆன்ற திருக்கு அண்ணுர் தம் அற்பு அகத்தார் - அறிவு நிறைந்த மாறு பாடு இல்லாத் தொண்டர் தமது அன்பு பொருந்தும் நெஞ்சத்து அமர்ந்தவரும்; செவ்வனலை கான்ற திரு கண்ணுர்-சிவந்த தீயைக் கக்கிய சிறந்த நெற்றிக் கண்ணுடைய வரும் (ஆகிய சிவபெருமான்); காப்பு - காவலிடமாம்.

(வி - ம்.) வானதி அம்மலைக்கு அண்மையில் உள்ளது எனவும் அம்மலைக் குறமகளிர் அரமகளிரினும் சிறந்த வனப் புடையர் எனவும் குன்றச் சிறப்புத் தோன்றுவது காண்க. அன்பு-அற்பு என மென்ருெடர் வன்ருெடராயிற்று. செம்மை+ அனல்=செவ்வனல் மை விகுதி கெட்டு முன்னின்ற மெய் திரிந்தது. வான்+நதி=வானதி. கால்+நடை=கானடை எனப் பிரித்துப் பொருள் கொள்க. (உஉ)

தாமரையம் பாற்கார் முகவேழத் தால்வனத்தாற்
காம னிகராங் கழுக்குன்றே—மாமன்றீ
யாக மவித்தா னியம்புமிரு பத்தேட்டாம்
ஆக மவித்தா னகம்.

(இ - ள்.) தாமரை அம்பால் - தாமரைப்பூ வாகிய அம்புடைமையால்; தாமரையும் நீரும் அமைந்திருப்பதால்; கார்முகம் வேழத்தால் - கரும்புவில்லுடைமையால்; கரிய முகத்தையுடைய யானைகள் திரிவதால்; வனத்தால் - சிறந்த வெழிலுடைமையால்; காடுகள் அடர்ந்திருப்பதால்; காமன் நிகர் ஆம் கழுக்குன்றே - மன்மதனையொப்பாகத் தோன்றும் கழுக்குன்றமே-; மாமன் தீ யாகம் அவித்தார்- தக்கனுகிய மாமன் இயற்றிய வேள்வித்தீயைக் கெடுத்த வரும்; இயம்பும் இருபத்தெட்டு ஆகமம் வித்தார்-அறிஞர் கூறும் காமிகம் யோகசம் முதலிய இருபத்தெட்டு ஆகம நூல்கள் தோன்றுவதற்கு வித்தாக அமைந்தவரும் (ஆகிய சிவபெருமான்); அகம் - இடமாம்.

(வி - ம்.) இது சிலேடையமைந்த செய்யுள்; மன்மதனுக்கும் கழுக்குன்றத்துக்கும் சொல்லால் ஒப்புக் காட்டினர் ஆதலால். அம்பு - கணை; நீர். கார்முகம் - வில்; கரியமுகம். வேழம் - கரும்பு; யானை. வனம் - அழகு; காடு. என இருபொருள்தரும் சொற்கள் அமைந்துள்ளன. தக்கன்வேள்வியைச் சிதைத்த வரலாறு கந்தபுராணத்திற் காண்க. காமிகம் முதலிய இருபத் தெட்டு ஆகமங்களும் சிவபெருமானுக்குத் தலை முதலிய உறுப்புக்கள் என நூல் கூறுவதால் "ஆகம வித்தார்" என்றார். இக்கவி முதல் ஆறு கவிகள் இடையே சிலேடையமைந்துள்ளன. பின்னும் முன்னும் சிலேடை யமைந்தன வில. (உ௬)

ஆம்பன்முகி லூர்ந்துசசி யார்ந்துபல கண்மருவிக்
காம்பிந் திரனுங் கழுக்குன்றே—ஆம்புகழ்சேர்
ஆலவா யுள்ளா னகத்தன்பி லாரையரு
ளாலவா யுள்ளா னகம்.

(இ - ள்.) ஆம்பல்முகில் ஊர்ந்து - பலவாகிய மேகங்கள் தம் மேல் செல்வதாலும்; வெள்ளை யானையையும் மேகத்தையும் வாகனமாகச் செலுத்துவதாலும்; சசி ஆர்ந்து - சந்திரன் தோய்வதாலும்; இந்திராணியைச் சேர்ந்திருப்பதாலும்; பலகண் மருவி - பலகணுக்கள் பொருந்தி நிற்பதாலும்; ஆயிரங்கண்கள் அமைந்திருப் பதாலும்; காம்பு இந்திரன் ஆம் - அம்மலை மூங்கில்கள் இந்திரனுக்கு ஒப்பாகும் (சிறப்புடைய); கழுக்குன்றே-; ஆம் புகழ் சேர் ஆலவாய் உள்ளான் - புலவர் கூறும் புகழமைந்த மதுரையிற் கோயில் கொண்டுறைபவரும்; அகத்து அன்பிலாரை அருளால் அவாய் உள்ளான் - உள்ளத்து அன்பில்லாதவரைத் திருவருளால் விரும்பி நினையாமல் தள்ளி விடுபவரும் (ஆகிய கடவுள்); அகம் - அமரும் இடமாம்.

(வி - ம்.) இதுவும் சிலேடை யமைந்தது அம்மலையில்; வளர்ந்து நிற்கும் மூங்கிலையும் இந்திரனையும் சொல்லால் உவமையாக்கியது இது. ஆம்பல் - ஆகிய பல (பலவாகிய); யானை: சசி - சந்திரன்; இந்திராணி; கண் - கணுக்கள்: விழிகள் இவ்வாறு இரு பொருள் தந்து நின்றன; ஆம்பல், சசி, கண் என்ற மூன்று சொற்களும். (உ -

சந்தமிகுந் தங்குறமான் சார்ந்துமயி லின்புற்றுக்
கந்த னிகராங் கழுக்குன்றே—அந்தமிகும்
அஞ்ச மறியா னருள்வரங்கேட் கும்மடியார்
அஞ்ச மறியா னகம்.

(இ - ள்.) சந்தம் மிகுந்து - அழகுமிகுந்துள்ளமை யாலும்; சந்தனமரங்கள் மிகுந்துள்ளமையாலும்; அம் குறமான் சார்ந்து - அழகிய குறக்குலத்தார் வளர்த்த வள்ளியம்மையுடன் கூடியதாலும்; அங்கு உற மான் சார்ந்து - மான்கள் அங்குப் பொருந்திச் சார்ந்து வாழ்வதாலும்; மயில் இன்புஉற்று-மயிலூர்தியில் ஏறி இன்பமுறுதலாலும்; மயில்கள் இன்பத்துடன் பொருந்தி அங்கு வாழ்வதாலும்; கந்தன் நிகர் ஆம் —முருகனுக்கு ஒப்பாகும் (இயல்புடைய); கழுக்குன்றே-; அந்தம் மிகும் அஞ்சம் அறியான் - அழகிய அன்னப்பறவையால் அறியப்படாதவரும்; அருள் வரம் கேட்கும் அடியார் அஞ்ச மறியான் - திருவருளையே தர வேண்டும் என வரங்கேட்கும் அடியார்கள் அஞ்சும்படி மறுத்துரையாதவரும் (ஆகிய சிவபெருமான்); அகம் - உறையும் இடமாம்.

(வி - ம்.) முருகனுக்கும் கழுக்குன்றத்திற்கும் ஒப்புக் கூறியது. சந்தம் - அழகு; சந்தனமரம்: குறமான் - வள்ளி. மான் உவமையாகு பெயர். 'மயில் இன்புற்று' என்ற சொற்றொடரை, மைஇல் என்பது போலியாக மயில் என வந்தது. எனக் கொண்டு "குற்றமில்லாத இன்பத்தைப் பொருந்தி" என முருகனுக்கும் 'மேகத்தால் இன்பத்தைப் பொருந்தி' எனக் கழுக்குன்றத்திற்கும் பொருள் கொள்ளலுமாம். அஞ்சம் - அன்னம். பிரமன் அன்னப்பறவையாய் முடிதேடச் சென்றதைக் குறித்தது அது. (உரு)

சுருதிபயின் றோதிமமாய்ச் சூழ்கலைமா னேந்திக்
கருதுமய ஞங்கழுக் குன்றே—பொருமமணர்
நட்டரா கத்தா னலிவித்தார் சொற்பதிகம்
நட்டரா கத்தா னகர்.

(இ - ள்.) சுருதி பயின்று - நான்கு வேதங்களையும் ஓதிப் பயின்றதாலும்; வேதங்களின் ஒலிநிறைந்துள்ளமை

யாலும்; ஓதிமம் ஆய் - அன்னப்பறவை வடிவமாயதாலும்; மலையுருவாய் நிற்பதாலும்; சூழ்கலைமான் ஏந்தி - தன்னோடு சேர்ந்த கலைமகளை நாவில் ஏந்தியதாலும்; தன்பால் வரும் கலைமான்களைத் தாங்கியிருப்பதாலும்; கருதும் அயன் ஆம் - யாவரும் எண்ணும் பிரமனுக்கு ஒப்பாகும் (பெருமை வாய்ந்த); கழுக்குன்றே-; பொரும் அமணர் நட்டர் ஆக தான் நலிவித்தார்-சொற்போர் புரிந்த சமணர்களைக் கேடுடையராகும்படி குறைவுறச் செய்த வரும்; சொற்பதிகம் நட்டராகத்தான் - சம்பந்தர் பாடிய "தோடுடைய" என்ற சொல்லமைந்த பதிகத்தின் நட்டராகத்தை யேற்றுக் கொண்டவரும் (ஆகிய சிவ பெருமான்); நகர் - வதியும் நகரமாம்.

(வி - ம்.) ஓதிமம் - அன்னம்; மலை. கலைமான் - வாணி; கலையும் மானும். கலை-ஆண் மான். நட்டராகம் - நட்டபாடை என்ற பண். அப்பண்ணமைந்தது அப்பாடல். அப்பாடலை யேற்றவர் என்பது கருத்து. நட்டராகச் சொற்பதிகத்தான் என விகுதி பிரித்துக் கூட்டிக்கொள்வது பொருத்தமாம். நட்டர் என்பது நஷ்டம் என்னும் வடமொழி திரிந்து வந்தது. நட்டர் ஆக-நட்ட முடையாராக. தான் : அசை. (உகூ)

**கண்ணரனுர் தாட்கிட்டுக் காணேன மேனிவந்து**
**கண்ணனெனு மாலாங் கழுக்குன்றே—நண்ணும்**
**மறைக்காட்டி னுர்வான் மகிழ்பா சூரிற்பாம்**
**பிறைக்காட்டி னுர்வா ழிடம்.**

(இ - ள்.) கண் அரனுர் தாட்கு இட்டு - விழியைப் பறித்துச் சிவபெருமான் திருவடிக்கு இடுதலாலும்; காண் ஏனம் மேனிவந்து - யாவராலும் காண்ப்படும் வராக வடிவ மாகப் பூமியின்மேல் வருதலாலும்;

கண் அரனுர் தாட்கு இட்டு - தன்இட முழுவதும் சிவபெருமான் திருவடிக்கு உறைவிடமாக விட்டிருப்பதா லும்; காண் ஏன மேல் நிவந்து - காணப்படும் பன்றிகள் தன்மேல் பரவித் திரியப்படுவதாலும்; கண்ணன் எனும் மால்ஆம்-கண்ணன் என்ற பெயருடைய திருமாலை யொக்

கும் (சிறப்புடைய); கழுக்குன்றே; நண்ணும் மறைக்காட்டினார் - பொருந்திய மறைக்காடு என்னும் தலத்தில் வாழ்பவரும்; வான்மகிழ் பாசூரில் - தேவரும் மகிழ்ந்துவந்து வணங்கும் திருப்பாசூரில்; பாம்பு இறைக்கு ஆட்டினார் - ஓர் அரசன் பொருட்டுப் பாம்புப் பிடாரனாகி வந்து பாம்பினை யாட்டியவரும் (ஆகிய சிவபெருமான்); இடம்-வாழும் தலமாம்.

(வி - ம்.) திருப்பாசூரிற் கரிகாலச்சோழன் சிலநாள் அரசு புரிந்தபோது பகையரசன் அவனைக் கொல்ல நினைந்து குடத்தில் வைத்து விடுத்த பாம்பினைச் சிவபெருமான் பிடாரனாக வந்து பிடித்து ஆட்டிப் பின்னர் அப்பாம்பினால் அப்பகைவனைக் கொல்வித்தார் என்பது அத் தலபுராணச் செய்தி. "நெற்றிக் கண்ணினர் நீளரவந்தனைப் பற்றியாட்டுவர் பாசூரடிகளே" என்ற தேவாரப் பாடலும் இதனைக் குறிப்பாக உணர்த்தும். இது செம்மொழிச் சிலேடை. பிரித்துப் பொருள் கூறப்படாதவாறு அமைந்துள்ளது காண்க. (உஎ)

நிருத்தன் மகிழ்ந்துதவ நீடிமெய் யன்பர்
கருத்தை நிகர்க்குங்கழுக் குன்றே—வருத்தமுறு
மாலய மேயான் மருவா தருள்பூசல்
ஆலய மேயா னகம்.

(இ - ள்.) நிருத்தன் மகிழ்ந்து உதவ நீடி - நடம் புரிந்த சிவபெருமான் மகிழ்ச்சியுற்றுத் திருவருளுதவுமாறு நெடிதுநாட் பயில்வதால்;

நிருத்தன் மகிழ்ந்து தவம் நீடி - நடம் புரிந்த சிவபெருமான் மகிழ்வுடன் தங்கப் பெற்றுப் பல முனிவர் தவம் நெடுங் காலம் புரியப்படுவதால்;

மெய் அன்பர் கருத்தை நிகர்க்கும்-உண்மையடியார் தம் முள்ளத்தைப் போன்ற (தூய்மையுடைய) கழுக்குன்றே-; வருத்தம் உறுமால் அயம் ஏ யான் மருவாது அருள்-வருத்தத்தைத் தரும் மயக்கமும் ஐயமும் நான் மனத்துட் பொருந்தாமல் திருவருள் புரியும் (இறைவரும்), பூசல் ஆலயம் மேயான் - பூசலார் என்ற நாயனார் அமைத்த

உள்ளக் கோயிலில் அமர்ந்தவரும் (ஆய பரமர்), அகம்-அமர்ந்துள்ள இடமாம்.

(வி - ம்.) இது அடியார் கருத்துக்கும் கழுக்குன்றத்துக்கும் சிலேடை எனக் காண்க. நிருத்தன் மகிழ்ந்து தவநீடி என்ற சொற்றொடரினையே இருபொருள்பட இயைத்துக் கொள்க. தவ நீடி - மிகவும் உயர்ந்து என மலைக்கு ஆக்கினும் அமையும். தவம் நீடி என்பதை மெய்யடியார் கருத்திற்குப் பொருத்துவதும் அமையும். பூசல் என்பது நாயனாரை யுணர்த்தியது. ஆலயம் என்பது அவரமைத்த உள்ளக் கோயிலை யுணர்த்தியது. பூசலார் கோயிலமைத்து வழிபட்ட வரலாற்றினைத் திருத்தொண்டர் புராணத்துட் காண்க. 'நிகர்க்குங்கழுக்' என்ற சீரினை ஒற்று நீக்கிக் காய்ச் சீராக்கித் தளை காண்க. (உஅ)

விண்டு பிரமன் விழைந்துகழு கைத்தொழுதல்
கண்டவா யேங்குங் கழுக்குன்றே—அண்டர்தொழும்
பாதத்தா னந்தம் பணிகோடிருப் பாணர்யாழ்
நாதத்தா னந்த னகர்.

(இ - ள்.) பிரமன் விழைந்து கழுகை தொழுதல் கண்டு-பிரமன் விரும்பிக் கழுகு வடிவாய் வந்து வணங்கிச் செல்லும் முனிவரைப் பணிவதை நோக்கி; திருமால் அவாய் ஏங்கும் - திருமாலும் விரும்பிப் பணிவதற்குப் பெருமூச்சு விட்டு நிற்கும் (பெருமை வாய்ந்த); கழுக்குன்றே-; அண்டர் தொழும் பாதத்தான் - வானோரும் வணங்குந் திருவடியுடையவரும்; நந்தம் பணிகொள் - மெய்யடியாராகிய நம் பணியை யேற்றுக் கொள்ளும்; திருப் பாணர் யாழ் நாதத்து ஆனந்தன் - திருநீலகண்டர் எனும் யாழ்ப்பாணர் வீணை யிசையால் இன்பமுற்றவரும் (ஆகிய சிவபெருமான்); நகர் - அமர்ந்த பெரு நகரமாகும்.

(வி - ம்.) பிரமன் ஒரு கற்பத்தில் அன்னவுருவாய்ப் பறந்து சென்று முடிகாணாது வந்தவன் மற்றுமொரு கற்பத்தில் கழுகுவடிவாய்ப் பறந்துகாண முயன்றனன் என்பதும், முடியறியாது மீண்டபோது சம்பு, ஆதி என் என்ற முனிவரிருவரும் கழுகுருவாய் வந்து பூசிக்கக் கண்டு அக்கழுகுருவத்தை வணங்கிச் சென்றனன் என்பதும் அத்தல வரலாறு. அவ்வரலாற்றினையுட் கொண்டு "விண்டு அவாயேங்கும்" என்றார். கழுகுவடிவங்

கொண்ட பிரமன் கழுகுவடிவமைந்த முனிவரை இத்தலத்தில் வழிபடுவது போலப் பன்றியுருவெடுத்த நாம் பன்றியுருவெடுத்த முனிவரைப் பார்த்து வணங்கும் பேறு பெற்றிலேமே என்று ஏங்கினன் என்பது கருத்து. நம் தம் - நந்தம். தம்: சாரியை. நம் என்பது தொண்டர் பலரையும் தம்முடன் சேர்த்துக் கூறியது. திருநீல கண்டர் யாழிசையோடு திருஞானசம்பந்தர் பாடல் இயைந்து இன்பத்தை யளித்தது இறைவனுக்கு எனக் கொள்க. (உகூ)

பூவைசம யத்தலைவர் போற்றுமொழி பாடவும்பர்
காவில் வணங்குங் கழுக்குன்றே—சேவையர்கோன்
தொண்டர் புராணஞ் சொலமு னருள்கூர்ந்த
அண்டர் புராண னகம்.

**(இ - ள்.)** சமயத் தலைவர் போற்றுமொழி - சைவ சமய முதல்வர் ஆகிய நால்வர் துதித்துப் பாடிய தேவாரம் திருவாசகம் என்ற பாடல்களை; பூவைபாட - நாகணவாய்ப் பறவைகள் பாட (அப்பாடலைக் கேட்டு), உம்பர் காவில் வணங்கும் - விண்ணோரும் தம் கற்பகத்தருவிலமர்ந்தே பணியும் (உயர்வுடைய); கழுக்குன்றே-; சேவையர்கோன் தொண்டர் புராணம் சொல - சேக்கிழார் பெருமான் திருத் தொண்டர் புராணம் பாடுவதற்கு; முன் அருள் அண்டர் புராணன் -முன்னர் அருள் புரிந்த தேவர்க்கெல்லாம் ஆதியானவரது; அகம் - இடமாம்.

(வி - ம்.) திருக்கழுக் குன்றத்துச் சிவனடியார் பலர் வந்து தேவாரம் திருவாசகங்களைப் பாடி வழிபடுவர் என்பதும், அப் பாடல்களைப் பூவைகள் கேட்டுப் பயிலும் என்பதும், அப்பாடல் அக்குன்றத்துயர்வாற் காவிலுள்ள தேவராலும் கேட்கப்படும் என்பதும் குறிப்பாற் புலப்பட்டது. "உலகெலாம்" என அடி யெடுத்துக் கொடுத்தனர் ஆதலின் "அருள் கூர்ந்த" என்றார். புராணன் - பழமையானவன். சேவையர்கோன் - சேவையர்க்குத் தலைவன்; இது சேக்கிழாரை யுணர்த்தும். (௩0)

மிண்டு மெயினர்கணை விட்டுமுயல் வேட்டைசெயல்
கண்டுமதி யஞ்சுங் கழுக்குன்றே—பண்டைமறை
ஈட்டுமெஞ்ச னத்த னிருபால னானன்பர்
ஆட்டுமெஞ்ச னத்த னகம்.

(இ - ள்.) மிண்டும் எயினர் - அம்மலையில் நெருங்கி வாழும் வேடர்கள்; கணைவிட்டு முயல் வேட்டை செயல் கண்டு - வில்லை வளைத்துப் பாணந்தொடுத்து விடுத்து முயல்களை வேட்டையாடிக் கொல்வதைக் கண்டு; மதி அஞ்சும் - சந்திரன் அச்சமடையும் (இயல்புடைய); கழுக் குன்றே-; பண்டை மறை ஈட்டும் அஞ்சன் நத்தன் இருபால் உளான் - பழைய மறைகளைத் தொகுத்த பிரமனும் சங்கினையேந்தியவனும் இருபால் அமர்ந்துறையும் திருவுருவுடையவரும்; அன்பர் ஆட்டும் மஞ்சனத்தன் - அடியார்களால் திருமஞ்சனம் ஆட்டப் பெறுபவரும் (ஆகிய சிவ பெருமான்); அகம்-வீடாகும்;

(வி - ம்.) மதிமண்டலம் வரை கழுக்குன்றம் உயர்ந்து நிற்பதால் சந்திரன் அம்மலைக்குள்ளே நுழைந்து செல்வன் என்பதும், வேடர் முயலை வேட்டையாடுவதால் அம்முயல் போன்ற களங்கம் அமைந்த நம் வடிவையும் முயல் எனக் கருதிக் கணையேவுவரோ என அஞ்சினுன் என்பதும் ஆய்ந்து காண்க. நத்து - சங்கு; நத்தன் - சங்கைக் கொண்டவன் (திருமால்); அஞ்சன் + அத்தன் எனப் பிரித்து அயனுடைய தந்தை எனலுமாம். திருமஞ்சனம்-நீராட்டல். அன்பர்களால் மஞ்சனம் ஆட்டப்படுவான் எனப் பொருள் கொள்க. (௩௧)

அரனை யவமதித்த லாலன்பி னந்தி
கருடனைச் சீறுகழுக் குன்றே—அருளின்
உருத்தலை யூரார் கலிவிட முண்போர்
திருத்தலை யூரார் சிலம்பு.

(இ - ள்.) அரனை அவமதித்தலால் (கருடனைவன்) சிவபெருமானை இழிவாகக் கருதியதால்; அன்பின் நந்தி - சிவபெருமான்மீது பேரன்புடைய நந்திதேவர்; கருடனை சீறு - அக்கருடனைச் சினந்து வசை கூறிய (வரலாறமைந்த); கழுக்குன்றே—; உருத்து அலைஊர் ஆர்கலிவிடம் அருளின் உண்போர் - கொதித்து அலைமோதுங் கடலிலெழுந்த நஞ்சினைத் திருவருளால் உண்டு கண்டங் கறுத்தவரும்; திருத்தலை ஊரார் - திருத்தலையூர் என்று பெயர் பெற்ற தலத்தில் வாழ்பவரும் (ஆகிய கடவுளர்); சிலம்பு - வாழு மலையாம்.

(வி - ம்.) கருடன் சிவபெருமானை அவமதித்தது தெரிந்து நந்திதேவர் கருடனைச் சினந்து சபித்தனர் என்பதும், அச்சாபம் நீங்கும் பொருட்டுக் கருடன் அங்குவந்து வழிபட்டுச் சாபம் நீங்கினன் என்பதும், அத்தல புராண வரலாறு. காருடச்சருக்கம் காண்க. அருளின் உண்போர் எனக் கூட்டுக. உருத்திர பசுபதி நாயனுர் உதித்த பெருமையமைந்தது திருத்தலையூர் என்பது.
(கூஉ)

மருவுமோரு நால்வேதம் வந்துகுன்ற மாகிக்
கருதவர நல்குகழுக் குன்றே—திருநடஞ்செய்
பாதாம் புயத்தர்விற் பார்த்தனடிக் கத்தழும்பு
மீதாம் புயத்தர் விழைவு.

(இ - ள்.) மருவும் ஒரு நால் வேதம் வந்து குன்றம் ஆகி - பொருந்திய ஒரு நான்கு வகைப்பட்ட மறைகளும் வந்து மலைவடிவமாகி; கருத வரம் நல்கும் - அடியார் நினைக்க நினைத்த வரங்களை யெல்லாம் அளிக்கின்ற (சிறப்பமைந்த) கழுக்குன்றே—; திருநடம் செய் பாதம் அம்புயத்தர் - சிறந்த நடனம் புரிகின்ற திருவடித் தாமரையுடையவரும்; வில் பார்த்தன் அடிக்க தழும்பு மீது ஆம் புயத்தர்- அருச்சுனன் வில்லாலடிக்க அவ்வடித்தழும்பு மேற்கொண்ட (புயங்களையுடையவரும் ஆகிய தெய்வம்); விழைவு-விரும்பி வாழிடமாம்.

(வி-ம்.) இருக்கு, எசுர், சாமம், அதர்வணம் என்ற நான்கு மறைகளும் மலைவடிவாய் வந்து நின்றன என்பதும், அம்மலைமேல் கொழுந்தாகச் சிவன் வீற்றிருந்தார் என்பதும் அத்தல வரலாறு. பாதம் + அம்புயத்தர் = பாதாம்புயத்தர். இது வடமொழிச் சந்தி; அடித்தாமரையுடையவர் என்பது பொருள். இஃது உருவகம். அருச்சுனன் வில்லாலடித்தது பாரதக்கதை. "வேதமடியுண்டன...நாதனமலன்சமர வேடவடி வங்கொடு நரன்கையடியுண்டபொழுதே" என்பது வில்லியாழ்வார் பாடல். (கூகூ)

உய்வானோர் கோடி யுருத்திரர்கள் பூசித்துக்
கையாற் றொழுஞ்சீர்க் கழுக்குன்றே—மையார்விண்
வீசு பதத்தான் விரிஞ்சன் றேழவரியான்
பாசு பதத்தான் பதி.

(இ-ள்.) உய்வான் ஓர்கோடி உருத்திரர்கள் பூசித்து-ஒருகோடி உருத்திரகணங்கள் வந்து தாம் உய்யும்பொருட்டுப் பூசனைபுரிந்து; கையால் தொழுசீர் - கைகளால் வணங்கிய சிறப்பமைந்த; கழுக்குன்றே—; மை ஆர் விண் வீசு பதத்தான் விரிஞ்சன் தொழ அரியான் - மேகங்கள்நிறைந்த விண்ணை யோரடியாக அளக்க நீட்டிய பாதத்தையுடைய திருமாலும் பிரமனும் வணங்குதற்கு அறியப்படாத அருமையுடையவரும்; பாசுபதத்தான் - பாசுபதம் என்ற பெயர்பெற்ற கணையுடையவரும் (ஆகிய சிவபெருமான்); பதி - தலமாகும்.

(வி - ம்.) திருக்கழுக்குன்றப் புராணத்தில் உருத்திர கோடிச் சருக்கத்தில், உருத்திரர் ஒரு கோடிக்கணக்காயவர் வந்து பூசித்துப் பேறுபெற்றனர் எனக் கூறியுள்ள செய்தி காண்க. "மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத் தாவிய சேவடி" எனத் திருமால் சேவடி புகழப்படுவதால் விண்வீசு பதத்தான் என்றார். அத்தகைய பெருமையுடையவனும் காண்பதற்கு அரியான் என அரன் பெருமை தோன்ற நின்றது. (௬௪)

அண்ணன் மொழிமறுத்த லானந்தி வந்துதவங்
கண்ண வருளுங் கழுக்குன்றே—நண்ணியமான்
துஞ்சாக் கரத்தர் தொழுமன்பர் தான்மறவாப்
பஞ்சாக் கரத்தர் பதி.

(இ - ள்.) அண்ணல் மொழி மறுத்தலால் நந்தி - சிவபெருமான் "கருடனை வருத்தாதே" என்ற ஆணையை மறுத்துக் கூறியதால் திருநந்தி தேவர்; வந்துதவம் கண்ண அருளும் - வந்தமர்ந்து தவம் கருதிப் புரியச் சிவபெருமான் திருவருள் புரிந்த (பெருமை வாய்ந்த); கழுக்குன்றே—; நண்ணிய மான் துஞ்சா கரத்தர் - தம்பால் வந்து சேர்ந்த மான் கன்றானது இறவாமல் உயிருடன் இருக்கும் திருக்கையுடையவரும்; அன்பர்தாம் மறவா பஞ்சம் அக்கரத்தர் - அடியார்கள் என்றும் மறவாது ஓதும் ஐந்தெழுத்து மந்திரமுடையவரும் (ஆகிய இறைவர்); பதி - தலமாம்.

(வி - ம்.) திருநந்திதேவர், சிவபெருமான் "கருடனை வருத்தாதே" எனக் கழறிய ஆணையை மறுத்த குற்றத்தை நீக்கும்

பொருட்டுப் பின்னர் அந் நந்திதேவர் வந்து தவம்புரிந்து பேறு பெற்றுச் சென்றனர் என்பது வரலாறு. கழுக்குன்றப் புராணம் நந்தி தவச் சருக்கம் காண்க. தாருகாவன முனிவர் சினந்து வேள்வி யியற்றிக் கொல்லவிடுத்த பொருள்களில் ஒன்ருகிய மானைக் கொல்லாது உயிருடன் கையில் அமர்த்தினர் என்ற குறிப்புத் தோன்ற "மான் துஞ்சாக் கரத்தர்" என்ருர். துஞ்சா - துயிலாத; எப்போதும் விழித்திருக்கின்ற எனப் பொருள் கொள்ளினுமாம். பஞ்சம் - ஐந்து. அக்கரம் - எழுத்து. சிவயநம என்பவை அவை. (௩௫)

வாட்டமின்மார்க் கண்டரான் மாயீகன் பன்றியாக்
காட்டிற் றிரியுங் கழுக்குன்றே—நாட்டும்
அராப்பள்ளி யண்ண லறிதுயின்மால் காணுச்
சிராப்பள்ளி யண்ணல் சிலம்பு.

(இ - ள்.) வாட்டம்இல் மார்க்கண்டரால் - ஒரு சிறிதும் கவலையில்லாத மார்க்கண்டமுனிவரிட்ட சாபத்தினுல்; மாயீகன் பன்றியா காட்டில் திரியும் - மாயீகன் என்ற அசுரன் பன்றியுருவமாகவே அம்மலையைச் சார்ந்த கானகத்தில் அலைந்து திரியும் (சிறப்புடைய); கழுக்குன்றே—; நாட்டும் அரா பள்ளி அண் நல் அறி துயில் மால் காணு- அமைந்த பாம்புப் படுக்கையைப் பொருந்தி நல்ல அறி துயில் கொள்ளும் திருமாலாலும் அறியப்படாத; சிராப் பள்ளி அண்ணல் - திருச்சிராப் பள்ளியிற் கோயில் கொண்ட முதல்வர் (ஆகிய சிவபெருமான்); சிலம்பு - மலையாம்.

(வி - ம்.) மாயீகன் என்பவன் ஓர் அசுரன். அவன் தன் வடிவை மறைத்துப் பன்றி வடிவங்கொண்டு அம்மலையடுத்த காட்டில்வந்து பல முனிவர்களையும் பல உயிர்களையும் துன்புறுத்திக் கொன்று தொலைத்துத் திரிந்தான். அச் செயலை ஆங்குத் தவம்புரிந்த மார்க்கண்டர் அறிவுக் கண்ணுற் கண்டார். "நீ கொண்ட பன்றியுருவம் இனியென்றும் நீங்காதிருக்கக் கடவது" என்று சபித்தார். அவன் அவ்வுருவத்தோடு அக்கானகத்தில் நெடுநாள் அலைந்தான் என்பது அத் தலவரலாறு. மாயீகச் சருக்கம் (கழுக்குன்றத்.) காண்க. அரா-பாம்பு, பள்ளி - படுக்கை. "திருமாலும் பன்றியாச் சென்றிடந்தும் காண்பரிய, வுருநாமறிய" என்பது திருவாசகம். (௩௬)

நேருமோரு மாதுபந்து நேடிப் பிழையுற்ற
காரியர்ச் சிக்குங் கழுக்குன்றே—சீரியமண்
பிட்டுக் களித்தான் பெருமுடியில் வைத்தடியும்
பட்டுக் களித்தான் பதி.

(இ - ள்.) நேரும் ஒரு மாது பந்து நேடி - இந்திரன் தன்னோடு உடன்பட்ட ஒரு தெய்வப் பெண்ணின் பந்தைத் தேடிச்சென்று; பிழையுற்ற காரி - அதனாற் பிழைபுரிந்து அப்பிழையால் வந்த குற்றம் நீங்கும்பொருட்டு இந்திரன்; அர்ச்சிக்கும் - வந்து பூசனைபுரியும் பெருமைபெற்ற; கழுக் குன்றே -; பிட்டுக்கு - பிட்டுணவின் பொருட்டு; சீரியமண் அளி தான் பெருமுடியில் வைத்து - சிறந்த வையை யாற்றுக் கரையில் உள்ள மண்ணை அள்ளித் தானே பெருமையமைந்த திருமுடியில் வைத்துச் சுமந்து; அடியும் பட்டு களித்தான் - பிரம்படியும்பட்டு மகிழ்வடைந்தவர் (ஆகிய சிவபெருமான்); பதி - தலமாகும்.

(வி - ம்.) காரி - கரிய நிறமுடையவன். இது குறிப்பால் இந்திரனை யுணர்த்தியது. அரமகள் ஒருத்தி பந்தடித்து அப்பந்து விழுந்த இடம் அறியாமல் அவள் வருந்தியபோது இந்திரன் அதனைத் தேடிச்சென்றான். சிவனும் உமையும் மாறுவேடத்தி லோரிடம் அமர்ந்து சதுரங்கம் ஆடியிருந்தனர்; அப்பந்து அவரருகிற் கிடந்தது. இன்னாரென்றறியாமற் கவர்ந்தனர் போலும் என எண்ணிச் சினந்துரைத்தான். அது பெரும் பிழை யாகப் பின்னர்ப் பல துன்பம் அடைந்தான். அக்குற்றம் நீங்கு வதற்காக இத்தலத்தில் வந்து பூசனை புரிந்தான் என்பது புராண வரலாறு. (இந்திரச் சருக்கம்) காண்க. அள்ளி என்பது அளி எனத் தொகுத்தலாயிற்று. தான் அசையாகவும் கொள்ளலாம்.

(௯௭)

எண்ணும் பிருகு விசைத்தபடி புண்டரிகக்
கண்ணன்பூ சித்த கழுக்குன்றே—நண்ணும்
மருமிக் களித்தார் வயங்களகப் பாடல்
தருமிக் களித்தார் தலம்.

(இ - ள்.) எண்ணும் பிருகு இசைத்தபடி - யாவரா லும் மதிக்கப்பட்ட பிருகு முனிவர் கூறியபடியே; புண்டரிக

**கண்ணன்** பூசித்த - செந்தாமரை மலர்போன்ற **கண்களை யுடையவனுகிய** திருமால் பூசித்துப் பேறுபெற்ற (சிறப்புப் பொருந்திய) கழுக்குன்றே—; நண்ணும் மருமிக்க அளிதார் வயங்கு அளகப்பாடல் - பொருந்திய மணமிகுந்த வண்டும் மலரும் கூடிவிளங்கும் கூந்தற் சிறப்பமைந்த பாடலை ; தரு மிக்கு அளித்தார் - தருமி என்ற மறையோனுக்கு வழங்கி யவர் (ஆயசிவ பெருமான்) தலம் - வாழுந்தலமாம்.

(வி - ம்.) புண்டரிகம் - தாமரை. இஃது ஆகுபெயராய் மலரை யுணர்த்தியது. பிருகு முனிவருடைய மனைவியைக் கொன்ற பாவத்தை அம் முனிவர் கூறியபடியே இத் தலத்துக்கு வந்து சிவபெருமானைப் பூசித்துப் பாவத்தைப் போக்கினர் திருமால். இஃது அப்புராண வரலாறு. அளகம் - கூந்தல். "கொங்குதேர்" என்ற பாடலில். "அரிவை கூந்தலின், நறியவு முளவோ நீயறியும் பூவே" எனக் கூந்தற் சிறப்பு வந்துளது குறித்து "அளகப் பாடல்" என்ருர். இவ்வரலாறு தருமிக்குப் பொற்கிழியளித்த படலத்துட் காண்க. (ருஅ)

விஞ்சியசா வித்திரிசோல் வெஞ்சாப நீங்கமலர்க்<br>
கஞ்சன் பணியுங் கழுக்குன்றே — தஞ்சமேனச்<br>
சுந்தரப்பே ரம்பெய்தார் சூழுஞ்சடை முடிக்கன்<br>
றந்தரப்பே ரம்பெய்தா ரார்வு.

(இ-ள்.) விஞ்சிய சாவித்திரி சொல் வெம் சாபம்நீங்க- நற்பண்பாலுயர்ந்த சாவித்திரி என்பவள் கூறிய கொடிய சாபத்துயர் நீங்கும் பொருட்டு; மலர்க்கஞ்சன் **பணியும்** - தாமரை மலரில் உறையும் பிரமன்வந்து பணியும் (புகழ் பெற்ற) கழுக்குன்றே—; தஞ்சம்என - பாண்டிய மன்னன் "நீயே எனக்குத் தஞ்சம்" என்று வேண்டியது குறித்து; சுந்தரம் பேர் அம்பு எய்தார் - (பாண்டியனுக்குப் பகை வனுக வந்து எதிர்த்த சோழன் படைமேல்) சுந்தரம் என்ற தன் பெயர் வரைந்த கணையைச் செலுத்தியவரும்; சூழும் சடைமுடிக்கு அன்று அந்தரம் பேர் அம்பெய்தார் - சுற்றிய சடைமுடியின்மேல் அக்காலத்தில் வானின்றிறங்கிய பெருங் கங்கைநீரினை நிறையப் பெருக்கினவரும்; (ஆகிய பரமர்) ஆர்வு - பொருந்தி வாழும் இடமாம்.

(வி - ம்,) சாவித்திரி-பிரமன் மனைவியரில் ஒருத்தி; பிரமன் கலைமகளையே விரும்பித் தன்னை விரும்பாததை கருதி வெறுத்துப் பிரமனைச் சபித்தாள் என்பதும், அச்சாபத்தால் வந்த துயரம் நீங்கும்பொருட்டு அவன் இத்தலத்துவந்து பூசித்தான் என்பதும் அத்தலபுராண வரலாறு. தஞ்சம், என-என்று சொல்ல. சோழன் படை யெடுத்துவரக்கண்டு பாண்டியன் அஞ்சி இறைவனை வேண்ட அவ்வேண்டுகோட்கிரங்கிப் படைவீரராக வந்து நின்று தன் பெயர் (சுந்தரம்) பொறித்தவம்பேவச் சோழமன்னன் அவ்வம்பினைக்கண்டு சிவபெருமானென்று தெரிந்து இனி வெற்றி பெறமுடியாது என்று தன்னூர் மீண்டான் என்பது திருவிளையாடல் சுந்தரப்பேரம் பெய்த படலத்தில் உளது, அந்தரம் - விண். அம் - நீர், பேர்அம் - பெருநீர். இது கங்கை நீரையுணர்த்தியது. பகீரதனுக்காக வானிழிந்த கங்கைநீரைச் சடைமுடியினிறுத்தி விரைவைத் தணித்து விடுத்தமை குறித்தது. (நுக)

எண்மா வசுக்க ளியல்பொடுவெண் ணீறணிந்து
கண்மணிபூண் டேத்துங் கழுக்குன்றே-திண்மைமிகும்
கோளர வத்தினுன் கூடா வகையருள்பூண்
வாளர வத்தினுன் வாழ்வு.

(இ - ள்.) எண்மா வசுக்கள் இயல்பொடு - பெருமை பொருந்திய வசுக்கள் என்ற தேவர் எண்மரும் அடிமைத் தன்மையுடன் வந்து; வெண்ணீறு அணிந்து கண் மணிபூண்டு ஏத்தும் - திருநீறு பூசி அக்குமாலை புனைந்து சிவனடியார் போல வணங்கிப் பேறுபெற்ற பெருமை வாய்ந்த; கழுக்குன்றே-; திண்மை மிகும் கோளர் அவத்தில் நான் கூடாவகை அருள் - வலிமை மிகுந்த தீயோர் செய்யும் வீண் செயலில் நான் கூடாதவகையில் எனக்குத் திருவருள் புரிந்த; பூண்வாள் அரவத்தினுன் - ஒளி பொருந்திய பாம்புப் பூண் புனைந்தவர் ஆகிய மாதேவர்; வாழ்வு - வாழும் இடமாம்.

(வி - ம்.) மா - பெருமை. மா எண்வசுக்கள் என மாற்றுக. வசுக்கள் எண்மரிலொருவன் காமதேனுவின் பாலைக் கறக்க முயன்றான் என்பதும், ஏனை வசுக்களும் உடன்பட்டுடனிருந்தனர் என்பதும், அதனால் அப்பசு சினந்து சபிக்கப் புலையராய்க் காசியிற் சுடலை காத்து நூறாண்டிருந்தும் நீங்காது இத்தலத்தில் வந்து பூசித்துச் சாபம் நீங்கப் பெற்றனர் என்பதும் அத்தல

புராணக்கதை. கோளர் - கொடியவர்; கோள் கூறுவோர்; கோள் செய்வோர் எனப் பொருள்படும். கோள்-தீமை. அயலார் தீமையை எடுத்துக் கூறுவோர், தீமையைச் செய்வோர் என்று பொருள் காண்க. அவம் - வீண் செயல். பயனில்லாச் செயல். செய்து அவருடன் கூடாமல் என்னை யாட்கொண்டவன் என்க. வாள் அரவப் பூணினன் என மாற்றுக. (சo)

விதிசொற் படியரக்கர் வெம்மை தவிர்ப்பான்
கதிரவர் போற்றுகழுக் குன்றே—எதிருஞ்
செருவிற்கோ லத்தத் திகிரிய னாக் கொண்ட
திருவிற்கோ லத்தர் சிலம்பு.

(இ - ள்.) அரக்கர் வெம்மை தவிர்ப்பான் - தமக்கு அரக்கர் ஒவ்வொரு நாளும் செய்யும் கொடுமையை நீக்கும் பொருட்டு; கதிரவர் விதி சொற்படி போற்றும் - சூரியர் பன்னிருவரும் பிரமன் உரைத்தவாறே வந்து வழிபட்டுத் தீமை நீங்கிப் பெருமை பெற்ற; கழுக்குன்றே-; எதிரும் செருவில் அத்தத் திகிரியன் கோல் ஆக் கொண்ட - எதிர்த்த போரில் கையிற் சக்கரமுடைய திருமாலை அம் பாகக் கொண்ட; திருவில் கோலத்தர் - சிறந்த வில்லைப் பற்றிய போர்க்கோல முடையவர் ஆகிய சிவபெருமான்; சிலம்பு - வாழ்மலையாம்.

(வி - ம்.) அரக்கர் - சூரியருக்குப் பகைவர் ஆகிய மந்தேகர் எனக் கொள்க. மந்தேகர் சூரியரை வழிமறித்துத் தடுப்பர் என்பதும், அவ்விடையூற்றை நீக்குதற்கே முனிவர் காலை மாலை மந்திரங்கூறி நீரிறைத்துக் கடவுளை வழிபடுவர் என்பதும் மறை நூல் வழக்கு. கழுக்குன்றஞ் சென்று கண்ணுதலை வழிபட்டால் நுமக்கு மந்தேகர் செய்யும் இடையூறு நீங்கும் எனப் பிரமன் கூற அது கேட்டுப் பன்னிருவர் கதிரவரும் வந்து வழிபட்டு இடையூறு நீங்கி இன்பம் எய்தினர் என்பது வரலாறு. அத்தம் - கை; திகிரி - சக்கரம். அத்தத்திகிரியான் - கையிற் சக்கர முடையவன் எனத் திருமாலை யுணர்த்தியது. திகிரியன் கோல் ஆக் கொண்ட எனமாற்றி ஐயுருபு விரித்துப் பொருள் கொள்க. திருவிற் கோலம் என்பது ஓரூர் எனவும், அது இப்பொழுது திருக்கூவம் என வழங்குகிறது எனவும், அத்தலத்துறைவோர் எனவும் குறிப்புரையிற் காணப்படுகிறது. பொருந்து மேற் கொள்க. (சக)

முனிவர்கணம் பாணினிய முன்னவனே வேண்டிக்
கனிவோடு வாழ்த்துகழுக் குன்றே—இனிதின்
இருக்கேத் திரத்த வெழில்கோள்சூ லத்தர்
குருக்கேத் திரத்தர் குடி.

(இ - ள்.) முனிவர் கணம் - தவமுனிவர் கூட்டங்கள்; பாணினியம் முன்னவனை வேண்டி - பாணினிய வியாகரணம் இயற்றிய ஆசிரியனை விரும்பி; கனிவொடு வாழ்த்து - மனக்கனிவுடன் எப்போதும் துதிக்கின்ற (மாண்பு மிக்க) கழுக்குன்றே-; இனிதின் இருக்கு ஏத்து இரத்தம் எழில் கொள் சூலத்தர் - இனிமையாக வேதங்கள் துதிக்கின்ற செந்நிறம் வாய்ந்த அழகிய சூலப் படையுடையவரும்; குருக்கேத்திரத்தர் - குருக்கேத்திரம் என்ற தலத்திலிருப்பவரும் (ஆகிய ஈசர்) குடி - குடியிருக்கும் தலமாம்.

(வி - ம்.) பாணினியம் - வடமொழியிலக்கணங்களில் ஒன்று. அஃது பாணினியென்பவராற் பாடப்பட்டது. கழுக்குன்றத்தில் தவம் புரியும் முனிவர் பலர் பாணினியவியாகரணத்தைக் கற்று வடமொழியிற் சிறந்தார்கள் எனவும், அவர்கள் அந்நூலைப்போல் ஆசிரியனையும் வாழ்த்தித் துதித்தார்கள் என்பதும் ஒரு வரலாறு. முனிகணச் சருக்கம் காண்க. இருக்கு - வேதம். இரத்தம் - சிவப்பு; குருதி. ஏத்து சூலத்தர் எழில் கொள் சூலத்தர் என வியைக்க. குருதி யெனிற் குருதி தோய்ந்த எழில் என்க. குருக்ஷேத்திரம் என்பது வைப்புத் தலங்களுள் ஒன்று. (௬௨)

சங்கரனுர் சோன்மறுத்த தன்மையாற் சம்பாதி
கங்கெனவந் தேத்துங் கழுக்குன்றே—தங்கியவேங்
காமவே தத்திறன் கன்ரு தளித்தாளுஞ்
சாமவே தத்திறன் சார்வு.

(இ - ள்.) சம்பு ஆதி - சம்புவும் ஆதியும் ஆகிய இரு முனிவர்களும்; சங்கரன் சொல் மறுத்த தன்மையால் - சிவபெருமான் மொழிந்த நன்மொழியை மறுத்துரைத்த காரணத்தால்; கங்கு என வந்து ஏத்தும - கழுகுக

ளாக அவ்விருவரும் வந்து துதித்து வழிபடும் மாண்பு மிக்க; கழுக்குன்றே-; தங்கிய வெம் காமம் ஏதத்தில்நான் கன்றுது அளித்து ஆளும் - என்னுள்ளத்துத் தங்கிய காமம் ஆகிய கொடிய துன்பத்தால் நான் வருந்தாமல் காத்து என்னை அடிமை கொண்ட; சாமவேதத்தினன்- சாமவேதத்தின் முடிவாகியவர் (ஆகிய ஈசர்) சார்வு - சார்ந்துறையும் தலமாம்.

(வி - ம்.) சம்பு ஆதி என்ற இரு முனிவரும் முத்தியை வேண்டி முதலில் தவம் புரியச் சிவபெருமான் வந்து "நீவிர் கலி யுகத்தில் முத்தி பெறுவீர்" என்று வரமளிக்க அவர்கள் அவ் வுரையை மறுத்து "இப்பொழுதே முத்தியெமக் களிக்க"வென வேண்ட இறைவன் "கழுகுகளாகக் கடவீர்" எனச் சபிக்க அச் சாபத்தாற் கழுகுகளாய்ப் பூசிக்கின்றனர் என்பது அத்தல வர லாறு. காமம்+ஏதம் காமவேதம் எனப் புணர்ந்தது. மகர மெய்கெட்டு வகரவுடம்படுமெய் பெற்றது. காமமாகிய துன்பம் இருபெயரொட்டுப் பண்பு. சாமம் வேதம் - சாமவேதம் சாம மாகிய வேதம். சாமம் மூன்றும் வேதம். வேத முடிமேல் நிற்ப வன்; உறைபவன் எனக் கொள்க. (௩௩)

துன்னுபன்றி மாயீகன் தொல்லுருவா வோர்பசுத்தான்
கன்னியுரு வான கழுக்குன்றே—என்னுள்
வதிய மலையார் மகிழுமிடப் பாலார்
பொதிய மலையார் பொருப்பு.

(இ - ள்.) மாயீகன் துன்னு பன்றி தொல்லுருஆ - மாயீகன் கொண்ட பன்றி வடிவம் நீங்கிப் பழைய அசுர வடிவமாகவும்; ஓர் பசுதான் கன்னிஉரு ஆன - ஒரு பசு வுருவத்தைப் பழைய கன்னி வடிவமாகவும் செய்த; கழுக் குன்றே-; என்னுள் வதி அமலையார் மகிழும் இடம் பாலார்- என்னுள்ளத்துறையும் உமையம்மையார் மகிழ்ந்தமரும் இடப்பாக முடையவரும்; பொதியம் மலையார் - பொதிய மலையில் உறைபவரும் (ஆகிய ஈசர்) பொருப்பு - தங்கும் மலையாம்.

(வி - ம்.) மாயீகன் மார்க்கண்ட முனிவராற் சபிக்கப் பட்டுப் பன்றிவடிவா யலைந்தான் என்பதும், திருநந்தி தேவர்

தவம் புரியும்போது அவர் தவத்தைக் குலைக்கத் திலோத்தமை வந்துஅந்நந்தி தேவராற் சபிக்கப்பட்டுப்பசு வுருவாய் யலைந்தாள் என்பதும், பின்னர்ச் சுரகுரு என்னும் சோழ மன்னன் அங்கு வந்து அப்பன்றியையும் பசுவையும் கொல்ல அம்பேவிய போது பழைய வுருவம் பெற்றனர் என்பதும் வரலாறு. என்னுள் வதி அமலையார் என்றதால் ஆசிரியர் உமையம்மை வழிபாடுடையவர் என்பது விளங்கும். (௪௪)

கட்டங்கள் பாற்றுன்னக் காட்டுமலர் வாவிபோலாக்
கட்டங்கள் பாற்றுங் கழுக்குன்றே—கோட்டுந்
தமருகக் கையான் றகுபிழைசெய் தாலுந்
தமருகக் கையான் றலம்.

(இ - ள்.) கட்டங்கள் பால் துன்ன காட்டு மலர் வாவி - தன்னிடத்துப் பல துறைகள் நெருங்கத் தாமரை அல்லி முதலிய மலர்களைக் காட்டும் பொய்கையானது; பொலா கட்டங்கள் பாற்றும் - நீராடியவரது பொல்லாத துயரங்களை நீக்குகின்ற (மேன்மை வாய்ந்த); கழுக் குன்றே-; கொட்டும் தமருகம் கையான் - முழக்கும் உடுக் கைப் பறையுடையவரும்; தகுபிழை செய்தாலும் - ஒறுத் தற்குத் தக்க பெரும் பிழையைச் செய்யினும்; தமர் உக கையான் - தம்மை வணங்கும் அடியார் கெடும்படி வெறுக் காதவரும் (ஆகிய ஈசர்) தலம் - திருத்தலமாம்.

(வி - ம்.) கட்டங்கள்-பல பிரிவுகள், பல துறைகள். தன் பால் கட்டங்கள் துன்ன மலர் காட்டும் வாவி என வாவியைச் சிறப்பித்தார். பல துறைகளையுடைய வாவி மலர் காட்டுகின்ற வாவி எனக் கொள்க. பொல்லா என்பது பொலா எனத் தொகுத்தலாயிற்று. கஷ்டங்கள் என்ற வடமொழி கட்டங்கள் எனத் திரிந்தது. பாற்றும் - நீக்கும். தமருகம் - துடி; உடுக்கை. இறைவர் கையிலுள்ளது. துடியொலியால் உலகத்தைத் தோற்று விப்பர் என்று கூறும் நூல். "தோற்றந் துடியதனில்" என்பதும் காண்க. தமர் - தம்மவர்; தம்மைச் சார்ந்த அடியார் என்க. உக - கெட; அழிய. கையான் - வெறுக்காதவன்; ஆட்கொள்ப வன் என்பது பொருள். கட்டங்கள் பாற்று, கட்டங்கள் பாற்று எனவும் தமருகக் கையான், தமருகக் கையான் எனவும் முன் இரண்டடியும் பின் இரண்டடியும் மடக்கு வந்தன. யமகம் என்பது இது. (௪௫)

கைப்புக நல்கால் கடுஞ்சினம்விட் டோரைநமன்
கைப்புக நல்காக் கழுக்குன்றே—செப்பும்வரை
மத்தகநாட் டத்தான் வளைபாற் கடனிறத்தான்
மத்தகநாட் டத்தான் வரை.

(இ - ள்.) கைப்பு உகு அநல் கால் கடுஞ்சினம் விட்டோரை - வெறுப்புத் தோன்றும் தீயைக் கக்கும் கொடிய சினத்தை விட்டொழித்த நல்லோரை; நமன் கை புக நல்கா - இயமன் கையில் புகும்படி கொடாமல் சிவபதம் சேர்ப்பிக்கும் கழுக்குன்றே; செப்பும் வரை மத்து அகம் நாட்டதான் வளை பாற்கடல் நிறத்தான் - சொல்கின்ற மந்தர மலையை மத்தாகத் தன்னுள் நிறுத்த வளைந்திருந்த பாற்கடல் போலும் நிறமுடையவரும்; மத்தகம் நாட்டத்தான்-நெற்றிக் கண்ணுடையவரும் (ஆகிய சிவபெருமான்) வரை - உறையு மலையாம்.

(வி - ம்.) கைப்பு - வெறுப்பு உகு+அநல் எனப் புணர வேண்டியது உகநல் எனச் செய்யுள் விகாரமாயிற்று. அநல் - வடமொழி, மாருது நின்றதாகக் கொள்க, மடக்கு நோக்கி. சினத்தை விட்டவரே நற்பண்புடையோர்; சிவனடியார்; தவ முனிவரெனப் படுவோர். அன்னவரையே சிவபெருமான் சிவலோகத்திற் சேர்ப்பர் என்க. பாற்கடல் போன்ற வெண்ணிற முடையார் என்றது திருநீற்றுக் கோலம் போலும். மத்தகம் - நெற்றி. நாட்டம் - கண். இதுவும் யமகம். (சகூ)

காமிக வாக்குக் கருதியர்ச்சிப் போர்க்குமலர்
காமிக வாக்குங் கழுக்குன்றே—தோமறுகல்
வல்லிபங் கானூர் வளர்கரும்புண் ணச்சேய்தார்
வல்லிபங் கானூர் வரை.

(இ - ள்.) காமிகம் வாக்கு கருதி அர்ச்சிப் போர்க்கு- சிவாகமங்களில ஒன்ருகிய காமிகத்திற் கூறிய முறையின் படி மனத்துள் நினைத்துப் பூசனை புரியும் அடியார்கட்கு; காமலர் மிக ஆக்கும் - நந்தவனம் மலர்களை மிகுதியாகப் பூத்துத் தரும் (பெருமையமைந்த) கழுக்குன்றே-; தோம் அறு கல் வல் இபம் - குற்றமற்ற கல்லாற் செய்யப்பட்ட

வலிய யானையை; கான் ஆர் வளர் கரும்பு உண்ணச் செய் தார்-வயலிற் பொருந்தி வளர்ந்த கரும்பைக் கடித்துண்ணு மாறு செய்தவரும்; வல்லி பங்கு ஆனார் - கொடி போன்ற உமையின் ஒரு பங்காக அமைந்தவரும் (ஆகிய சிவபெரு மான்) வரை - மலையாம்.

(வி - ம்.) கழுக்குன்றத்திலுள்ள பூஞ்சோலைகள் அடியார் பூசைக்கு வேண்டும் மலர்களைக் கொடுக்கும் எனப் பொழில் வளம் கூறினர். காமிகம் முதலாக இருபத் தெட்டாகமங்கள் உள்ளன. பூசை புரியும் முறை ஆகமங்களில் அமைந்திருக்கும். அதன்படி யர்ச்சிப்போர் எனக் கொள்க. எல்லாம் வல்ல சித்த ராகச் சொக்கநாதர் வந்து கல்லானையைக் கரும்பு தின்னச் செய்தார் என்பது திருவிளையாடலில் ஒரு விளையாடல். கல்லா னைக்குக் கரும்பருத்திய படலம் காண்க. இதுவும் யமகம். (௪௭)

காட்டத் தெரியுங் கனல்வேள்வி வானுலகங்
காட்டத் தெரியும் கழுக்குன்றே—நீட்டும்
விடமருந் தானார் விறலப்பர் தங்நோய்
விடமருந் தானார் விருப்பு.

(இ - ள்.) காட்டத்து எரியும் கனல் வேள்வி - ஓம விறகிற் பற்றி யெரியும் வேள்வித் தீயானது; வான் உலகம் காட்ட தெரியும் - பொன்னுலகத்தைப் பலர்க்குங் காட்டுத லால் அவ்வுலகம் காணப்படுகின்ற; கழுக்குன்றே-; நீட்டும் விடம் அருந்து ஆனார்-கடலிற்றலை நீட்டியெழுந்த நஞ்சினை யுண்டவரும் ஆனேறுடையவரும்; விறல் அப்பர் தம் நோய்விட மருந்து ஆனார் - (சமணர்களிடத்து) வெற்றி பெற்ற நாவுக்கரசரது சூலைநோய் விட்டொழியத் தான் ஒரு மருந்தாகியவரும் (ஆய சிவபெருமான்) விருப்பு - விரும்பி வாழும் இடமாம்.

(வி - ம்.) கழுக்குன்றில் மறையவர் வளர்க்கும் வேள்வித்தீ வானுலகத்தைப் பலர்க்கும் காட்டும் எனவே அக் குன்றம் வானுலகத்தை அடுத்தது என உயர்வு தோன்றியது. ஆனார் - விடையுடையார். இஃது இடுகுறியாய் ஆங்குச் சிவனை யுணர்த் திற்று. அப்பர்...மருந்தானார் என்றது "கூற்றாயின" என்ற பதிகம் பாடியவுடன் சூலை நோய் தீர்ந்ததைக் குறித்துக் காட்டிய தாம். (௪௮)

கழுகுநடு வாரமிதை காணும்வெளி யில்லாக்
கழுகு தொழுகழுக் குன்றே—கழுவிற்
சமணரை யேற்றினர் தானவர்கள் பால்வஞ்
சமணரை யேற்றினர் சார்வு.

(இ - ள்.) கழுகு என்ற மூன்றெழுத்தும்; நடு ஆர் அம், இதை காணும் வெளி நடுவிற் சேர்ந்த சொற்களாகிய அகம் இழுதை, வெகுளி ஆகிய மூன்று தீய பண்புகளும் இல்லா; கழுகு தொழு - முனிவர்களாகிய கழுகுகள் வந்து வழிபடுகின்ற (பெருமையமைந்த) கழுக்குன்றே-; கழுவில் சமணரை யேற்றினர் - சமணரைக் கழுவில் ஏற்றியவரும்; தானவர்பால் வஞ்சம் அண் நரை ஏற்றினர்- அசுரர் களுக்கு வஞ்சகஞ் செய்த வெள்ளை விடையுடைய வரும் ஆகிய சிவபெருமான்; சார்வு - சார்ந்து வாழ் தலமாம்.

(வி - ம்.) இஃது ஒரு நடுவெழுத்தலங்காரம் அமைந்தது. அம், இதை வெளி என்ற சொற்களுக்கு நடுவில் முறையே கழுகு என்ற மூன்றையும் புகுத்திய சொல் அகம், இழுதை, வெகுளி என்றுயது இதன் பொருள். அகம் - பாவம்; இழுதை - பொய்; வெகுளி - கோபம். ஆங்கு வந்து தொழுங் கழுகு பறவையன்று முனிவர் என்பது விளங்கிற்று. கழுகுக் குன்றம் என்பதுதான் மருவி கழுக்குன்றம் என வழங்கியது எனக் காண்க. தானவர் பால் வஞ்சமண் என்ற குறிப்பால் திருமால் என்பதும், திருமாலை விடையாகக் கொண்டவர் என்பது தோன்றிற்று. நரை - வெண்மை. (சக)

ஆதியந்த மாகவிதி யார்பூ வணிவோர்கள்
காதலுட னேத்துங் கழுக்குன்றே—ஓதும்
இருக்கு மறியானிடக்கரத்தேப் போழ்தும்
இருக்கு மறியா னிடம்.

(இ - ள்.) ஆதி அந்தம் ஆக விதி ஆர் பூ அணி வோர்கள் - முதலினும் கடையினும் விதி என்ற எழுத்துக் கள் புணர்ந்த பூ (விபூதி) அணிபவர்கள் (ஆகிய அடியார் கள்) காதல் உடன் ஏத்தும் - அன்புடன் வந்து பணியும்

(சிறப்பமைந்த) கழுக்குன்றே-; ஓதும் இருக்கும் அறியான்-சான்றோர் ஓதும் வேதங்களாலும் அறியப்படாதவரும்; இடம் கரத்து எப்போழ்தும் இருக்கும் மறியான்-எஞ்ஞான்றும் நீங்காமல் இடக்கையில் மான்கன்றினை யிருத்திய வரும் (ஆகிய கடவுளர்) இடம் - வாழும் இடமாம்.

(வி - ம்.) இதுவும் ஓர் எழுத்தலங்காரம் அமைந்தது. பூ பூ என்ற எழுத்தின் முன்னும் பின்னும் முறையே'வி' என்பதும் 'தி' என்பதும் சேர்ந்தால் விபூதி என்றாவது காண்க. மறி - மான். கன்று மறிஇருக்கும் இடக்கரத்தான் என மாற்றுக. (௫0)

உள்ளும் பரத்தையர்க ணுட்டுறவோர் மாரன்மலர்க்
கள்ளம் பொழியும் கழுக்குன்றே—கொள்ளுமன்பின்
வாயிலா ருள்ள மணிக்கோவி லாக்கொண்ட
தாயிலா ருள்ள தலம்.

(இ - ள்.) உள்ளும் பரத்தையர் கண் - யாவரும் விரும்பி நினைக்கத்தக்க வேசையர் விழிகளும்; உள் துறவோர் - மனத்துறவு பூண்ட முனிவோர்களும்; மாரன் மலர்க்கள்ளம் பொழியும் கழுக்குன்றே-; கொள்ளும் அன்பின் வாயிலார் உள்ளம் மணிகோவிலாக் கொண்ட தாய் இலார் - உள்ளத்தில் அன்பு கொண்ட வாயிலார் என்ற நாயனார் மனத்தைக் கோயிலாகக்கொண்டுறைப வரும் பிறப்பில்லாதவரும் (ஆகிய சிவபெருமான்) உள்ள தலம் - வீற்றிருக்கும் தலமாம்.

(வி - ம்.) பரத்தையர் கண்ணுக்கும் துறவோர்க்கும் சிலேடை; பரத்தையர் கண்; மாரன் மலர் கள்ளம் பொழியும் - மன்மதன் மலர்ப் பாணத்தால் உண்டாம் காம வஞ்சகத்தை வெளியிற் காட்டும் எனவும், துறவோர்: மாரன்கள் மலர் அம்பு ஒழியும் - காமன் விடும் கள்ளொழுகும் பூவம்பினால் வரும் காமத் தீமையை நீங்கும் எனவும் இருபொருள் கொள்க. தாய் - இலார் எனவே பிறப்பில்லாதவர், ஆதியந்தம் இல்லாதவர் என்ற சிறப்புத் தோன்றுவது காண்க. இது முதல் முறையே யிடை விடாது இறுதிவரை சிலேடையமைந்த செய்யுட்களே யுள்ளன. (௫க)

பூமருவு வண்டினங்கள் பூவையர்கண் கற்பகம்போற்
காமரம்பா டுற்ற கழுக்குன்றே—சேமமறி
யாடுங்கா லத்தன் பணவியிடங் கொண்டவன்மால்
தேடுங்கா லத்தன் சிலம்பு.

(இ - ள்.) பூ மருவு வண்டு இனங்கள் - மலர்களிற் சேர்ந்து மதுவுண்ணும் வண்டுக் கூட்டங்கள்; காமரம் பாடுற்ற - இசைபாடுகின்ற; பூவையர் கண் - மகளிர் விழிகள்; காமர் அம்பு ஆடுற்ற - காமன் அம்பின் வெற்றியைக் கொண்ட; கற்பகம்போல் - கற்பகதருவைப்போல; காமரம் பாடுஉற்ற - சோலையில் உள்ள மரங்கள் பெருமை பெற்ற; கழுக்குன்றே-; ஆடும் காலத்து அன்பு அணவி சேமம்மறி இடம் கொண்டவன் - நடம் புரியும்போது அன்பு பொருந்தக் காவலாக மான் கன்றினை இடக்கரத் தமைத்தவரும்; மால் தேடும் கால் அத்தன் - திருமாலும் தேடியறியப்படாத திருவடியுடைய பெருமானும் (ஆகிய கடவுளர்) சிலம்பு - மலையாம்.

(வி - ம்.) இது மூன்று சிலேடையமைந்த கவி. காமரம் - இசை. பாடுற்ற - பாடுகின்ற. காமர் - மன்மதனார். ஆடு உற்ற - வெற்றியை யடைந்த. வெற்றி என்பது காமத்தான் மயக்குவது. காமரங்களெல்லாம் கற்பகம் போலப் பெருமையமைந்து நிற்கும் என்பது. இம் மூன்றும் கழுக்குன்றத்தின் சிறப்புக் காட்டின. சேமம்-காவல். ஆடுங் காலத்தும் கீழ்விழாமல் மறியைக் கரத்தமைத்தான் எனக் கடவுட்டன்மை விளக்கியது இது. (கூஉ)

செவ்விமயில் கோபஞ் சிவார்ச்சனைசெய் யில்லிலைந்து
கவ்வியங்கு லாவுங் கழுக்குன்றே—எவ்வ
மலவிடக்கை யானகல வந்தாள்வோ னோர்மான்
நிலவிடக்கை யான்வாழ் நிலை.

(இ - ள்.) செவ்விமயில் கோபம் கவ்வி அங்கு உலாவும் - அழகிய மயில்கள் இந்திர கோபப் பூச்சியை வாயிற் கவ்விக்கொண்டு ஆங்கு உலவுகின்ற; சிவ அர்ச்சனை செய் இல்லில் ஐந்து கவ்வியம் குலாவும் - சிவ பூசை செய்யும் மனைகளிற் பஞ்ச கௌவியம் நிறைந்திருக்கின்ற; கழுக்

குன்றே; எவ்வம் மலம் விடக்கை யான் அகல வந்து ஆள்வோன் - துன்பந்தரும் மலங்களோடு பொருந்திய உடம்பை நான் நீங்குமாறு வந்து என்னை யாண்டவரும்; ஓர் மான் நிலவு இடக்கையான் - ஒரு மான்கன்று நிலை பெற்ற இடக்கர முடையவரும் (ஆகிய சிவபெருமான்) நிலை - நிலைமையாக வாழிடமாம்.

(வி - ம்.) மயில் கோபம் கவ்வியங்கு உலவும் எனவும், ஐந்து கவ்வியம் குலாவும் எனவும் மயிலும் மனையும் ஒப்புரைக்கப்பட்டன சொற்றொடர்களால். விடக்கு-தசை: இஃது உடலைக் குறித்தது. விடக்கை யானகல என்பது என் பிறப்பு, இனி நீங்கும்படி என்ற குறிப்புக் காட்டியது. (௩௩)

தாவி லிளைஞர்மணஞ் சாருமிடந் தண்முகில்கள்
காவணமே லோங்குங் கழுக்குன்றே—பாவுரைத்து
நேசித்து வந்தார் நிறைபசிக்காக் கச்சூரில்
யாசித்துவந்தார் ரிடம்.

(இ - ள்.) தாஇல் இளைஞர் மணம் சாரும் இடம் காவணம் மேல் ஓங்கும்-கவலையில்லாத இளமைப் பருவமுடையவர்க்குத் திருமணம் நிகழும் இடம் பந்தர் மேலே உயர்ந்திருக்கின்ற; தண்முகில்கள் அணகா மேல் ஓங்கும் - குளிர்ந்த மேகங்கள் வந்து படியுமாறு பூம்பொழில்கள்; மேலுயர்ந்து நிற்கின்ற; (சிறப்பமைந்த) கழுக்குன்றே-பா உரைத்து நேசித்து உவந்தார் நிறை பசிக்கு ஆ - பாக்கள் பல பாடி அன்புற்றுத் தம்மை விரும்பினவர் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனார் பசி தீர்க்கும் பொருட்டு; கச்சூரில் யாசித்து வந்தார் - திருக்கச்சூர் என்ற தலத்தில் மனைகடோறும் சென்று இரந்து பிச்சை வாங்கிக்கொண்டு வந்தவர் (ஆகிய சிவபெருமான்) இடம் - வாழும் இடமாம்.

(வி - ம்.) காவணமே லோங்கும் என்ற சொற்றொடர் இரு பொருள் தந்தது. மணஞ்சாருமிடத்திற்கும் தண் முகில்களுக்கும் சிலேடை. பாவுரைத்து என்பது தேவாரப் பாக்களைக் குறித்தது. கச்சூரிற் சுந்தரர் பசி நீக்க இரந்த வரலாறு திருத்தொண்டர் புராணத்துட் காண்க. (௩௪)

சேங்கை மழுவோன் சிரமுங் குருகினமுங்
கங்கை யகலாக் கழுக்குன்றே—இங்கினிமேல்
எம்மைப் படையா னிணையில்பூ தங்களேனும்
சேம்மைப் படையான் சிலம்பு.

(இ - ள்.) செங்கை மழுவோன் சிரமும் - சிவந்த கரத்தில் மழுவுடையோன் திரு முடியும்; கங்கை அகலா - கங்கை நீர் நீங்காத (கழுக்குன்றே); குருகு இனமும் கங்கை அகலா - புள்ளினங்களும் வயலின் வரம்பை விட்டு நீங்காத; கழுக்குன்றே-: இங்கு இனிமேல் எம்மை படையான் - இவ் வுலகில் இனிமேல் எம்மைப் பிறப்பிக்காதவரும்; இணை இல் பூதங்கள் எனும் செம்மை படையான் - ஒப்பற்ற பூதங் கள் என்று சொல்லப்படும் செம்மையான படையுடைய வரும் (ஆகிய சிவபெருமான்) சிலம்பு-வாழும் மலையாம்.

(வி - ம்.) புள்ளினங்கள் மீன் தவளை முதலிய நீர்வாழ் உயிர் களைக் கொத்தித் தின்பதற்கு வயலின் வரம்பில் அமர்ந்திருக்கும் என நீர்வளம் தோன்றிற்று. கங்கு + ஐ = கங்கை. கங்கு - வரம்பு. இது குறிப்பால் வயலின் வரம்பினைக் காட்டிற்று. எம்மை - எம்போன்ற அடியார்களை என்று பொருள் கொள்க. (ருரு)

விஞ்சு கயலினங்கண் மேன்மை பெறுகுளத்துக்
கஞ்சங் குதிக்குங் கழுக்குன்றே—தஞ்சமென
மாவி னடிப்பான் மருவினு னன்பருளப்
பூவி னடிப்பான் புரம்.

(இ - ள்.) விஞ்சு கயல் இனங்கள் கஞ்சம் குதிக்கும் - அளவுக்கு மிஞ்சிய கெண்டைமீன்கள் தாமரைப் பூவிற் குதிக்கின்ற (கழுக்குன்றே); மேன்மைபெறுகுளத்துகம்சங்கு உதிக்கும் - உயர்வு பெற்ற பொய்கைகளின் வெள்ளைச் சங்குகள் தோன்றுகின்ற; கழுக்குன்றே-; தஞ்சம் என மாவின் அடி பால் மருவினுன் - அடியார்கட்குப் பற்றுக் கோடென்று சொல்லுமாறு மாமரத்தின் அடிப்பக்கத்திற் பொருந்தி வீற்றிருந்தவரும்; அன்பர் உளம் பூவில் நடிப்பான் - அடியார்களது உள்ளத் தாமரையில் நடனம் புரிப வரும் ஆகிய சிவபெருமான்; புரம் - வாழும் பதியாம்

(வி - ம்.) இத்தலத்திலுள்ள தீர்த்தங்களிற் சங்க தீர்த்தம் என ஒன்று உளது எனவும் அத்தீர்த்தத்திற் பன்னிரண்டாண்டுக் கொருமுறை சங்கு தோன்றும் என்பதும் அத்தலபுராண வரலாறு. சங்கு உதிக்கும் என்றது அதனைக் குறித்தது எனவும் கொள்ள லாம். இயற்கையாகச் சங்குகள் நீரிற் பிறப்பனவேயாம். கம் - வெண்மை. கம்; நீர்எனக் கொள்ளினும் அமையும். (ருசு)

சேரும் பிதிர்கருமஞ் செய்பவருங் கான்மயிலுங்
காரை விழையுங் கழுக்குன்றே—நேரெதிர்ந்து
வீரிடத்தா னத்தந்தி மெய்யுரித்தோன் சூழவரும்
பாரிடத்தா னத்தன் பதி.

(இ - ள்.) சேரும் பிதிர் கருமம் செய்பவரும் காரை விழையும் - மேலுலகஞ் சேர்ந்த பிதிர்கட்குக் கருமஞ் செய்யும் மைந்தர்களும் காரை என்ற செடியை விரும்புகின்ற (கழுக்குன்றே); கான் மயிலும் காரை விழையும் - கானமயிலும் மேகத்தைக் காணவிரும்புகின்ற; கழுக்குன்றே-; நேர் எதிர்ந்து வீரிட தானம் தந்தி மெய் உரித்தோன் - நேரில் எதிர்த்து நின்று வீர் என்று பிளிறும்படி மத யானையின் உடற்றோலை யுரித்தவரும்; சூழவரும் பாரிடத்தான் அத்தன் - தம்மைச் சூழ்ந்து வரும் பூதகணங்களை யுடையவரும் அவற்றிற்குத் தலைவரும் ஆகியசிவபெருமான்; பதி - வாழுந் தலமாம்.

(வி - ம்.) காரைச் செடி பிதிர்கருமஞ் செய்வதற்குரிய செடி போலும். கார்+ஐ=காரை - மேகத்தை. தானத்தந்தி நேரெதிர்ந்து வீரிட மெய்யுரித்தோன் என மாற்றிப் பொருள் கொள்வது பொருத்தம். மதயானையின் நேரே எதிர்த்து நின்று அஃது வீரிட்டலறும்படி உடலினின்று தோலையுரித் தெடுத்துப் போர்த்தோர் என விரித்துக் கொள்க. (ருஎ)

நல்லார் குடைதடத்து நாடு மருவியிலுங்
கல்லார மேவுங் கழுக்குன்றே—சொல்லூரு
மாமகத்து வந்தான் மலியுமம்பர்த் தொண்டர் செயு
தீமகத்து வந்தான் சிலம்பு.

(இ - ள்.) நல்லார் குடை தடத்தும் கல்லாரம் மேவும் - மங்கையர் நீராடுந் தடாகத்திலும் செங்கழுநீர் மலர் பொருந்

தியை (கழுக்குன்றே); நாடும் அருவியிலும் கல் ஆரம் மேவும் - யாவரும் விரும்பும் அருவி நீரிலும் மாணிக்க முதலிய பல வகைக் கற்களும் சந்தனக் கட்டைகளும் பொருந்தி வருகின்ற; கழுக்குன்றே-; சொல் ஊரும் மா மகத்துவம் தான் மலியும் அம்பர் - புகழ் பரந்த பெருமையும் மகத்துவமும் நிறைந்த அம்பர் என்ற நகரில் வாழ்ந்த; தொண்டர் செயும் தீ மகத்து உவந்தான் - அடியராகிய சோமாசி நாயனர் செய்த அழல் வேள்வியை விரும்பியவரும் (ஆகிய சிவபெருமான்) சிலம்பு - வாழும் மலையாம்.

(வி - ம்.) குடைதடத்து என்ற குறிப்புமொழியால் நல்லார் என்பது பெண்களை யுணர்த்தியது. கல்லாரம் - செங்கழு நீர்; நீர்க்குளிரி எனவும் கூறலாம். ஆரம் - ஆத்தி எனினும் பொருந்தும்; அருவி மரங்களை முறித்து இழுத்துக்கொண்டு வருவதால். மகத்துவம் - மேன்மை. மகம் - யாகம். மகம்+அத்து+ உவந்தான்=மகத்துவந்தான். மகத்திடம் வந்தான் எனினும் அமையும். (கூஅ)

மாதர் மலர்விழியும் வாசிப்போர் தம்மனமுங்
காதக மோடுங் கழுக்குன்றே—போதமிகுஞ்
சேரமா னத்தன் சிலம்பினுலாப் பாடமகிழ்
வீரமா னத்தன் விருப்பு.

(இ - ள்.) மாதர் மலர் விழியும் காது அகம் ஓடும் - மகளிரது நீல மலர் போன்ற விழியும் செவியகம் வரையும் விரைந்து சென்று மீளும் (கழுக்குன்றே); வாசிப்போர் தம் மனமும் காதகம் ஓடும் - பல நூல்களைப் படிப்பவருடைய நெஞ்சத்திலும் பிறர்க்குத் தீது புரியும் எண்ணம் நீங்கும்; கழுக்குன்றே-; போதம்மிகும் சேரமான் அதன் சிலம்பில் உலா பாட - அறிவு மிகுந்த சேரமான் பெருமாணயனர் அந்தத் தன்னுடைய மலையாகிய கயிலையில் உலா என்ற நூல் பாட (அதனைச் செவியேற்று); மகிழ் வீரம் மானத்தன் - மகிழ்ந்த வீரமும் பெருமையும் உடையவர் (ஆகிய சிவபெருமான்) விருப்பு - விரும்பி வாழும் இடமாம்.

(வி - ம்.) செவிவரை சென்று மீளும் விழியுடையார் மகளிர் எனவே வனப்புடைய மங்கையர் வாழ் நகரம் அது

எனவும், வாசிப்போர் தம்மனத்தினின்று காதகம் ஓடும் எனவே தீதுபுரியும் எண்ணமில்லார் அந் நகரமாந்தர் எனவும் நகர்ச் சிறப்பு விளங்கியது காண்க. திருக்கைலாய ஞானவுலாப் பாடிச் சேரமான் பெருமாணுயனுர் கயிலே சென்று சிவபெருமான் திருமுன் அரங்கேற்றினர் என்ற வரலாற்றைக் குறித்தது இறுதியடிகள். மானம் - பெருமை; அக்குணமுடையன் மானத்தன் எனக் கொள்க. மான் அத்தன் - மானைக் கரத்தமைத்தோன் எனவும், வீரமான் அத்தன் - வெற்றித்திருவாகிய துர்க்கையின் தலைவன் எனவும் கொள்ளலாம். (ருக)

போற்பின்மட வாருக்கும் பூதியணி வோருக்குங்
கற்பங் கழியாக் கழுக்குன்றே—அற்பொழுதில்
ஆடிஞ னந்தி யழலனையா ஞகமங்கள்
பாடிஞ னந்தி பதி.

(இ - ள்.) பொற்பின் மடவாருக்கும் கற்பு அங்கு அழியா - அழகிற் சிறந்த மகளிர்க்கும் கற்பு அங்கு நீங்காத (கழுக்குன்றே); பூதி அணிவோருக்கும் கற்பம் கழியா - திருநீறு பூசுஞ் சிவனடியார்களிடத்திலும் கற்பம் நீங்காத; கழுக்குன்றே-; அல்பொழுதில் ஆடினன்- இரவுக் காலத்திலும் சுடலையினின்று ஆடியவரும்; அந்தி அழல் அனையான் - செவ்வானத்தையும் தீயையும் போன்ற திருமேனியுடையவரும்; ஆகமங்கள்பாடினன் நந்தி - சிவாகமங்கள் பலவும் பாடியவரும் நந்தியெனும் பெயர் கொண்டவரும் (ஆகிய சிவபெருமான்) பதிவாழும் தலமாகும்.

(வி - ம்.) கற்பழியா மாதர் வாழ்கின்ற நகர் எனவும் திருநீறு நீங்காது வைத்திருக்கும் சிவனடியார் வாழ்கின்ற நகர் எனவும் சிறப்புக் காண்க. கற்பம் என்பது திருநீற்றின்வகை எனத் தெரிகின்றது. வேறு பொருளிருப்பின் ஆய்ந்தறிக. அந்தி - மாலே. இது அக்காலத்துத் தோன்றும் செக்கர்வானத்தையுணர்த்தியது. அந்திவண்ணன் என வருவது காண்க. அந்தியும் அழலும் அனையான் என உம்மை விரிக்க. நந்தி என்பது இறைவன் பெயர்களுள் ஒன்று "அணிதில்லை யம்பலத்தாடுகின்ற பிச்சன் பிறப்பிலி பேர் நந்தி" எனவும், "பேர் நந்தி என்றேத்தும்" எனவும், சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால் நந்தி நாமம் நமச்சிவாயவே" எனவும் வருவன காண்க. (ருஉ)

பஞ்சினடி யார்கவுளும் பாடு மறையோருங்
கஞ்சனையோப் பாகுங் கழுக்குன்றே—தஞ்சமேன
ஏனாதி நாதர்தா மேத்த வருள் சுரந்த
வானாதி நாதர் மனை.

(இ - ள்.) பஞ்சின் அடியார்கவுளும் கஞ்சனை ஒப்பு ஆகும் - செம்பஞ்சுக்குழம் பூட்டிய பாதத்தையுடைய மகளிர் கன்னமுங் கண்ணாடியை யொப்பாகத் தோன்றும் (கழுக் குன்றே); பாடுமறையோரும் கஞ்சனை ஒப்பு ஆகும் - வேதம் ஓதுகின்ற மறையவர்களும் பிரமனை யொப்பாகத் தோன்றுகின்ற; கழுக்குன்றே-; ஏனாதிநாதர் தாம் தஞ்சம் என ஏத்த அருள் சுரந்த - ஏனாதிநாயனார் தஞ்சம் என்று சொல்லித் துதிக்க அவர்க்குத் திருவருள் புரிந்த; வான் ஆதிநாதர் - பெருமை வாய்ந்த முதல்வராகிய கடவுளர்; மனை - வாழும் மனையாம்.

(வி - ம்.) பஞ்சின் அடியார் என்றது, குறிப்பாற் பெண் களையுணர்த்தியது; செம்பஞ்சுக்குழம் பூட்டுவது ஆடவர்க்குப் பொருத்தமின்மையின். கஞ்சனை - கண்ணாடி. கஞ்சன்-பிரமன்: கஞ்சமலரில் இருப்பவன். கஞ்சம் - தாமரை; கஞ்சன் + ஐ = கஞ்சனை இரண்டனுருபு. தஞ்சம் - எளிமை. எளிமை நான் என்னையாள வேண்டும் என்று கூறி வணங்கினர் என்க. வான் - பெருமை; வான் - விண் எனக் கொண்டு வான் முதலாகிய நாத தத்துவமானவர் என்பதும் ஒன்று. (சுக)

உட்டுறவோர் மாத ரோளிர்பூ ணகில் வினைவார்க்
கட்டங் கடக்குங் கழுக்குன்றே—இட்ட
மருவக் கரையான் வருமூவர் பாடுங்
திருவக் கரையான் சிலம்பு.

(இ - ள்.) உள் துறவோர் வினைவார் கட்டம் கடக்கும் - நெஞ்சத்துறவுடைய முனிவர் வினையால் வரும் நீண்ட துயரங்களைக் கடக்கும் (கழுக்குன்றே); மாதர் ஒளிர் பூண் நகில் வினைவார்கட்டு அங்கு அடக்கும் - மங்கை யருடைய விளங்கும் அணிகலன் புனைந்த கொங்கைகள் தொழிலமைந்த கச்சினாற் கட்டி அங்கே அடக்கப்பட்ட;

கழுக்குன்றே-; இட்ட மரு அக்கரையான் வரு மூவர் பாடும் - அன்புபொருந்திய உறுதியுடன் வந்த மூவரும் பாடிய; திருவக்கரையான் - திருவக்கரை என்ற தலத்தி லிருப்பவர்; சிலம்பு - மலையாம்.

(வி - ம்.) முனிவர்கட்கும் மங்கையர் கொங்கைகட்கும் சிலேடை இது. கட்டம் - கஷ்டம் என்ற வடசொல்லின் திரிபு. கட்டம் - துயரம் : கவலை. வார் - நீண்ட; மிகுந்த; வார் - கச்சு (இரவுக்கை), நகில் - கொங்கை. இட்டம் - விருப்பு; இஷ்டம் என்ற வடமொழித்திரிபு. அக்கரை-கவனம்; உறுதி; அழுத்தம். இஃது உலக வழக்குச் சொல். வக்கரை என்பது ஓர் சிவத் தலம். திருஞானசம்பந்தர் பாடல் மட்டும் பெற்றது எனத் தெரிகிறது. மூவர் பாடும் திருவக்கரை என்றது பாடிய பாடல்கள் மறைந்தன எனக் கருதிக்கூறியது போலும். பொதுவாக மூவராற் பாடப்பட்ட சிவன் எனக் கொள்ளினும் பொருந்தும். (௬௨)

சேந்திருவ ஞர்கரமுஞ் சேரு மதகரியுங்
கந்துக மல்குங் கழுக்குன்றே—சந்திரன்சேர்
சென்னிய ரல்லார் திருமிடற்ற ரன்பர்களுக்
கன்னிய ரல்லா ரகம்.

(இ - ள்.) செம் திரு அனார் கரமும் கந்துகம் அல்கும்- செய்ய திருமகளைப் போன்ற மகளிர் கைகளிலும் பந்துகள் தங்கும் (கழுக்குன்றே); சேரும் மதம் கரியும் கந்து உக மல்கும் - கூடத்திற் சேர்ந்த மதம் பொருந்திய யானை களும் கட்டுத்தறியை முறிக்க முயல்கின்ற; கழுக்குன்றே-; சந்திரன்சேர் சென்னியர் - வெண்பிறை சேர்ந்த திருமுடி யுடையவரும்; அல் ஆர் திரு மிடற்றர் - இருள் நிறைந்த (கரிய) சிறந்த கண்டத்தையுடையவரும்; அன்பர்களுக்கு அன்னியர் அல்லார் - அடியார்கட்கு அயலாரல்லாதவரும் (நெருங்கிய உறவினர் போன்றவரும்) ஆகிய சிவபெருமான் அகம் - வாழும் மனையாம்.

(வி - ம்.) அன்னார், அனார் எனத் தொகுத்தல் ஆயிற்று. மங்கையர் கையிற் பந்து தங்கும் என்றது; பந்தாடிப் போது போக்குவர், செல்வராதலின், என்ற கருத்தை விளக்கும். கந்துகம் - பந்து. கந்து - யானைகளைக் கட்டுதற்கு நிறுத்திய

தூண். உக - கெட; அழிய; முறிய. மல்கும் - பெருகும். இது மதம் நிறைந்து நிற்கும் என்ற பொருளையுணர்த்தியது. அந்நியர் - வட சொல், அன்னியர் எனநின்று அயலார் என்ற பொருளைத் தந்தது. அன்னியரல்லார் உறவினர் என்க. (கூ௩)

விரும்பு மணிப்புற்று மேவுமணப் பந்தர்
கரும்பணிக ளோங்குகழுக் குன்றே—அரும்புஞ்
சிலம்பொலி காட்டினர் சேரர்பிராற் குப்பேய்க்
குலம்பொலி காட்டினர் குன்று.

(இ - ள்.) விரும்பும் அணி புற்று கரும் பணிகள் ஓங்கும் - விரும்பத்தக்க அழகமைந்த புற்றுக்கள் பெரும் பாம்புகள் தங்குமாறு உயர்ந்திருக்கும் (கழுக்குன்றே); மேவும் மணம் பந்தர் கரும்பு அணிகள் ஓங்கும் - பொருந்திய திருமணத்திற்கு இயற்றிய பந்தர்கள் கரும்பு வரிசைகள் சேர்ந்து உயர்ந்து தோன்றும்; கழுக்குன்றே-; சேரர் பிராற்கு அரும்பும் சிலம்பு ஒலி காட்டினர் - சேரமான் பெருமாணயனர்க்குத் தம் திருவடி நடித்தலாலெழுஞ் சிலம்பொலியைக் காட்டியவரும்; பேய் குலம் பொலி காட்டினர் - பேய்க்கூட்டங்கள் நிறைந்த சுடுகாட்டில் உறைபவரும் ஆகிய சிவபெருமான்; குன்று - வாழும் மலையாம்.

(வி - ம்.) குன்றும் நகரமும் ஒன்றாகக் கூடியிருப்பதால் புற்றில் பாம்புகள் இருப்பதையும் திருமணப்பந்தரிற் கரும்புகள் நாட்டி யிருப்பதையும் வளமாகக் காட்டினர். அணி - அழகு. மணி எனவும் பிரித்து அப்பொருள் கொள்க. கறையான் புற்றமைத்திருப்பது அரிய செயலாதலின் அதனைக் காண விரும்புவர் மக்கள் என்பது தோன்ற "விரும்பும்" என்றார். கருமை - பெருமை. பணி - பாம்பு. கருமை + பாம்பு = கரும் பாம்பு. சேரர் பிரான்: இது குறிப்பாற் கழறிற்றறிவார் நாயனரை யுணர்த்தியது. ஒவ்வொரு நாளும் தில்லையிற் கூத்தப்பெருமான் சிலம்பொலி கேட்கும் சேரர் பிரானுக்கு என்பது வரலாறு. (கூ௪)

தாரிலகு தோரணமுஞ் சைவருறை நன்மடமுங்
காரண மல்குங் கழுக்குன்றே—பாரை
அருந்தேற் றுவந்தா னமரிளசை மாறன்
விருந்தேற் றுவந்தான் விருப்பு.

(இ - ள்.) தார் இலகு தோரணமும் கார் அணமல்கும் - மலர்மாலைகளோடு விளங்குந் தோரணங்களும் மேகங்கள் வந்து படியும்படி உயர்ந்து நிறைந்திருக்கும் (கழுக்குன்றே); சைவர் உறை நல்மடமும் காரணம் அல்கும்- சிவனடியார் தங்கும் மடங்களிலும் காரணம் என்ற சிவாகமம் தங்கும்; கழுக்குன்றே - ; பாரை அருந்து ஏற்று வந்தான் - உலகத்தை விழுங்கிய விடைமேல் ஏறி வந்தவரும்; அமர் இளசை மாறன் விருந்து ஏற்று உவந்தான் - விரும்பி இளையான் குடிமாற நாயனர் அளித்த விருந்துணவை உட்கொண்டு மகிழ்ந்தவரும் ஆகிய சிவபெருமான்; விருப்பு - விருப்பு-வாழும் இடமாம்.

(வி - ம்.) அந்நகரத்து மாளிகைளிற் கட்டிய தோரணங்கள் மேக மண்டலத்திற்கு மேல் நிற்கும் என்பதும் சைவ மடங்களிற் காரணம் என்ற ஆகம நூல்களும் அதிற் கூறியபடி செய்யும் செயல்களும் அமைந்திருக்கும் என்பதும் காண்க. ஏறு – விடை; காளை. பாரை அருந்து ஏறு எனவே திருமால் ஆகிய விடை என்பது குறிப்பாற்றோன்றியது. ஏறு வந்தான் - ஏற்றுவந்தான் என மெய்யிரட்டித்தது, நெடிற்றொடர் ஆதலின். இளசை அமர் என மாற்றி இளையான் குடியில் அமர்ந்த எனப்பொருள் கொள்வதும் பொருந்தும். (சூ)

பொன்னனையார் பூணகிலும் பூக மலிவயலுங்
கன்னலணி வீறுங் கழுக்குன்றே—என்னைக்
கருவிற் கிடத்தார் கருதியபொன் னோங்கற்
செருவிற் கிடத்தார் சிலம்பு.

(இ - ள்.) பொன் அனையார் பூண் நகிலும் கல் நல் அணி வீறும் - திருமகள் போன்ற மங்கையர் பூணணிந்த கொங்கைகளும் பலவகைக் கற்கள் பதித்த நல்ல பொன்னணிகலன் புனைந்து விளங்கும் (கழுக் குன்றே); பூகம் மலிவயலும் கன்னல் அணி வீறும் - கமுக மரங்கள் நிறைந்த கழனிகளிற் கரும்பு வரிசை சிறப்பாகத் தோன்றும்; கழுக்குன்றே-; என்னை கருவில்கிடத்தார் - அடிமையாகியஎன்னை இனிப்பிறவியில் அழுந்துமாறு செய்யாதவரும், கருதிய பொன் ஓங்கல் செருவிற்கு இடத்தார் -

வினைத்தபடி பொன்மலையாகிய போர்க்குரிய வில்லுக்கு இடக்கரம் கொடுத்தவரும் (ஆகிய சிவபெருமான்); சிலம்பு- தங்கும் மலையாம்.

(வி - ம்.) பொன் - திருமகள்; (இலக்குமி). கல், ஒன்பது வகை மணிகளையுணர்த்தியது. கல்லினைப் பதித்த அணி; நல்ல அணி என இயைக்க. ஒன்பது வகையாவன: முத்து, பவளம், வயிரம், வைடூரியம், மரகதம், பச்சை, புருடராகம், மாணிக்கம், கோமேதகம் இவை. பூகம் - கமுகு. கன்னல் - கரும்பு. ஓங்கல் - மலை. இமயமலையை வில்லாக எடுத்தார் என்ற வரலாற்றைக் குறித்தது இது. (சுசு)

மித்தையகல் வீரர்கையும் வீட்டிறப்பி னிற்புறவுங்
கத்தி யுலவுங் கழுக்குன்றே—அத்தி
உரித்தா னமல மொழித்தான் பணிப்பூண்
பரித்தா னமலன் பதி.

(இ - ள்.) மித்தை அகல் வீரர்கையும் கத்தி உலவும்- பொய் நீங்கிய (உண்மையான) வீரர்களுடைய கைகளிலும் கத்திகள் சுழலும் (கழுக்குன்றே); வீட்டு இறப்பினில் புறவும் கத்தி இலவும் - மாளிகைகளின் தாழ்வாரத்தில் உறையும் புருக்களும் கூவித்திரியும்; கழுக்குன்றே; அத்தி உரித்தான்-யானையை உரித்துத்தோலைப் போர்த்த வரும், நம்மலம் ஒழித்தான் - அடியார்களாகிய நமது மலத்தினை நீக்கி யாட்கொண்டவரும், பணி பூண் பரித்தான் அமலன்- பாம்புகளாகிய அணிகலன்களைத் தாங்கியவரும் மல மற்றவரும் (ஆகிய சிவபெருமான்); பதி-வாழ் தலமாகும்.

(வி - ம்.) மித்தை - பொய். வீரர் எனப் பெயர் கொண்டு வீரமின்றிப் புறங்காட்டிப் போரில் ஓடும் போலி வீரர்களை நீக்குவதற்கு "மித்தையகல் வீரர்" என்றார். வீரர்கரத்திற் கத்தி பிடித்துலவுவதும் இறப்பிற் புருக்கள் கூவுவதும் அங்நகரச் சிறப்பு என்க. நம் மலம் ஒழித்தான் என்றது துணிவாற் கூறியது. எதிர்காலத்தாற் கூறவேண்டியதை இறந்த காலத்தாற் கூறியதாற் காலவழுவமைதி. பணி - பாம்பு. பரித்தான் - தாங்கினன். (சுஎ)

சேந்தனடி யார்குழாஞ் சேர்குறிகள் வைத்திளைஞர்
காந்தம் படிக்குங் கழுக்குன்றே—ஏந்து கொன்றைத்
தேனமருங் கண்ணியார் தேவியொடு பார்த்தனெதிர்
கானமருங் கண்ணியார் காப்பு.

(இ - ள்.) சேந்தன் அடியார் குழாம் காந்தம் படிக்கும் - முருகக்கடவுளை வணங்கும் அடியார் கூட்டங்கள் கூடிக் காந்தப்புராணம் படிக்கின்ற (கழுக்குன்றே) இளைஞர் சேர் குறிகள் வைத்துக் காந்து அம்பு அடிக்கும் - இளமையுடைய வீரர்கள் சேர்ந்த குறி வைத்துத் தைக்கும் அம்புகளை அக்குறியிற் படிபடும்படி எய்கின்ற; கழுக் குன்றே -; ஏந்து கொன்றைத்தேன் அமரும் கண்ணியார் - தாங்கிய கொன்றை மலராற் கட்டிய வண்டுகள் மொய்த்த மாலையையுடையவரும்; தேவியொடு பார்த்தன் எதிர் கானம் மருங்கு அண்ணியார் - உமாதேவியுடன் அருச்சுனனுக்கு எதிராகக் காட்டின் பக்கத்துச் சென்று நெருங்கியவரும் ஆகிய சிவபெருமான்; காப்பு - காவலாகக் கொண்ட இடமாம்.

(வி - ம்.) சேந்தன் - முருகன்; செய்ய நிறமுடையவன் என்ற காரணத்தால் வந்தது. இளைஞர்கள் குறிவைத்து அம்பு எய்து பயிலுவது இயற்கை யாதலின் "சேர் குறிகள் வைத்து" என்றார். அடிக்கும் என்பது, அக்குறியை வீழ்த்துவர் என்பதை யுணர்த்தியது. தேனமரும் கொன்றைக் கண்ணியேந்தியார் எனக் கொள்க. கானமருங்கு பார்த்தனெதிர் தேவியோடு அண்ணியார் எனக்கூட்டுக. அருச்சுனன் தவம்புரிந்தபோது வேட வடிவத்திற் சென்ற வரலாற்றைக் குறித்தது இது. (சுஅ)

நம்புகழைக் கூத்தர்களு நாடுமேலை வாவியினுங்
கம்பத் திவருங் கழுக்குன்றே—வம்பு
விரவிமதிக் கண்ணன்பு மேவேனை யாண்ட
விரவி மதிக் கண்ண னிடம்.

(இ - ள்.) நம்பு கழைக் கூத்தர்களும் கம்பத்து இவரும் - யாவரும் விரும்பிக்காணும் கழைக் கூத்தாடி

களும் மூங்கிற் கம்பத்தில் ஏறி விளையாடுகின்ற (கழுக் குன்றே); நாடும் அலை வாவியிலும் - அலை வீசுகின்ற பொய்கைகளிலும்; கம்பத்தி வரும்-நீர் வரிசை வரிசையாக அலைந்து வருகின்ற ; கழுக்குன்றே -; வம்பு விரவி மதிக் கண் அன்பு மேவேனை ஆண்ட - அறிவில் வம்பு (வீண் எண்ணங்கள்) கலந்து அன்பு பொருந்தாதவனாகிய என்னையும் ஆட்கொண்ட ; இரவி மதி கண்ணன் - சூரியன் சந்திரன் ஆகிய இரு சுடர்களையும் விழிகளாகக் கொண்டவர் ஆகிய கடவுளர் ; இடம் - உறையும் இடமாம்.

(வி - ம்.) கம்பம் - மூங்கிற்றூண். இவரும் - ஏறும். கழை நட்டு அதன்மேல் ஏறிக் கூத்தியற்றுவது குறித்தது. கம் - நீர். பத்தி - வரிசை. நீர் காற்றால் அலைக்கப்பட்டு வரும் என்பதை கம் பத்திவரும் என்ற சொற்றொடர் உணர்த்தியது. மதி - அறிவு. கண்: ஏழனுருபு. மதிக்கண்-அறிவின்கண். வம்பு விரவி அதனால் அன்பு பொருந்தாதவன் எனக் கூட்டுக. இறைவனுக்கு முச்சுடரும் மூன்று கண்கள் ஆதலின் "இரவிமதிக் கண்ணன்" என்றார். (சுகூ)

சேலோடு தண்புனலுஞ் செம்போற் கழலுமன்னர்
காலோ டிவருங் கழுக்குன்றே—பாலமம்பிற்
கட்டிக் களித்தான் கண்வளர்பா லாழிபுலிக்
குட்டிக் களித்தான்றன் குன்று.

(இ - ள்.) சேல் ஓடு தண் புனலும் கால் ஓடிவரும் - கெண்டை மீன்கள் குளிர்ந்த நீரோடு கலந்து வாய்க்கால் வழியாக ஓடிவருகின்ற (கழுக்குன்றே); மன்னர் செம்பொன் கழலும் - அரசர்கட்குரிய சிவந்த பொன்னாற் செய்யப்பட்ட வீரக்கழலும்; கால் ஓடு இவரும் - அம்மன்னவர் காலின் கண் ஏறியமைந்திருக்கும்; கழுக்குன்றே-; பாலம் அம்பில் கட்டி களித்தான் தன் கண்வளர்பால் ஆழி - கடலில் அணைகட்டி மகிழ்ந்தவன் ஆகிய திருமால் கண்வளரும்-திருப்பாற்கடலை ; புலிக் குட்டிக்கு அளித்தான் வியாக்கிர பாத முனிவருடைய மகனாகிய உபமன்யுவுக்கு உண்ணும் படி வழங்கியவர் ஆகிய சிவபெருமான்; குன்று - வாழும் மலையாம்.

(வி - ம்.) தன் புனலோடு சேலும் எனக் கூட்டிப்பொருள் கொள்க; நீரோடு வழியெல்லாம் சேலும் ஓடும்; சேல் ஓடும் வழி நீரோடாது ஆதலின், காலோடு இவரும் என்றதைக் காலில் இவரும் என ஏழனுருபுப் பொருள் கொள்க. இது வேற்றுமை மயக்கம். பாலம் - அணை. அம்பு - நீர். இஃது நீர் நிலையாகிய கடலையுணர்த்தியது. திருமால் இராமனாக வந்து இலங்கைக்குச் செல்ல அணைகட்டியதைக் குறித்தது. திருமால், திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்பவர் என்பது அக் கடவுள் வரலாறு. புலி என்பது பாலாழி அளித்தான் என்ற குறிப்பால் வியாக்கிர பாதமுனிவரையும், குட்டி என்பது அவர் மைந்தனாகிய உபமன்யு முனியையும் குறித்தது. உபமன்யு குழவிப் பருவத்திற் பால் வேண்டியழத் தாய் தந்தையர் பாலின்றி வருந்துவது கண்ட இறைவனிரங்கித் திருப்பாற்கடலை வரவழைத்துதவினர் என்பது வரலாறு. (எ0)

சேம்பவள வாய்க்கிளியுஞ் செந்தா மரைக்கயமும்
கம்பு ளிருக்குங் கழுக்குன்றே—வெம்பிமனம்
யானைந்து மாடில் யமபுரிநண் ணுதாள்வோன்
ஆனைந்து மாடி யகம்.

(இ - ள்.) செம்பவளம்வாய் கிளியும் கம்பு உள் இருக்கும் - செய்ய பவளம் போன்ற சிவந்த வாயையுயுடைய கிளிகளும் கம்பங் கொல்லையுள் சென்று தங்கும் (கழுக் குன்றே); செந்தாமரை கயமும் கம்புள் இருக்கும் - செந்தா மரை படர்ந்த நீர்நிலைகளிலும் சம்பங் கோழிகள் தங்கும்; கழுக்குன்றே-; வெம்பி மனம் யான் நைந்து மாடுஇல் யமன் புரி நண்ணுது ஆள்வோன் - நான் மனம் வருந்தி அண்மையில் இல்லாத யமன் பதிக்கண் செல்லவிடாது ஆள்வோரும்; ஆன் ஐந்து ஆடி - பசுவின்பால் உண்டாம் ஐந்து பொருள்களானும் ஆட்டப்படுபவரும் ஆகிய சிவ பெருமான்; அகம் - வாழும் இடமாம்.

(வி - ம்.) கம்பு என்பது ஒருவகைக் கூலம். ஈண்டு அஃது விளையும் தோட்டத்தினை யுணர்த்தியது. கிளிகள் பெரும் பாலும் கம்பங்கதிரையும் தினைக் கதிரையும் கவர்ந்து தின்னும். கம்புள் - சம்பங் கோழி; சங்கு என்ற உயிரியையும் உணர்த்தும். கயத்திற் சங்குகள் தங்கும் எனினுமாம். யமபுரி நண்ணுத என்றது, சிவனுலகு சேருமாறு ஆள்வோன் எனக்

குறிப்புப் பொருள் தந்தது. மாடு - பக்கம், அருகு. புரி - நகரம். ஆடி - ஆட்டப்படுவோர் என்ற பிறவினைப் பொருளைத் தந்தது. (எக)

ஒப்பின்மன்னர் தங்கரமு மோதுமவர் வீடுமிலங்
கப்பண மன்னுங் கழுக்குன்றே—கப்பகலாச்
சூலத்த னத்தன் றொழிற்கரியான் றீக்கணொளிர்
பாலத்த னத்தன் பதி.

(இ - ள்.) ஒப்பு இல் மன்னர் தம் கரமும் இலங்கு கப்பணம் மன்னும் - உவமை கூறவியலாத சிறந்த வேந்தர் தமது கரத்திலும் விளங்கு கப்பணம் என்ற படை பொருந்தும் (கழுக்குன்றே) ஓதும் அவர் வீடும் இலங்க பணம் மன்னும் - மேற்கூறிய அம் மன்னர் தமது மனையும் விளங்கப் பொன் வெள்ளி முதலிய பணங்கள் பொருந்தும்; கழுக்குன்றே-; கப்பு அகலா சூலத்தன் - மூன்று கவர் நீங்காத (உடைய) சூலாயுதமுடையவரும்; நத்தன் தொழற்கு அரியார் - திருமால் பன்றியாய்த் தேடியும் வணங்கத் திருவடி காணப்படாதவரும்; தீ கண் ஒளிர் பாலத்தன் அத்தன் - நெருப்புக் கண் விளங்கும் நெற்றி யுடையவரும் உலகினர்க்குத் தந்தையும் ஆகிய சிவபெரு மான்; பதி - வாழும் நகரமாம்.

(வி - ம்.) கப்பணம் - கைவேல்; இரும்பினாற் செய்த நெருஞ்சிமுள்ளமைந்த ஒரு வகை ஆயுதத்திற்கும் பெயர். அதனைக் கழுமுள் என்பர். இலங்கு கப்பணம் என்பது முன் மொழியீறு குறைந்து நின்றதாகக் கொள்க. தொகுத்தல் விகாரம் இது. முத்தலைச் சூலம் என்பதும் கப்பகலாச் சூலம் என்பதும் ஒன்று. பாலம் - நெற்றி. பாலத்தன் - நெற்றியை யுடையவன். நத்து - சங்கு. நத்தன் - சங்கினைக் கொண்டவன் (திருமால்). (எஉ)

செச்சை முலையார் செறிகரங் கைக்கரிகள்
கைச்சரி துன்னுங் கழுக்குன்றே—மெச்சவரு
சித்திர மானுன் றிகழ்கீழ் முகத்தொடறு
வத்திர மானுன் மனை.

(இ - ள்.) செச்சை முலையார் செறிகரம் கைச்சரி துன்னும் - செஞ்சந்தனக்குழம்பு பூசிய கொங்கையை யுடைய மங்கையர் தம் அழகு நிறைந்த செங்கைகளில் வளையல் வரிசை பொருந்தும் (கழுக்குன்றே); கை கரிகள் கைச்சு அரி துன்னும் - துதிக்கைகளையுடைய யானைகளைப் பகைத்துச் சிங்கங்கள் கொல்வதற்கு நெருங்கும்; கழுக் குன்றே-; மெச்சவரு சித்திரம் மானன் - யாவரும் வியக்க வந்த அழகிய மானைக் கைக்கொண்டவரும், திகழ் கீழ்முகத் தொடு அறுவத்திரம் ஆனன் - விளங்கும் கீழ் நோக்கிய முகத்தொடுகூடி அறுமுகம் ஆயினவரும் (ஆகிய சிவ பெருமான்) மனை - வாழும் மனையாம்.

(வி - ம்.) கை - வரிசை, கை என்பது ஒழுங்கு சிறுமை எனப் பல பொருள்தரும் ஒரு சொல்; ஆதலின் பொருத்த மறிந்துகொள்க. கைத்து - பகைத்து. இஃது கைச்சு எனப் போலியாய் நின்றது; வைத்த, வைச்ச; தைத்த, தைச்ச என்பன போல. அரிகரிகளைத் துன்னும் எனக் கொள்க. சிங்கங்கள் கரிகளைத் தேடி நெருங்கும் என்பது. தாருகாவன முனிவர் களாற் கொல்வது கருதி விடுக்கப்பட்ட மான் வந்து சித்திரத்திற் பொறிக்கப்பட்ட மான்போல் ஒரு செயலுமின்றிக் கரத்தில் நிற்றலால் "மெச்சவரும்" என்றார். சித்திரம் - அழகு. ஓவியம் எனக் கொள்ளினும் அமையும். வத்திரம் - முகம். "ஐந்து முகத்தோடதோமுகமாய்" என்ற கந்தர் கலிவெண்பாவின் கருத்து சிவனே அறுமுகனாகத் தோன்றினான் என்பது. (எங)

வாட்டமிலன் பர்க்குமுத்தி மாக்கள் பிடிக்குவயற்
காட்டிக் களிக்குங் கழுக்குன்றே—நாட்டமுறும்
யோகத்தா ரத்த ருவகை பெருகுமிடப்
பாகத்தா ரத்தர் பதி.

(இ - ள்.) வாட்டம் இல் அன்பர்க்கு முத்தி காட்டி களிக்கும் - சிறிதும் வருந்துதல் இல்லாத அடியார்கட்கு முத்தியைக் காட்டிக் களிப்பிக்கும்; (கழுக்குன்றே); மாக்கள் பிடிக்கு வயற்காட்டு இக்கு அளிக்கும் - மாந்தர்கள் பெண் யானைகட்கு வயற் காட்டிலுள்ள கரும்புகளை உணவாகக் கொடுக்கும்; கழுக்குன்றே-; நாட்டம் உறும் யோகத்தார் அத்தர் - தம்மையே நாடும் யோகப் பயிற்சியுடைய முனிவர்

கட்குத் தலைவரும்; உவகை பெருகும் இடம் பாகம் தாரத்தர் - மகிழ்ச்சி பெருகிய இடப் பாகத்தில் தாரத்தை வைத்தவரும் (ஆகிய சிவபெருமான்) பதி - வதியும் பதியாம்.

(வி - ம்.) களிக்கும் என்பது பிறவினைப் பொருளில் வந்தது. அன்பர்களை மகிழ்விக்கும் கழுக்குன்று எனக்கொள்க. "அஞ்சுவதியாதொன்றுமில்லை அஞ்சவருவதும் இல்லை" என நாவுக்கரசர் கூறுவது போல மெய்யடியார் எத்துயர் வரினும் தளராதிருப்பர் என்பது தோன்ற "வாட்டமிலன்பர்" என்றார். மாக்கள் - ஈண்டு மக்களையுணர்த்திற்று. களிறு சீற்றமுடையது. அதற்கு ஊட்டுவது அரிது என்பது தோன்ற, "பிடிக்கு" என்றார், உவகை பெருகிய தாரத்தர் எனக் கூட்டுக, தாரம் - மனைவி.

யாணர்மிகு மாவணமு மின்புதவு வீதியுஞ்சீர்
காணம் பலமன் கழுக்குன்றே—பேணரிய
மேனி சிவந்தார் விடுதூது முன்பரவை
பானி சிவந்தார் பதி.

(இ - ள்.) யாணர் மிகும் ஆவணமும் சீர் காணம் பல மன் - புதுவருவாய் மிகுந்த கடைவீதியும் செல்வம் பல வகைப் பொன்கள் பொருந்திய (கழுக்குன்றே); இன்பு உதவு வீதியும் சீர்காண் அம்பலம் மன் - இன்பத்தைத் தரும் தெருவும் சிறப்பைக் காணும் மன்றங்கள் பொருந்திய; கழுக்குன்றே-; பேண் அரிய மேனி சிவந்தார் - ஒருவராற் பேணுதற்கரிய திருமேனி சிவந்தவரும்; விடுதூது முன் பரவை பால் நிசி வந்தார் - சுந்தரரால் விடப்பட்ட தூதுவர் ஆக முன்பு பரவை நாச்சியாரிடத்திற்கு நள்ளிரவில் வந்தவரும் (ஆகிய சிவபெருமான்); பதி - உறையும் தலமாம்.

(வி - ம்.) ஒவ்வொரு நாளும் புதியபுதிய பொருள்கள் கடைகட்கு வருவதால் "யாணர் மிகும்" என்றார். இன்பு : காட்சியின்பம் என்க. சீர் - செல்வம். இது பொதுவாகப் பல வகைச் செல்வத்தைக் குறிக்கும். காணம் - பொன். சீரும் காணமும் என உம்மைத் தொகையாகக் கொள்க. தெருவுக்குச் சீரைக் காணும் அம்பலம் என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொள்க. தானே தோன்றிய மேனியென்பது விளங்க "பேணரிய மேனி" என்றார். பால் + நிசி = பானிசி. (எடு)

புவிகோள் பலாச்சுளைகள் போங்கறவோர் கைகள்
கவிகை மருவுகழுக் குன்றே—பவமார்
எமையா ளிடத்தன்பு ளேய்த வருளும்
உமையா ளிடத்த னுவப்பு.

(இ - ள்.) புவிகொள் பலாச்சுளைகள் கவிகை மருவும் - பூமியையிடமாகக் கொண்ட பலா மரத்தின் பழத்திலுள்ள சுளைகள் குரங்குகளின் கைகளிற் போய்ச் சேரும் (கழுக் குன்றே); பொங்கு அறவோர் கைகள் கவிகை மருவும் - பெருகும் பல தருமம் செய்வோர் கைகள் கொடைத்தன் மையைப் பொருந்தும்; கழுக்குன்றே-; பவம் ஆர் எமையாள் இடத்து அன்பு உள் எய்த அருளும் - பிறவியிலுழலும் எம்மை யாளும் போது அன்பு உள்ளே யமையும்படி திரு வருள் புரியும்; உமையாள் இடத்தன் - உமையம்மையை இடப் பாகத் திருத்தியவர் ஆகிய சிவபெருமான்; உவப்பு - விரும்புந் தலமாம்.

(வி - ம்.) புவிகோள் பலா என்றது வேர்ப்பலாவை யுணர்த்தும். பலாப்பழம் பழுத்தவுடன் பூமி பிளக்கும், அதன் மணமறிந்து குரங்குகள் துளைத்துச் சுளைகளை யெடுக்கும் எனக்கொள்க. புவிமேற் கொண்ட பலாச்சுளை யெனினும் பொருந்தும். கவி - குரங்கு. பவம் - பிறவி: பாவம் எனக் கொள்ளினும் அமையும். ஆளிடத்து - ஆளுங்கால் எனப்பொருள் கொள்க. உள்ளன்பு எய்தவருளும் என்க. (எசு)

வானர் மலைச்சரியு மாறு வயலுநீர்க்
கானு மேவுங் கழுக்குன்றே—மேனளிற்
கிட்டருந்த வந்தான் கிடைத்தவந்தி தானிட்ட
பிட்டருந்த வந்தான்றன் பேட்பு.

(இ - ள்.) வான் ஆர் மலை சரியும் நீர் கான் ஆறு மேவும் - வானம் அளாவிநின்ற அம்மலைச் சாரலும் நீரோடுங் காட்டாற்றினைப் பொருந்தும்(கழுக்குன்றே); மாறு வயலும் நீர்க்கால் நாறு மேவும் - நீர்வற்றாத வயல்களும் நீர் வந்து பாயும் கால்களையும் நெல் நாற்றுகளையும் பொருந் தும்; கழுக்குன்றே-; மேல் நாளில் கிட்ட அரும் தவம்தான்

கிடைத்த வந்தி - முற்பிறப்பிற் கிடைத்தற்கரிய தவம் பெற்று வந்தவள் ஆகிய வந்தி என்பவள்; தான் இட்ட பிட்டு அருந்த வந்தான் - தானே சுட்டு அளித்த பிட்டுண்ண வந்தவர் ஆகிய சிவபெருமான்; பெட்பு - விரும்புந் தலமாம்.

(வி - ம்.) சரி - சரிவு; சாரல் : மலைசார்ந்த இடங்கள். மலையினின்றிழிவது அருவி. இது கீழிறங்கியோடும் போது அதன் பெயர் காட்டாறு. பள்ளங்களிற் பெருகி நின்றால் அதன் பெயர் சுனை என உணர்க. கால்+நாறு=காணுறு. கான்+ஆறு =காணுறு-நாறுமுளை. நாற்று எனக் கூறுவதும் அது. இறைவன் கூலியாளாய் எதிர்வந்து தான் கொடுத்த பிட்டுண்டமை வந்திக்குப் பெரும்பேறு என்பதும், அப்பேறு பெறுவதற்குச் மேனாளிற் பெருந்தவம் புரிந்திருப்பள் என்பதும் விளங்க. மேனாளிற்......கிடைத்த வந்தி'' என்றார். (எஎ)

தான மிகுகரியுந் தண்மூலி கையுமராக்
கானஞ் சரிக்குங் கழுக்குன்றே—ஈனம்
அறுத்த வரையா னமலன்விடக் கச்சுப்
பொறுத்த வரையான் புரம்.

(இ - ள்.) தானம் மிகு கரியும் மரா கானம்சரிக்கும் - மத மிகுந்த யானைகளும் கடம்பமரம் பொருந்திய காட்டிற் சஞ்சரிக்கும் (கழுக்குன்றே); தண் மூலிகையும் அரா கால் நஞ்சு அரிக்கும் - குளிர்ந்த மூலிகைகளும் பாம்புகள் கக்கும் நஞ்சினைப் போக்கும்; கழுக்குன்றே-; ஈனம் அறுத்தவர் ஐயான் அமலன்-இழிவு நீங்கிய மேலோர்க்குத் தலைவரும் அமலரும்; விடம் கச்சு பொறுத்த அரையான் - நஞ்சுடைய பாம்புக் கச்சையைத் தாங்கிய இடையுடைய வரும் ஆகிய ஈசர்; புரம் - வாழும் தலமாம்.

(வி - ம்.) தானம் - மதம். மூலிகை - செடிகொடிகள். பச்சிலைகளான் பாம்பு நஞ்சினையும் போக்கும் சித்தர்கள் அங்குள்ளனர் எனக் கொள்க. ஈனம் - பொய் முதலிய இழிந்த பண்புகள் என்க. ஐயன், ஐயான், என்ற சொற்கள் ஒரு பொருளே தரும். ஐ - முதன்மை, தலைமை. அன், ஆன் விகுதி, விடம், என்பது அதனையுடைய பாம்பினையுணர்த்தியது. ஆகு பெயர். பாம்பினை இடையிற் கச்சாக இறுகப் புனைந்தவர் என்பது பொருள். (எஅ)

மன்னுபுகழ் வள்ளல்களு மாதரார் வாய்மொழியுங்
கன்ன னிகராங் கழுக்குன்றே—முன்னிகலிச்
சொற்கூ விளத்தான் றுருவரியுங் காணவொணு
நற்கூ விளத்தா னகம்.

(இ - ள்.) மன்னு புகழ் வள்ளல்களும் கன்னன்நிகர் ஆம் - நிலை பெற்ற புகழையுடைய கொடைத்தன்மை யுடையவரும் கன்னன் என்ற மன்னனுக்கு ஒப்பாகச் சொல்லப்படுகின்ற (கழுக்குன்றே); மாதரார் வாய் மொழியும் கன்னல் நிகராம் - மகளிர் பேசும் சொற்களும் கரும்பைப் போல இனிமையாகக் கேட்கப்படும்; கழுக் குன்றே-: முன் இகலி - முற்காலத்திற் பிரமனுடன் பகைத்து; சொல் கூ விள தான் துருவு அரியும் காண ஒணு - சொல்லப்படும் பூமிபிளக்குமாறு தோண்டித் தேடிய திருமாலாலும் காணப்படாத; நல் கூவிளத்தான் - நல்ல வில்வத்தழையை முடியிற் கொண்டவர் ஆகிய சிவபெரு மான்; நகம் - வாழும் மலையாம்.

(வி - ம்.) கன்னன்+நிகர்=கன்னனிகர் கன்னல்+நிகர்= கன்னனிகர் என்ருயது: "னல முன்றனவும்" என்ற நன்னூல் விதியால். கன்னல் - கரும்பு. கரும்பு நாவில் இனிப்பது போலச் செவிக்கு இன்பந்தருஞ் சொற்கள் என்க. கூ - பூமி விள்ள. பிளக்க; விள்ள என்பது விள எனத் தொகுத்தலாயிற்று. இது செய்யுள் விகாரம். துருவு - தேடிய. அரி - திருமால். அரியும் துருவிக் காணப்படாத எனக் கொள்க. கூவிளம் - வில்வம். கூவிளத்தான் - வில்வத்தைக் கொண்டவன் - பூசனை செய்வதற்கு உயர்ந்தது வில்வம் என்பர் சமயநூலுடையார்.

(எக)

திக்கயநே ருங்கரியுஞ் செல்வர்மனை யுஞ்சுவர்க்கங்
கைக்கவள மன்னுங் கழுக்குன்றே—மெய்க்குஞ்
சமயத் தலைவரையான் சம்புவெள்ளி யென்ன
அமையத் தலைவரையான் ஆர்வு.

(இ - ள்.) திக் கயம் நேரும் கரியும் சு வர்க்கம் கை கவளம் மன்னும் - திசையானையைப் போன்ற வலிய யானை

களும் நல்ல இனமாகிய அரிசியுருண்டைகள் துதிக்கையிற் கொண்டுண்ணும் (கழுக்குன்றே); செல்வர் மனேயும் சுவர்க்கம் கைக்க வளம் மன்னும் - செல்வமுள்ளவர் இல்லங்களும் பொன்னுலகத்தினேயும் வெறுக்குமாறு பல வகைச் செல்வங்களும் பொருந்தியிருக்கும்; கழுக்குன்றே-; மெய்க்கும் சமயம் தலைவர் ஐயான் - உண்மையெனக் கூறும் சைவ சமயத்தலைவர்கட் கெல்லாந் தலைவரும்; சம்பு - சம்பு என்ற பெயர் கொண்டவரும்; வெள்ளி என்ன அமை அ தலைவரையான் - வெள்ளிமலை என்று சொல்லப் பொருந்திய அம்முதன்மையான மலையையுடையவரும் (ஆகிய சிவபெருமான்) ஆர்வு - பொருந்துந்தலமாம்.

(வி - ம்.) திக்குகயம் என்பது முன்மொழியீறு கெட்டுத் திக்கயம் எனநின்றது. செய்யுள் விகாரம். சு - நன்மை. வர்க்கம்- இனம். நல்லநெல்லரிசி; எள், வெல்ல முதலியவை சேர்த்து உருட்டுவது உருண்டை. இதனைக் கவளம் என்பர். கவளம் கை மன்னும் எனக் கூட்டுக. செல்வர் மனேகளிற் பல்வகை யுணவுப் பொருள்களும் மணிபொன் ஆடை முதலிய பொருள் களும் ஐம்புலவின்பத்தைத்தரும் எல்லாப் பொருள்களும் பொருந்துதலால் சுவர்க்கத்தையும் வெறுப்பர் என்பது தோன்ற 'சுவர்க்கம் கைக்க' என்றார். கைத்தல் - வெறுத்தல்: கைக்க - வெறுக்க. சமயத்தலைவர் என்றது நால்வரையும் குறிக்கும். பொதுவாகக் கொள்வதும் பொருந்தும். (அ0)

புனலுண் முகிலும் பொழில்சேர் கனியுங்
கனருசி மேவுகழுக் குன்றே—அனக்குழிமுன்
குண்டோ தரற்குக் கொடுத்தபிரா னல்வேதம்
பண்டோ தரற்குப் பதி.

(இ - ள்.) புனல் உண் முகிலும் கனருசி மேவு - கடனீரையுண்டு மேலெழும் மேகங்கள் மின்னலுடன் பொருந்தும் (கழுக்குன்றே); பொழில் சேர் கனியும் கனம் ருசி மேவும் - பூஞ்சோலையிற் சேர்ந்த பலவகைப்பழங்களும் மிகுந்த சுவைபொருந்திய; கழுக்குன்றே-; குண்டோதரற்கு முன் அனக்குழி கொடுத்தபிரான் - குண்டோதரன் என் பவனுக்கு முற்காலத்தில் அன்னக்குழியையமைத்துக்

கொடுத்தவர் ஆகிய; நால்வேதம் பண்டு ஓது அரற்கு-நான்கு வேதங்களையும் ஆதியில் ஓதிய சிவபெருமானுக்கு; பதி - தலமாம்.

(வி - ம்.) கனருசி - மின்னல். கனம் - மிகுதி. ருசி - சுவை. மேகங்கள் மின்னலுடன் கூடி மழை பொழியும் வளமும், பொழில்கள் மிகுசுவைக்கனிகள் தரும் வளமும் பொருந்தியது கழுக்குன்றம் என்க. தடாதகைப் பிராட்டியார் திருமணப் படலத்திற் குண்டோதரன் வரலாறு காண்க. கடவுளால் ஓதப் பட்டது வேதம் என்பது நூல்வழக்கு "எழுதாக் கிளவி" என்பது அக்காரணத்தால் ஏற்பட்ட பெயர் என்பது. (அக)

நற்குலத்து வந்தோரு நாடுமணி வீதிகளுங்
கற்றளி யோவாக் கழுக்குன்றே—பொற்கழன்மேற்
கோவை யிடத்தான் குளிர்துளவற் காழிதந்தோன்
பாவை யிடத்தான் பதி.

(இ - ள்.) நல் குலத்து வந்தோரும் கற்று அளி ஓவா - நல்ல குடியிற் பிறந்த மக்கள் அனைவரும் பல நூல்களைக் கற்று அன்பு நீங்காத (கழுக்குன்றே); நாடும் அணி வீதிகளும் கல் தளி ஓவா - மாந்தர் உலாவும் அழகிய தெருக்களும் கல்லாற்சமைத்த கோயில்களை நீங்காத; கழுக்குன்றே-; பொன் கழல் மேல் கோவை இட தான் குளிர் துளவற்கு ஆழி தந்தோன் - பொன் போன்ற திருவடிமேற் கண்ணையிடந்து இட்டுப் பூசித்த திருமாலுக்குச் சக்கரத்தைத் தந்தவரும்; பாவை இடத் தான்-உமையை யிடப் பாகத்திருத்தியவரும் (ஆகிய சிவ பெருமான்); பதி - வாழும் தலம்.

(வி - ம்.) அளி - அன்பு, இரக்கம், அருள் என்ற பொருள் தரும் ஆதலின் எப்பொருளையும் இயைத்துக் கொள்க. அளி யில்லார் கற்றும் அறிவில்லார் எனக் காண்க. தெருக்களிற் பல கற்கோயில் அமைந்திருக்கும் எனச்சிறப்புக் காண்க. கோ - கண். கோ + ஐ = கோவை - கண்ணை இரண்டனுருபு சேர்ந்து நின்றது, கழன்மேற் கோவையிட எனக் கூட்டுக. குளிர் துளவன் - குளிர்ந்த துழாய்மாலை புனைந்தவன் (திருமால்) பாவை-ஓவியம்; சித்திரம். இது பாவை போன்றவள் என உவமையாகு பெயராய் ஈண்டு உமையாளை யுணர்த்தியது. பாவையை யிடப் பாகத்திலமைத்தவன் என்பது. (அஉ)

தங்கி வாழும் (கழுக்குன்றே); புண்ணியரும் பாசம் வினை கன்றுது அரிக்கும்-புண்ணியஞ் செய்தவரும் பாசத்தையும் வினையையும் தம்மை வருத்தாவாறு கெடுக்கின்ற; கழுக் குன்றே-; துன்றும் அன்பில் தாழ உரியார் தமக்கு அருள்வார்- நிறைந்த அன்பினுல் வணங்குவதற்கு உரிமை யுடையவர்க்குத் திருவருள் புரிவாரும்; வந்து எதிர்த்த வேழம் உரியார் - முன் வந்து எதிர் நின்ற யானையை யுரித்துத் தோலைப் போர்த்தவரும் ஆகிய சிவபெருமான்; விருப்பு - விரும்பி வாழும் இடமாம்.

(வி - ம்.) பொன் தாழ் - திருமகள் தங்கிய எனவும், பொன்கள் குவிந்து கிடக்கும் எனவும் பொருள் கூறுவதும் அமையும். பாசம் - அன்பு. வினை - தொழில். அரிக்கும் - கெடுக் கின்ற; நீக்குகின்ற. தாழவுரியார் என்பது, உண்மை யன்புடன் வணங்கும் உரிமைபெற்ற வழிவழி யடியாரை யுணர்த்தியது. தாருகா வனத்து முனிவர் வேள்வியில் வந்த யானை என்பதும் பகைத்துக் கொல்ல வந்த யானை என்பதும் தோன்ற "வந் தெதிர்த்த வேழம்" என்றார். (அச)

துன்னுமணஞ் செய்விப்போர் சூழா லயஞ்சமைப்போர்
கன்னிதா னஞ்சேய் கழுக்குன்றே—துன்னுசைவம்
நன்கூ ரகத்தன்பர் நாளு மறவாத
புன்கூ ரகத்தன் பொருப்பு.

(இ - ள்.) துன்னும் மணம் செய்விப்போர் கன்னி தானஞ் செய் - கூடுகின்ற திருமணஞ் செய்விக்கும் இரு பெருங் குரவோரும் கன்னிகையைத் தானமாக வரனுக்கு அளிக்கின்ற (கழுக்குன்றே); சூழ் ஆலயம் சமைப்போர் கல் நிதானஞ் செய் - சுற்றிய திருக்கோயில் அமைப்பவர் திருப்பணிக்குரிய கற்களைச் சமம் (நேர், ஒழுங்கு) ஆகச் செய்கின்ற; கழுக்குன்றே-; துன்னு சைவம் நன்கு ஊர் அகத்து அன்பர் நாளும் மறவாத - சைவக் கொள்கை நன்ருகப் பதிந்து நிறைந்த நெஞ்சமுள்ள அடியார்களை எஞ்ஞான்றும் மறவாத; புன்கூர் அகத்தன் - திருப்புன் கூர் என்ற தலத்திலிருப்பவர் ஆகிய சிவபெருமான்; பொருப்பு - தங்கும் மலையாம்.

(வி - ம்.) செய்விப்போர் என்றது, பெற்றோரை யுணர்த்தியது; கன்னியைத் தானமாக வழங்குவோர் அவரே யாதலின். ஆலயஞ் சமைப்போர் ஈண்டுச் சிற்பிகள். கற்களை நிதானமாக வைத்து நிறுத்துவர் என்க. கல் + நிதானம்=கன்னிதானம் என்றாயது. நன்கு+ஊர்=நன்கூர். ஊர் - ஏறிய. சைவம் ஏறிய அகம். அகம் - நெஞ்சு. அகம் - இடம். (அரு)

சாலச் சிவகதையாற் சைவர்நமன் கோளையரன்
காலங் கழிக்குங் கழுக்குன்றே—மாலெனுமோர்
அஞ்சரத்தின் றேலா ரணிமுப் புரமெரித்தோர்
குஞ்சரத்தின் றேலார் குடி.

(இ - ள்.) சைவர் சாலச் சிவகதையால் காலம் கழிக்கும் - சைவக் கொள்கையுடையோர் மிகவும் சிவ கதையைக் கற்றும் கேட்டும் தமக்குரிய காலத்தைக் கழிக்கின்ற (கழுக்குன்றே); நமன்கோளை அரன் கால் அங்கு அழிக்கும் - இயமனால் நேருந் துன்பங்களைச் சிவபெருமான் திருவடி அவண் நேராது நீக்குகின்ற; கழுக்குன்றே-; மால் எனும் ஓர் அம் சரத்தின் தோலார் அணி முப்புரம் எரித்தார் - திருமால் என்ற ஓர் அழகிய பாணத்தால் எவர்க்கும் தோலாதவர் ஆகிய அசுரர்களது வரிசையாகிய மூன்று புரங்களையும் எரித்தவரும்; குஞ்சரத்தின் தோலார் - யானைத் தோலைப் போர்த்தவரும் (ஆகிய சிவபெருமான்); குடி - குடியிருக்கும் ஊராம்.

(வி - ம்.) சால - மிக. மிகுதியாகிய காலம் சிவ கதையாற் போக்குவர் என்பது. சிவபெருமான் திருவடியானது இயமன் துயரத்தை நீக்கிச் சிவபதவியடையச் செய்யும் அங்கு வாழ்வாரை என்பது கருத்து. தோலார் என்பது முப்புரத்தவுணர்களைக் குறிப்பாலுணர்த்தியது. தோலார் முப்புரம் எனக் கூட்டுக. பிரமன் திருமாலாலும் வெல்லப்படாதவர் அவ்வவுணர் என அவர் பெருமை விளங்கியது. (அசு)

பரந்திழியும் மஞ்சனத்துப் பண்வீணை மாதர்
கரந்தைவரு நற்கழுக் குன்றே—புரந்தீ
யிடப்பூவை யத்தன் றிவர்ந்தோ னுமையாம்
மடப்பூவை யத்தன் மனை.

(இ - ள்.) பரந்து இழியும் மஞ்சனத்து மாதர் கரந்தைவரும் - பரவி வழியும் திருமஞ்சனநீரில் அழகிய சிவ கரந்தை வருகின்ற (கழுக்குன்றே); பண்வீணை மாதர் கரம் தைவரு - இசைபாடுதற்குரிய வீணையை மகளிர் கரத்தால் தடவுகின்ற; கழுக்குன்றே-; புரம் தீஇட பூ வையத்து அன்று இவர்ந்தோன் - திரிபுரந் தீக்கொளுவு தற்குப் பூமியாகிய தேரில் முற்காலத்தே ஏறியவரும்; உமை ஆம் மடம் பூவை அத்தன் - உமையாகிய இளமையுடைய நங்கையை இடப்பாகத்தில் இருத்தியவரும் ஆகிய சிவ பெருமான்; மனை - வாழுமனையாம்.

(வி - ம்.) மஞ்சனம் - நீராட்டல், இது நீரினை யுணர்த்தி யது. நீரில் கரந்தை வரும் என்க. சிவ கரந்தை சிவபெருமான் திருமுடியில் இருக்கும் என்பதும் நீராட்டும்போது அந்நீருடன் வரும் என்பதும் குறிப்பால் அறிக. மாதர் - அழகு. மாதர் - பெண்கள். தைவரும் - தடவும், பூவையம் - பூமியாகிய தேர். (அஎ)

சேப்புமன்னர் முற்றத்துத் தேற்ருர் மலர்ச்சோலை
கப்பந் தருவார் கழுக்குன்றே—சேப்பரிய
மானப் பணிவான் மதிவெண் டலேயோடு
வானப் பணிவான் மனை.

(இ - ள்.) செப்பும் மன்னர் முற்றத்து தேற்ருர் கப்பம் தருவார் - சொல்லப்படும் வேந்தர் அரண்மனை முன்றிலிற் பகை மன்னர் வந்து பணிந்து இறைப்பொருள் தருவார் (கழுக்குன்றே): மலர் சோலை கப்பு அம் தருவார்- பூஞ்சோலையிற் கொம்புகளும் அழகிய மரங்களும் நிறைந் திருக்கும்; கழுக்குன்றே-; செப்பு அரிய மானம் பணிவால் மதி வெண் தலையோடு வான் அப்பு அணிவான்-சொல்லற் கரிய பெருமைவாய்ந்த பாம்பும் வெள்ளிய பிறையும் வெள்ளிய தலையோடும் வான் கங்கை நீரும் ஆகிய இவற்றை யணியாகப் புனைந்தவர் (ஆகிய சிவபெருமான்); மனை - தங்கும் மனையாம்.

(வி - ம்.) தேற்ருர் - பகைவர். தேற்ருர் கப்பந்தருவார் எனவும், மலர்ச்சோலை கப்பந்தருவார் எனவும் சிலேடை வந்தது

காண்க. மன்னர் முற்றத்துத் தேற்றார் கப்பந்தருவார் எனக் கழுக்குன்றத்தைச் சிறப்பித்தது உலக நடையிறந்த புகழ்ச்சி. உயர்வு நவிற்சி யணியெனக் கொள்க. வான்மதி - விண்ணிற் செல்லுமதி எனினும், வான்அப்பு - பெருமை வாய்ந்த நீர் எனினும் பொருந்தும். (அஅ)

சொற்பெரிய பாந்தள் சோரிகால மாரிமின்னார்
கற்புழை வீறுங் கழுக்குன்றே—விற்கதிர்கள்
விண்பா வினன்பல் விழவடித்தா ரையடிகள்
வெண்பா வினன்பர் விருப்பு.

(இ - ள்.) சொல் பெரிய பாந்தள் மின் ஆர்கல் புழை வீறும் - பெரியவெனச் சொல்லப்பட்ட பாம்புகள் ஒளி வாய்ந்த கற்குகைகளில் தனித்துக் கிடக்கும் (கழுக் குன்றே); சொரி காலம் மாரி மின்னார் கற்பு உழை வீறும் - பொழிகின்ற கால மழையானது மகளிர் கற்பினாற் பெருமை பெறும்; கழுக்குன்றே-; வில்கதிர்கள் விண்பா இனன் பல் விழ அடித்தார் - ஒளிக்கதிர்கள் வானிற் பரவச் செய்யும் சூரியன் பற்கள் உடையும்படி அடித்தவரும்; ஐயடிகள் வெண்பாவின் அன்பர் - ஐயடிகள் காடவர்கோன் பாடிய வெண்பாவில் அன்பு வைத்தவரும் ஆகிய சிவபெருமான்; விருப்பு - விரும்புந் தலமாம்.

(வி - ம்.) மலைப்பாம்புகள் குகைகளிற் கிடக்கும் என்பதும், மகளிர் கற்பிற் சிறந்தவராதலின் திங்கள் மும்மாரிபெய்து செழிக்கும் என்பதும் அத்தலத்தின் சிறப்பாம். "கற்பினின்றன காலமாரியே" என்ற கவியின் கருத்தும் உணர்க. "தெய்வந்...பெய்யெனப் பெய்யு மழை" என்பதும் அது. தக்கன் மகத்தினையழிக்க வீரபத்திரர் சென்றபோது சூரியன் பல்லைத் தகர்த்த வரலாற்றைக் குறித்தது. சேத்திரக்கோவை என்ற நூலை யுணர்த்தியது வெண்பா என்பது. (அக)

புரிவரும்யோ கத்தார் புரவலர்க ளங்ந
கரிமா விழைகழுக் குன்றே—எரிபாம்பார்
கையா னரையானன் காமுகனேன் றேன்றேண்டு
கையா னரையானன் காப்பு.

(இ - ள்.) புரிவரும் யோகத்தார் கரிமாவிழை - செய்தற்கரிய யோகப் பயிற்சி செய்வோரும் கரிமா என்ற சித்தியைப் பெற விரும்புகின்ற (கழுக்குன்றே); புரவலர்கள் கரிமாவிழை - மன்னர்கள் மதயானையையும் குதிரையையும் ஏறுவதற்கு விரும்புகின்ற (கழுக்குன்றே) அந்நகரி மாவிழை - அத்தலத்தினைத் திருமகள் விரும்புகின்ற கழுக்குன்றே-; எரிபாம்பு ஆர் கையான் அரையான் - மழுவாகிய நெருப்பினையும் பாம்பினையும் முறையே இடக்கரத்தினும் இடையினும் தரித்தவரும்; நான் காமுகன் என்று என் தொண்டு கையான் - நான் தூர்த்தன் என்று கருதி எனது அடிமைத் திறத்தை வெறுக்காதவரும்; நரை ஆனுன்-வெள்ளேற்றினை யூர்தியாகக் கொண்டவரும் ஆகிய சிவபெருமான்; காப்பு - காவலாகக் கொள்ளும் இடமாம்.

(வி - ம்.) இப்பாடல் முதல் 95 வரையுள்ள பாடல்கள் ஆறும் முப்பொருட் சிலேடை. யோகர், மன்னர், நகரி என்ற முப்பொருட்கும் ஒப்புமை கூறியுள்ளமையால். கரிமா: எட்டுச் சித்திகளுள் ஒன்று; அணிமா, மகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம் ஈசத்துவம், வசித்துவம் என்பன அவற்றின் பெயர்கள். ஒரு யோகியை எடுத்தால் யானையைப் போலக் கனமாக அவனுடல் இருப்பது கரிமா என்பர். யோகநூலுட் காண்க. மா - குதிரை. மா - திரு (இலக்குமி). காமுகன் - கழி பெருங் காமங் கொண்டோன். கையான் - வெறுக்காதவன். என்னை யடிமையாக் கொண்டு அருள்புரிந்தவன் என்பது. பின்னிரண்டடியும் யமகம் காண்க. (கூ0)

வளத்தி லறத்தோர் மதனன் கரிநி
களத்திர மன்னுகழுக் குன்றே—அளக்கரும்விண்
மண்டேரி யானுன் வளர்கோடியோ னேற்றியிற்கண்
மண்டேரி யானுன் மனை.

(இ-ள்.) வளத்து இல்லறத்தோர் நி களத்திரம் மன்னும் - செல்வத்துடனமைந்த இல்லற வாழ்க்கையுடையார் நிலைபெற்ற மனைவியைப்பொருந்திய (கழுக்குன்றே); மதனன் நி கள் அத்திரம் மன்னும் - மன்மதன் மிக்க தேனுடைய மலரம்புகளைப் பொருந்திய (கழுக்குன்றே); கரி நிகளம்

திரம் மன்னும் - மதயானைகள் சங்கிலிகளை நிலைமையாகப் பூண்டிருக்கும்; கழுக்குன்றே-; அளக்க அரும் விண்மண் தெரியான் - அளப்பதற்கரிய விண்ணுலகத்திற்கும் மண்ணுலகத்திற்கும் எட்டாதவரும்; ஆன்வளர் கொடியோன் - விடையுருவம் தங்கிய கொடியுடையவரும்; நெற்றியின்கண் மண்டு எரிஆனன் - நுதலின் நெருங்கிய நெருப்பு விழியுடையவரும் (ஆகிய சிவபெருமான்); மனை - வாழும் இடமாம்.

(வி - ம்.) இல்லறத்தோர், மதனன், கரி இம்மூன்றுக்கும் சிலேடையமைந்துள்ளது காண்க. நி என்பது உறுதி, மிகுதி யுணர்த்தும் ஓர் எழுத்து. களத்திரம் - மனைவி. கள் + அத்திரம் - தேன் பொருந்தும் அம்பு; இது மலர்ப்பாணம்; இதனை மன்மதன் எடுத்துத் தொடுத்து விடுத்துக் காதல் மிகுவிப்பான் அங்நகர் மாந்தர்க்கு எனவும் அதனால் இன்ப வாழ்க்கை யுடையார் எனவும் சிறப்பு விளங்கிற்று. நிகளம் - யானைச் சங்கிலி. அளக்கர் எனக் கொண்டு, கடலும் விண்ணும் மண்ணும் தெரியான் எனினுமாம். இவற்றுக்குள் அடங்கிய உருவம் அன்று; கடந்த பேருருவம் என்பது கருத்து. (கக)

மருவுபொழின் மாதர்விழி வாசத் தடநி
கருவரி காட்டுகழுக் குன்றே—வருநரியாம்
மாப்பினா கத்தான் வரமுன் பரிமேற்சேன்
மாப்பினா கத்தான் வரை.

(இ - ள்.) மருவு பொழில் நி கருவரி காட்டு - பொருந்திய பூஞ்சோலைகள் மிகுந்த கரிய வண்டுகளைக் காட்டுகின்ற (கழுக்குன்றே); மாதர் விழி நி கரு அரிகாட்டு - மகளிர் விழிகள் உறுதியான பெரிய செவ்வரிகளைக் காட்டும் (கழுக்குன்றே); வாசம் தடம் நிகர் உவரி காட்டும் மலர் - வாசனை பொருந்திய பொய்கைகள் தமக்குக் கடலை உவமையாகக் காட்டும்படி தோன்றும்; கழுக்குன்றே-; வரும் நரிஆம் மா பின் ஆக தான் முன் பரிமேல் செல் - வருகின்ற நரியாகிய பரிகள் எல்லாம் பின்வரத் தாம் முன் செல்லும் ஒரு பரிமேல் ஏறிச்சென்ற; மா பினாகத்தான் - பெருமை பொருந்திய பினாகம் என்ற வில்லுடையவர் ஆகிய சிவபெருமான்; வரை - வாழும் மலையாம்.

(வி - ம்.) பொழில். மாதர்விழி, தடம் என்ற முப்பொருட்கும் ஒப்புமை காண்க. கருமை - கரிய நிறம். கருமை - பெருமை. கருவரி - இருள் என்ற பொருளையும் தரும். பொழில் இருளைக் காட்டும் எனக் கொள்ளினும் அமையும். மணிவாசகப் பெருமான் பொருட்டு நரியைப் பரியாக்கி அப்பரியொன்றில் அமர்ந்து முன் சென்ற வரலாற்றினைக் காட்டியது இது. மா - குதிரை; பெருமை. பிஞகம் - சிவபெருமான். (கூஉ).

அனமருவு வாவி யணிவீதி சான்றோர்
கனவிரத மேவுகழுக் குன்றே—புனையும்
விதிதலைக் கையான் விரும்பார் பிறவி
போதிதலைக் கையான் புரம்.

(இ - ள்.) அனம் மருவு வாவி கனவிரதம் மேவு - அன்னப்புள் அமர்ந்துறையும் பொய்கைகள் நீர் நிறைந்துள்ள (கழுக்குன்றே); அணி வீதி கனம் இரதம் மேவு - அழகிய தெருக்கள் பெரிய தேர்கள் பொருந்திச் செல்கின்ற (கழுக்குன்றே); சான்றோர் கனம் விரதம் மேவு - நல்லோர் உயர்ந்த விரதத்தைக் கொண்டு வாழ்கின்ற; கழுக்குன்றே-; விதி தலை புனையும் கையான்—பிரமனது தலையோடு விளங்கும் கரமுடையவரும்; விரும்பார் பிறவி பொதிதலை கையான் - தம்மை விரும்பாத தீயோர் பிறவியிற் சுழல்வதை வெறுத்து நீக்காதவரும் (ஆகிய சிவபெருமான்); புரம் - வாழும் நகராம்.

(வி - ம்.) வாவி, வீதி, சான்றோர் என்ற முப்பொருளுக்கும் கனவிரதம் மேவு என்ற சொற்றொடர் பொருந்தியது காண்க. கனவிரதம் - நீர். கனம்+இரதம்=கனவிரதம். கனம் விரதம்- கன விரதம். கனம்-பாரம். புனையும் கையான் எனக்கூட்டுக. தலையோடுகைக்குப் பூண்போல அமைந்துள்ளது. ஆதலின் புனையும் என்றார். பொதிதல்+ஐ - பொதிதலை. இது பிறவியை மேற்கொள்வது என்ற பொருளைத் தந்தது. (கூக)

விரவுபொழி லன்னமிடு மெல்லிய ரீவோர்
கரவீர மன்னுகழுக் குன்றே—விரவிவரு
மாலா நடத்தினன் வாதுசெயுங் காளிக்குத்
தோலா நடத்தினன் சூழ்வு.

(இ-ள்.) விரவு பொழில் கரவீரம் மன்னு - பரந்த பூஞ்சோலைகள் அலரி மலரையும் பொருந்திய (கழுக்குன்றே); அன்னம் இடு மெல்லியர் கரம் ஈரம் மன்னு - விருந்தினர்க்கு அன்னம் இடுகின்ற மங்கையர் செங்கைகள் ஈரம் புலராது பொருந்திய (கழுக்குன்றே); ஈவோர் கரவு ஈர மன்னும் - கொடை வள்ளல்கள் நெஞ்சத்தில் வஞ்சகத்தை நீக்கிக் கொடுத்து நிலைபெறும்; கழுக்குன்றே-; விரவி வரும் மால் ஆ நடத்தினன் - சேர்ந்துவரும் திருமால் என்ற விடையை ஊர்ந்து வந்தவரும்; வாது செயும் காளிக்கு தோலா நடத்தினன் - வாது புரிந்த காளியுடன் நடித்துத் தோலாமல் வெற்றியடைந்த ஆடலுடையவரும் ஆகிய சிவபெருமான்; சூழ்வு - சூழ்ந்துறையும் இடமாம்.

(வி-ம்.) கர வீரம் - அலரி; செவ்வலரி வெள்ளலரி என்ற மலர்களை யுணர்த்தும். இஃது குவியாது அலர்ந்தவாறே யிருந்து இதழ்கள் வாடியுதிர்வதால் அலரி எனப் பெயர் பெற்றது. கையீரம் புலராது விருந்தினர்க் கிடுவதே வேலை மெல்லியர்க்கு: கரவு-வஞ்சம்; களங்கம் உள்ளொன்று புறமொன் றுரைத்தல். ஈர - பிளக்க: அறுக்க. நீக்கி எனப் பொருள்கொண்டு கரவினை நீக்கி மன்னும் என்க. மால்+ஆ=மாலா ஆ என்பது பசுவின் பொதுப் பெயர்; இங்குக் காளையைக்காட்டியது. மாலாகிய காளையை நடத்தியவன் என்க. ஊர்த்துவ தாண்டவம் ஆடிய போது காளி அவ்வாறுட இயலாது நாணித்தோற்றுள் என்பதை யுணர்த்தியது "தோலா நடத்தினன்" என்றது. (கூச)

விரும்புமலர் வெண்முத்தம் வேந்தர் சமரிற்
கரும்புண் மலிகழுக் குன்றே—அரும்புதன
மாவடுவ ருந்துவார் வானீர் முடியரன்பர்
மாவடுவ ருந்துவார் வாழ்வு.

(இ-ள்.) விரும்புமலர் கரும்புள் மலி - யாவரும் விரும்பும் மலர்களில் வண்டுகள் நிறைந்திருக்கும் (கழுக்குன்றே); வெண்முத்தம் கரும்பு உள்மலி - வெள்ளிய முத்துக்கள் கரும்புக்குள்ளிருந்து வெடித்து நிறையும் (கழுக்குன்றே); சமரில் வேந்தர் கரும்புண் மலி-போர்க்குச் சென்ற மன்னர் உடலிற் பெரிய புண்கள் நிறைந்து தோன்றும்; கழுக்குன்றே-; அரும்பு தனம் மாவடுவர் -

உமை மார்பில் முளைத்த கொங்கைகள் அழுந்திய பெரிய தழும்புடையவரும்; உந்துவார் வான் நீர் முடியர் - நீண்டு செல்லும் கங்கையாறு தங்கும் சடைமுடி யுடையவரும்; அன்பர் மாவடு அருந்துவார் - அடியார் அளித்த மாவடு வாகிய கறியினை யுண்டவரும் (ஆகிய சிவபெருமான்); வாழ்வு - வாழும் தலமாம்.

(வி - ம்.) மலர் முத்தம் வேந்தர் என்ற முப்பொருட்கும் கரும்புண்மலி என்ற சொற்றொடரால் ஒப்புரைக்கப்பட்டது காண்க. சமரில் வேந்தர் என மாற்றுக. கரும்புள் - வண்டு. கருமை+புள். கரும்புள்-பெருமையாகிய பறவை எனப் பொருள் கொண்டு அன்னம் மலரின் மன்னும் என்னினும் அமையும். முத்துப் பிறக்கும் இடங்களிற் கரும்பும் ஓரிட மாதலின். கரும்பு என்றார். வளைத்தழும்பும் முலைத்தழும்பும் கொண்டவர் என்பது, தழுவக்குழைந்த படலம் (காஞ்சிப்) காண்க. அன்பர் என்றது அரிவாட்டாய நாயனாரை. (சுகு)

விளங்கு மதிபூ விடப்பாம் பரனார்
களங்க முறுகழுக் குன்றே—துளங்கலிலாக்
கல்லா லடிப்பிரியான் காணக் கதிதந்த
கல்லா லடிப்பிரியான் காப்பு.

(இ - ள்.) விளங்கும் மதி களங்கம் உறும் - ஒளி செய்யுஞ் சந்திரன் களங்கம் பொருந்தும் (கழுக்குன்றே); பூகள் அம் கம் உறும் - மலர்கள் எல்லாம் தேனும் அழகும் நீரும் பொருந்தும்; (கழுக்குன்றே); விடம்பாம்பு களங்கம் உறும் - நஞ்சினையுடைய பாம்பு வஞ்சகம் கொண்டிருக்கும் (கழுக்குன்றே); அரனார் களம் கம்உறும் - சிவ பெருமான் கண்டத்தில் மேகம்போலக் கருநிறம் அமைந்திருக்கும்; கழுக்குன்றே-; துளங்கல் இலா கல்லால் அடிப்பு இரியான் - மனக் கலக்கமில்லாத கல்லால் எறிவதை விடாது செய்தவராகிய சாக்கிய நாயனார்க்கு; காண கதிதந்த-யாவரும் காணும்படி முத்தியையளித்த; கல் ஆல் அடி பிரியான் - கல்லால மரத்தின் அடியைவிட்டுப் பிரியாதுறைபவரும் (ஆகிய சிவபெருமான்); காப்பு-காவல் செய்யும் இடமாம்.

(வி - ம்.) இது நான்கு பொருட்குச் சிலேடை கூறியது. மதி, பூ, பாம்பு, அரனுர் இவை. "களங்கமுறு" என்ற சொற்றொடர் இவற்றைப் பொருத்தியது. அடிப்பு இரியான் - அடித்தலினின்றும் இரியாதவன் எனப் பொருள் பட்டது. அடித்தற்றொழில் செய்வதிற் பின்னிடாதவன்; அதனைச் செய்தே நின்றவன் என்று குறிப்புக் கொள்க. இறுதியடி கல்லானிழலமர்ந்து நால்வர்க்கு அற முரைத்த வரலாற்றை யறிவித்தது. (கூசு)

பெட்கும் பொழின்மாடம் பேதையர்க ணுட்டமிடை
கட்கந்தந் துன்னுங் கழுக்குன்றே—நட்புறுகோ
பாலன் றுதித்தார் பசிய நறுவேயின்
பாலன் றுதித்தார் பதி.

(இ - ள்.) பெட்கும் பொழில்கள் கந்தம் துன்னும் - யாவரும் விரும்பும் நந்தவனம் தேனும் மணமும் செறிந்திருக்கும் (கழுக்குன்றே); மாடம் கட்கு அந்தம் துன்னும் - மாளிகைகள் காண்பவர் கண்களுக்கு அழகு நிறைந்து தோன்றும் (கழுக்குன்றே); பேதையர்கள் நாட்டம் கட்கம் தந்து உன்னும் - மங்கையர் விழிகள் வாளாயுதத்தை உவமையாகத் தந்து நினைக்கப்படும் (கழுக்குன்றே); இடை கட்கு அம் தந்து உன்னும் - அம் மங்கையர் மருங்குல் இடத்திற்கு அழகிய நூலினை ஒப்பாக நினைக்கப்படும்; கழுக்குன்றே-; நட்புஉறு கோபாலன் துதித்தார்-நட்புடையார் ஆகிய திருமாலாற் றுதிக்கப்பட்டவரும்; பசிய நறு வேயின் பால் அன்று உதித்தார் - நல்ல பச்சை மூங்கில் முளையில் முற்காலத்துத் தோன்றியவரும் (ஆகிய சிவ பெருமான்);பதி - வாழும் தலமாம்.

(வி - ம்.) இதுவும் நான்கு பொருட் சிலேடை யமைந்தது. பொழில், மாடம், பேதையர் கண், அவர் இடை என்ற நான்கு பொருள்கள். கட்கம் - வாள்; இஃது கண்ணுக்கு உவமையாம். கட்கத்தினை உவமையாகத் தந்து (காட்டி) உன்னுவர் என்க. புலவர் உன்னும் எனக் கூட்டுக. உன்னும் என்பது செயப்பாட்டு வினையாய்ப் பொருள்பட்டது. கண்+கு=கட்கு; கண்ணுக்கு. அந்தம்என மாடத்திற்குப் பொருள் கொள்க. இடைக்கு கண்+கு =கட்கு-இடத்திற்கு. இடையின் இடத்திற்கு உவமை, அம்தந்து

உன்னும் - அழகிய நூலென்று உன்னப்படும் என்க. நாட்டம்-கண். கோபாலன் - திருமால். துதித்தார் - துதிக்கப்பட்டவர். மூங்கிலில் தோன்றியது நெல்லைத் தலத்தும் பாசூர்த்தலத்தும். இதனை அவ்வத்தல புராணத்துட் காண்க. (கூஎ)

சிங்கார மார்குவடு சிற்பரனுர் தோள்கைகண்டங்
கங்காள மன்னுங் கழுக்குன்றே—சிங்கியுண
நாகைக்கா ரோணத்தார் நான்முகத்தார் நாடருஞ்சீர்
நாகைக்கா ரோணத்தார் நாடு.

(இ - ள்.) சிங்காரம் ஆர் குவடு கங்கு ஆள மன்னும் - சிங்காரம் பொருந்திய மலையுச்சிகளைக் கழுகுகள் இடமாகக் கொண்டு தங்கும் (கழுக்குன்றே); சிற்பரனுர் தோள் கங்காளம் மன்னும் - சிவபெருமான் மார்பில் முழு வெலும்பு மாலையாகக் கிடக்கும் (கழுக்குன்றே); கை கம் காளம் மன்னும் - அப்பெருமான் கரத்திற் கபாலமும் சூலமும் தங்கும் (கழுக்குன்றே); கண்டம் கம் காளம் மன்னும் - அப்பெருமான் கண்டத்தில் கடல் நீரில் தோன்றிய நஞ்சின் கருமை நிலைபெற்றிருக்கும்; கழுக்குன்றே-; சிங்கி உண நாகைக்கார் - நஞ்சுண்ணுங்கால் நாவிற் கசப்புத் தோன்ருதவரும்; ஓணத்தார் நான்முகத்தார் நாடு அருஞ்சீர் - திருவோண நாட்குரிமையுடையவராகிய திருமாலும் நான்கு முகமுடைய பிரமனும் தேடியும் அறியப்படாத புகழ் பெற்ற; நாகைக் காரோணத்தார் - திருநாகைக் காரோணம் என்னுந் தலத்தில் வீற்றிருப்பவரும் ஆகிய சிவபெருமான் ; நாடு - விரும்புந் தலமாம்.

(வி - ம்.) இதுவும் நாற்பொருட் சிலேடை. ஆயினும் சிற்பரனுர் தோள், கை, கண்டம் என்ற மூன்றும் ஒரு பொருளினுறுப்புக்களே. திருக்'கழுக்குன்றம் ஆதலின் அம்மலைக் குவடுகள் கழுகுகளே தங்கி ஆளப்பொருந்தின. இருகழுகுகளேயன்றிப் பல கழுகுகளும் வந்து தங்கும் என்பது குறிப்பு. கங்காளம் - முழு வெலும்பு. இது தலைமாலை யணிந்ததைக் குறித்தது. கம் - தலை. இது பிரமன் தலையோட்டினைப் பிச்சைக் கலமாகக் கொண்டது. காளம் - சூலப்படை; இதுவுங் கரத்தில் இருப்பது. கண்டத்தில் இருப்பது காளம். காளம் - நஞ்சு. கம் - நீர். கம் + காளம் = கங்காளம் - நீரின்கட்டோன்றிய

காளம் என ஏழனுருபும் பொருளும் விரித்துக் கொள்க. சிங்கி-நஞ்சு. கைப்பு - கசப்பு. சுவையுள்ள உணவுபோல நஞ்சினை யுட்கொண்டவர் என்க. (கூஅ)

தொண்டர்மடங் கோகனகஞ் சூழ்கயஞ்சேல் வெற்புமின்னார்
கண்டனந் துன்னுங் கழுக்குன்றே—எண்டருமா
கம்பத் தடியானான் காணவருள் கச்சியே
கம்பத் தடியானான் காப்பு.

(இ - ள்.) தொண்டர் மடம் கண்டு அனம் துன்னும் - சிவனடியார்கள் தங்கும் பொருட்டுக் கட்டப்பட்ட மடங்களில் கற்கண்டும் சோறும் முதலாகிய உணவுப் பொருள்கள் நிறைந்திருக்கும் (கழுக்குன்றே); கோகனகம் கண்டு அனம் துன்னும் - தாமரை மலர்களைக் கண்ட அன்னப் பறவைகள் தங்கும் (கழுக்குன்றே); சூழ்கயம் கண்டல் நந்து உன்னும் - சுற்றியுள்ள குளங்கள் தாழையை யும்சங்குகளையும் நினைப்பிக்கும் (கழுக்குன்றே); சேல் வெற்பு மின்னார் கண் தனம் துன்னும் - கெண்டைமீனும் மலையும் முறையே மங்கையர் விழிகளையும் கொங்கைகளையும் ஒத்து நெருங்கும்; கழுக்குன்றே-; எண் தரும் ஆகம் பத்து அடியான் நான் காண - எண்ணப்படும் பிறப்புப் பத்து எடுத்த அடியான் ஆகிய திருமாலும் யானும் காணும் பொருட்டாக; அருள் கச்சியே கம்பத்து அடி ஆனான் - திருவருளாற் காஞ்சிபுரத்தில் ஒருமாவின் கீழ்த் திருவுருவம் கொண்டவர் ஆகிய சிவபெருமான்; காப்பு - காவல் கொள்ளும் இடமாம்.

(வி - ம்.) இதுவும் நான்கு பொருட் சிலேடை ஆயினும் மடம், கோகனகம், கயம் என்ற மூன்றிற்குக் "கண்டனந் துன்னும்" என்ற சொற் பொருந்தியதுபோல நான்காவது பொருட்குப் பொருந்தாது வேறுபட்டது. இஃது ஒரு வகைச் சிலேடை என எண்ணுக. சேல் வெற்பு மின்னார் கண்டனந் துன்னும் என்பது ஒருதனிச் சிலேடை. அன்னம் என்பது அனம் எனத் தொகுத்தல் விகாரம் ஆயிற்று. அனம் - சோறு: அன்னப் புள். அடியான் - அடிமையாயவன். ஆகம்பத்து என்ற குறிப்பினல் அது திருமாலை யுணர்த்தியது. ஆகம் உடல். அடியேனும் நானும் என உம்மை விரித்துக்கொள்க. எம்

பொருட்டாகவே கச்சியேகம்பத்தடியில் இருந்து காட்சியளிக்கின்றான் என்பது கருத்து. (௯௯)

சந்தங் கடம்பாவி சார்சே வகம்வீதி
கந்தரங்க மாறுக் கழுக்குன்றே—மைந்தனஞ்
ஞானத் தினிப்பார் நணுகா தருள்பாணர்
கானத் தினிப்பார் களிப்பு.

(இ - ள்.) சந்தம் கடம்பு கந்தர் அங்கம் மாறு - அழகிய கடம்ப மலர்மாலைகள் முருகர் திருவுருவத்தில் நீங்காத (கழுக்குன்றே); ஆவிகம் தரங்கம் மாறு - தடாகங்கள் தண்ணீரும் அலையும் நீங்காத (கழுக்குன்றே); சார் சேவகம் கந்து அரங்க மாறு - சார்ந்த யானைகள் துயிலிடம் கட்டுத்தறிகள் அழிந்து நீங்காத (கழுக்குன்றே); வீதிகந்து அரங்கம் மாறு - தெருக்கள் தூண்களையுடைய அரங்கம் நீங்காமல் அமைந்த; கழுக்குன்றே-; மைந்தன் அஞ்ஞானத்து இனி பார் நணுகாது அருள் - சிறுவனாகிய அடியேன் அறியாமையால் இனிமேற் பிறப்பதற்குப் பூமியை அணுகாதவாறு திருவருள் புரிந்த; பாணர் கானத்து இனிப்பார் - திருநீல கண்ட யாழ்ப்பாணர் இன்னிசைச் சுவையின் இனிமை யேற்றவர் ஆகிய சிவ பெருமான்; களிப்பு - மகிழ்ச்சிக்குரிய மனையாம்.

(வி - ம்.) இதுவும் நான்கு பொருட் சிலேடை யமைந்தது. கடம்பு, ஆவி, சேவகம், வீதி என்ற நாற்பொருட்கும் "கந்தரங்க மாறு" என்ற சொற்றொடர் பிரிந்து பொருடந்து நின்றது. ஆவி - பொய்கை; தடாகம். சேவகம் - யானை துயிலும் இடம்; யானைக்கூடம். சேவகத்திற்கு, கந்து அரங்க மாறு - கட்டுத் தறியை யானைகள் இழுத்துக்கெடுக்கவும் அது நீங்காது நிற்கும் என விரித்துப் பொருத்துக. தெருவில் அரங்கம் மாறுது திகழும் என்க. கந்தினையுடைய அரங்கம் என இரண்டனுருபு விரிக்க. அரங்கம் - ஆடலரங்கு, மன்றம் இவற்றை யுணர்த்தும். மைந்தன் என்றது "அப்பனீ" மைந்தன் நான் எனத் தன்னைக் குறித்ததாகக் கொள்க. அஞ்ஞான முடையேன் எனினும் அவனருளால் அவனை வணங்கும் என்னை யினிப் பிறவியின்கண் அழுத்தான் என்ற துணிவுதோன்ற "பார் நணுகாதருள்" என்றார். (க00)

திருக்கழுக்குன்றச் சிலேடை வெண்பா முற்றும்.

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்கஎண்]

உ

திருச்சிற்றம்பலம்

# நெல்லைச் சிலேடை வெண்பா

## மூலமும் குறிப்புரையும்

★

ராவ் ஸாஹிப்

வெ ப சுப்பிரமணிய முதலியார், ஜி பி வி ஸி

★

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

1/140, பிரகாசம் சாலை, சென்னை-1

1976

வெள்ளகால் பழனியப்ப சுப்பிரமணிய முதலியார் (1857)

© THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம் திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : கூசா

இரண்டாம் பதிப்பு : சூன் 1923
மறுபதிப்புகள் : பிப்ரவரி 1964; ஏப்பிரல் 1976.



# NELLAIC CILEDAI VENBA

திருவரங்கனுர் அச்சகம், சென்னை - 600 013. (I/1)

## பதிப்புரை

நெல்லைச் சிலேடை வெண்பா என்னுமிது தமிழ் பயில்வார்க் கெல்லாம் எளிதிலே திறமை மிகுத்துத் தரத் தகுவதாகும். தமிழிலக்கியத்திற் போதரும் தமிழ்ச் சொற்களுக்குந் தமிழச் சொற்றொடர்களுக்கும் எளிதிலே பொருளறியும் ஆற்றல் இதைப்போன்ற சிலேடை வெண்பாக்களைப் பயின்றறிவதினாலே திறம்பட விளைவதாகும். இச் சிலேடை வெண்பா சிலேடைப் பொருள் தருவதில் மிக்க இடர் விளைக் காது, மலைவும் அசைவு மின்றிப் பொருள் நேருவார்க்கு எளிதாகவே யுள்ளது. அது தரும் பொருள் இனிமையும் வியப்பும் உடையதாகும்.

ஆகவே இந்நூல் தமிழ்பயிலு மாணவரையும் பிறரையும் நோக்கி அவர் தம் பயன் கருதி எம்மாற் பதிப்பிக்கப்பட்டது. இதற்கு முன்னொரு பதிப்புள தாயினும், அதன்கண்ணில்லாத புதுப் பாட்டுகளுந் திருத்தங்களும் இதன்கட் சேர்ந்திருத்தலால் இப் பதிப்பு மிகவும் நன்கு பயனுமென்று நம்புகிறோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

சிவமயம்

நெல்லைச் சிலேடை வெண்பா

# சிறப்புப்பாயிரம்

சிதம்பரம் மீனாட்சி தமிழ்க் காலேஜ் பிரின்ஸிபாலாகிய
மஹாமஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி
உத்தமதானபுரம்

பிரமஸ்ரீ வே-சாமிநாதையரவர்கள்
இயற்றியது

அடியார்க்கு நோய்முத்தம் வேய்முத்த மருளியெழுந்
தருளி வாழுங்
கொடியார்க்கு மணிமாடத் திருநெல்லைச் சிலேடைவெண்பாக்
குலவச் செய்தான்
கடியார்க்கும் பொழில்வெள்ளக் காற்பழநி யப்பமுகில்
காதற் செல்வன்
மிடியார்க்கு நிதிநிகர்சுப் பிரமணிய நயசுகுண
விழுமி யோனே.

---

ம-ள-ள-ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி கவிராஜரவர்கள் குமாரர்
திருநெல்வேலி

ம-ள-ள-ஸ்ரீ

கவிராஜ நெல்லையப்ப பிள்ளையவர்கள்
இயற்றிய செய்யுட்கள்

திருமணங் கமழும் கமலமென் மலரிற்
றிசைமுகச் செம்மல்செவ் வாயாற்
பெருமணங் கடக்கு முந்திமா தவன்விண்
பிலத்திலுந் துருவிட நீண்ட

வருமணங் கடக்குஞ் சரமுரித் தவரு
மானநல் வரதர்பொன் மாலை
தருமணங் கமரு மேனியர் நெல்லைத்
தலம்வளர் தானநா தருக்கு. (க)

வழுதிநா டதனிற் பொன்னகர் மான
வளங்கெழு சோழவந் தானிற்
பழுதிலா திருந்தச் செழியநாட் டிடைமேல்
பால்வயங் கெழிற்பயோ தரத்தின்
றொழுதியார் பொழில்சூழ் வெள்ளகா லென்னுந்
தூயமா நகரில்வான் றுன்னி
யெழுதிவா கரனைப் பொருவவா துலர்தம்
மிரவொழித் திருந்தவோ ரேந்தல். (உ)

அத்தநீ டியநல் லாரையில் வாழ்நம்
மழகப்ப பூபதி யங்கச்
சித்தசன் தளவாய் குமாரசு வாமிச்
சேரன்செங் குவளையந் தெரியற்
கொத்தலர் புயத்திவ் விருவர்தம் பெருமைக்
கோக்குடிச் சம்பந்தங் கொண்ட
வுத்தம னருமைச் சுப்பிர மணிய
னுஞற்றிய தவத்தில்வந் துதித்த. (௩)

பணமலி கிதிக்கோன் றன்னையொப் பாகும்
பழகியப் பன்றரு பாலன்
குணமலி நந்த கிதிகவி மாரி
கொழித்திடுஞ் செந்தமிழ்க் கொண்மூ
விணமதி வதனன் கருணைதத் திடுநல்
விழியினன் வியப்புறும் விவேகன்
வணமலி தரளத் தார்கிடந் திலங்கு
மணியெழு வனையதோள் வள்ளல். (௪)

வேறு

வன்னந்தந் தாதரிக்கு வளைகளங்கண் மாதொர்கல்லில்
வரத்தாள் வைத்தோன்
முன்னந்தந் தாதரிக்கு குவெனமன்றி னடித்திடுகம்
முதல்வர் செல்வத்
தன்னந்தந் தாதரிக்கு விலுமணுகா தருள்சம்பு
சரண்போற் றியார்க்கும்
அன்னந்தந் தாதரிக்கு மெங்கள் சுப்ரமண்யனெனு
மதுல னன்பால். (௫)

வேறு

அருண்மணங் கமழும் பொருளினின் சுவையும்
மறைதரு சொற்சுவை யமைவும்
மருவுற விசைத்த சிலேடையின் வியப்பும்
வாய்த்தநற் கற்பனை வனப்பும்
தருபத மதுரங் கொழித்திடு பொலிவுஞ்
சார்திரி புயமகத் தகவுந்
தெருடரும் யாரும் புகழ்தர நெல்லைச்
சிலேடைவெண் பாத்தமிழ் செப்பி. (௬)

ஆயிரத் தறுபத் தாறெனு மாண்டி
லணுகுறும் விகிர்தியாம் வருடம்
ஏய்தரு மகர மாமதி மருவு
மெட்டுட னேகமார் தேதி
வாய்தரு புந்தி வாரநற் பகற்று
வாதசி யுந்திங்க ளுளுந்
தோய்தரு கும்ப லக்கின முஞ்சேர்
சுபதினம் பத்திமை தோன்ற. (௭)

வண்ணவான் குன்றின் மணிவிளக் கென்ன
வளர்தொண்டை மண்டல மரபு
கண்ணகன் ஞால முழுவதும் விளங்கக்
கருதிமுற் கவியினிற் கழறும்

பண்ணவா வின்சொற் காந்திம தித்தாய்
பங்கமர் பரமர்மெய்ப் பத்தர்
எண்ணமா ரவ்வேய் வனத்தர்சந் நிதியி
லினிதரங் கேற்றினன் மாதோ. (அ)

---

திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீவில்லிபுத்தூர்த் தாலூகா குன்னூர்
ம-ள-ள-ஸ்ரீ
## பெரியவீட்டுக் குமாரசுவாமி முதலியாரவர்கள்
இயற்றியது

கல்லைவெண்பா னேர்முலைசொற் காந்திமதி யம்மைபங்கர்
நெல்லைவெண்பா மாலை நிகழ்த்தினன்—ஒருல்லைப்
பிறவிதவிர்ப் பான்சுப் பிரமணிய னென்னுந்
திறவிதர ணன்றமிழ்தேர்ந் தே.

---

திருநெல்வேலி ஜில்லா சிவகாசி
ம-ள-ள-ஸ்ரீ
## மு. ரா. அருணசலக் கவிராயரவர்கள்
இயற்றியவை

சீர்கொண்ட சொற்சுவை பொருட்சுவை சிலேடைச்
செழுஞ்சுவை முதிர்ச்சி செறியுந்
திரிபுயம கங்கற்ப ணைச்சுவைகண் முதலிய
சிறப்புறாஉ நெல்லை வெண்பா
வேர்கொண்ட வெள்ளகால் வள்ளல்சுப் பிரமணிய
விறைவனுங் கவிஞ ரேறிங்
கியற்றின னதுகண்டு புகழேந்தி யன்றியி
தியம்புவா ரில்லை யென்னப்

பேர்கொண்ட பாவல ருரைத்தசொன் முழுதும்
 பிழைத்ததிலை தென்ன பெற்றி
பேசுவீ ரென்பார்க்கு மேலோர் மொழிந்தசொற்
 பிழைபடுத லில்லை யென்னும்
பார்கொண்ட விவனுமுயர் கல்வியாற் கேள்வியாற்
 பரவுபுக ழேந்தி யான
பண்பினாற் பாடினு னென்றுரைப் பாமறிஞர்
 பலருமொப் பும்ப டிக்கே.

முல்லைச்சி லேடைவெண்பான் மொய்குழற்சொன் மாதங்கர்
நெல்லைச்சி லேடைவெண்பா நிர்மித்தான்—சொல்லைப்
பிரபலமாக் கொண்சுப் பிரமணிய வள்ளல்
வரபலமாக் கொள்வாருள் வார்.

---

ம-ள-ள-ஸ்ரீ

## மு. ரா. கந்தசாமிக் கவிராயரவர்கள்

**விவேகபாநு**:—திரிபும் சிலேடையும் செம்பாகமாகவே அமைக்கப்பெற்றிருத்தலால் சிறிது ஊன்றிநோக்கில் பொருள் காண்டல் எளிதே. பொருள் புலப்பட்டவுடன் மனத்து எழும் பெருமகிழ்ச்சிக்கு வரம்பு காண்டலரிதாம். நெல்லை என்னும் சொல்லை ஆசாக வைத்து நூறு சிலேடை கூறுதல் மிகக் கொண்டாடற்பாற்று. செய்யுளியற்றும் வன்மையுடையார் இதன் திறங் கண்டு பிரமிப்பது திண்ணம். இதற்கு உரையும் இருக்கின்றது.

திருச்சிற்றம்பலம்

# நெல்லைச் சிலேடை வெண்பா

---

### விநாயகர் துதி

எல்லைவெண் பான்மதியை யேர்நயன மாவுடையார்
நெல்லைவெண் பாவை நிகழ்த்தவே—சொல்லருள்வா
ராரும்போல் லாப்பிள்ளை யாலெனுமெ னுள்ளத்து
மாரும்போல் லாப்பிள்ளை யார்.

நெல்லைச் சிலேடை வெண்பா அரங்கேறும்போதும் முன்னும் பின்னும் வாசிக்கக் கேட்டவர்கள் சில பதப்பிரயோகங்களைப் பற்றியும் வேறுபலவற்றைக் குறித்தும் பலகேள்விகள் கேட்டனர். அக் கேள்விகள் இந் நூலின் அச்சுப்பிரதிகளைப் பார்வையிடுவார் மனத்தும் தோன்றக் கூடியவைகளா யிருத்தலால் அவைகளுக் கெழுதப்பட்ட விடைக ளடங்கியிருப்பதால் அடியில் வரும் குறிப்புரைகள், இந் நூலைப் பலமுயற்சிகளினிமித்தம் தாங்களே முற்றும் ஆராய்ந்து பொருள்படுத்தப் போதிய அவகாச மில்லாதவர்களுக்குத் துணையாக, திரிபும் சிலேடையுமான பாகங்களின் சொற்களைப் பிரித்துக்காட்டல், பதசாரங்கூறல் முதலிய விளக்கங்களும் அமைந்துள்ளன.

இந்நூல் செய்த யானே இதற்குக் குறிப்புரையும் எழுதியது மரபோ எனச் சந்தேகிப்பாருளரேல், அவர்கள் ஸ்ரீ சுவாமிநாத தேசிகர் இலக்கணக்கொத்திற் கூறிய "நூல்செய் தவனங் நூற்குரை யெழுதல்—முறையே........." என்னும் உரைச் சூத்திரத்தைப் பார்க்க. இக்காலத்தும் ம-ா-ா-ஸ்ரீ. எம். ஏ. சுந்தரம் பிள்ளை தாம் இயற்றிய மனோன்மணீயத்துக்குத் தாமே குறிப்புரை யெழுதி யிருப்பதையும் நோக்குக.

முக்கியமாக விருந்தும் யான் எழுதாதது விட்டவைகளேனும், தவருக எழுதியவைகளேனும் இருப்பின், அவைகளை இதைப்

பார்ப்போர் யாவராயினும் எடுத்துக்காட்டிச் சீர்திருத்து வார்களாயின், அவர்களைப் பேருதவி புரிந்தாராகக் கருதுவதன்றி அச் சீர்திருத்தங்களை அடுத்த பதிப்பில் மிக்க நன்றியறிதலோடு உபயோகித்துக்கொள்வேன்.

விநாயகர் துதி. ஆரும் பொல்லாப் பிள்ளையா லென்னும்— எல்லாரும் தீங்குடைய (அறிவிற்) சிறியன் என்று கூறப்பட்ட பிள்ளையால் என்பதில் ஆல் அசை.

## சமயாசாரியர் துதி

என்புசிலை செங்கனரி யேழைபுணை பொன்பரியாக் [டேன்
கன்பர்பதப் போதெனெஞ்சத் தார்ந்தொழுக்கு—மின்பருட்
பொங்கியெழீஇ வாயுமுற்றென் புன்கருத்துஞ் சொல்லும்விரா
யங்கவைதித் திப்பிக்கு மால்.

## அவையடக்கம்

உமையாளின் வாயமுத முண்பான்பாம் பின்வா
யமையாலந் தன்னையு மார்வா—னமையாளு
ஞானசம்பந் தன்முதலோர் நற்பாக்கோள் வான்கோள்வா
னூனசம்பந் தத்தென்பா வும்.

## நூல்

ஆடகஞா யில்சூ ழகமு மகழ்ப்புறமு
நீட வளவனஞ்சேர் நெல்லையே—சேடுமிகு
செவ்வேள்வி நாயகன் சேயராப் பெற்றபிரான்
செவ்வேள்வி நாயகன் சேர்வு.

ஞாயில்—மதில். அகழ்ப்புறம்—அகழுக்குப் புறம்பே சூழ்ந்துள்ள இடம். நீள் தவள அன்னம் சேர்; நீட வள வனம் சேர். சேடு—அழகு.

செவ் (வையான) வேள்வி நாயகன் (சிவன்). "மகந்தனக் கரசன் முக்கண் வள்ளலே யென்னும் வேதம்." (காஞ்சிப்பு, தக்கிசப்-கக.) (க)

கோலமுறு வாவிகளுங் கோங்கார் நெடும்பொழிலு
நீலமணி வானந்தேய் நெல்லையே—பாலுறவேய்த்
தோளியுட னாடினான் றேந்தோ மேனமுன்பு
காளியுட னாடினான் காப்பு.

*நீலம் (நீலப்பூவும்) மணி (முத்தையுடைய) வால் (வெண்மை நிறத்தையுடைய) நந்து (சங்கும்) ஏய் (தங்குகின்ற).*

*நீலமணிவானந்தேய்—நீலநிறத்தையுடைய அழகிய ஆகாயத்தைத் தேய்க்கின்ற.*

*பாலுற...னான்—பாகத்தே தங்கும்படி மூங்கில் போலுந் தோளையுடைய பார்வதியின் தேகத்தை விரும்பினான். காளியுடன் ஆடினமை இத் தலபுராணத்தில் கூறப்பட்டுள்ளது.* (உ)

மல்லற்பூஞ் சோலையினு மள்ளருழ பண்ணையினு
நெல்லிக்காய் மேன்மையுறு நெல்லையே—வெல்லற்காம்
வேலேறு கைக்குமரன் வேழமுகன் றந்தைவெள்ளை
மாலேறு கைக்குமரன் வாழ்வு.

*நெல் இக்கு ஆய் மேன்மை உறும்; நெல்லிக்காய் மேல் மை (மேகம்) உறும்.*

*மேல் ஏறு கைக் குமரன். மால் ஏறு உகைக்கும் அரன்.* (௩)

கூர்வெங் கடகரியுங் கோதையர்பூங் கொங்கைகளு
நேர்கந் துகத்தாக்கு நெல்லையே—நார்கொளன்ப
ராலியம திக்குறையா ராகச்செய் வார்சடைமேல்
வாலியம திக்குறையார் வாழ்வு.

*நேர் (தன் எதிரில் உள்ள) கந்து (கட்டுத்தறியை) உக (சிதறும்படி) தாக்கும் (மோதும்); நேர் (உவமானத்தை) கந்துகத்து (பந்தின்கண்) ஆக்கும்.*

*ஆலி (ஆடி) யமதிக்கு உறையார். வாலிய (வெள்ளிய அல்லது தூய) மதிக்குறை (குறைபட்ட சந்திரனாகிய பிறையை உடை) யார்.* (௪)

சேடேய் சுரும்புமலை சேர்பொழிலும் வான்வாச
நீடே டுடைக்கவுறு நெல்லையே—பீடேறஞ்
சக்கரக்கஞ் சக்கரத்தான் ஞாதாமுன் ஞோர்வினைகண்
மிக்கரக்கஞ் சக்கரத்தான் வீடு.

சேடு—அழகு. வான் (உயர்ந்த) வாசம் (மணம்) நீடு (மிகுந்த) ஏடு (மலரிதழ்களை) உடைக்க உறும். வான்வாச (ஆகாயத்தில் வசித்தலையுடைய) நீள் தேள் (விருச்சிகராசியை) துடைக்க உறும்.

சக்கரக் கஞ்சக் கரத்தான் (விட்டுணு). வினைகளை மிக்கு அரக்கு (தேய்த்தழிக்கின்ற) அஞ்சு அக்கரத்தான். (ரு)

சுத்தசைவர் நாவினுக்குஞ் சூரிரு தோளினுக்கு
நித்தனைந்தெ ழுத்தேயு நெல்லையே—கைத்தலத்து
மாதர்மா னங்கெடுத்தார் வண்டாரு காவனத்து
மாதர்மா னங்கெடுத்தார் வாழ்வு.

நித்தன் (சிவனுடைய) ஐந்து எழுத்து ஏயும்; நித்தல் (தின மும்) நைந்து எழு (தூண்) தேயும்.

மாதர் (அழகிய) மான் அங்கு எடுத்தார்.

மாதர் மானங்கெடுத்தார் (ஆகிய சிவன்) வாழ்வு, நித்தன் (ஆகிய சிவன்) ஐந்து எழுத்து ஏயும் நெல்லை என்பது தகுதியன் றென்று சொல்வாருளர். அது தகுதியற்றதன் றென்பது திரு வேங்கடமாலையில் "மட்டுவளர் சாலையினு மாதவத்தோர் சிந்தை யினும்—விட்டு மதி விளங்கும் வேங்கடமே......" என்னும் பாட் டினால் விளங்கும். (சு)

ஆதிபர்கள் பாலர்களு மாயர்களசி ருருகவ
நீதமின்பால் வாய்க்கவரு நெல்லையே—சோதிக்
கருடத் துவசநத்தன் காணுக் கழலா
னருடத் துவசநத்த னூர்வு.

நவநீதம் (புதுமையாகிய நீதி) இன்பால் (இனிமையினால்) வாய்க்க (அமைய) வரும். நவநீதம் (வெண்ணெயையும்) இன்பால் (தித்திக்கும் பாலையும்) வாய்க்கவரும் (வாயினிடத்துக் கவரும்).

கருடத்துவச (த்தையுடைய) நத்தன். அருள்தந்து வசநத்தன். (எ)

தேரார் வயவர்களுஞ் சேக்கீதி மன்றுகளு
நேரார் மனனடுக்கு நெல்லையே — யேரார்
தோடிவா ளிடத்தான் றுவக்கிச் சுவடீ
வடிவா ளிடத்தான் மனே.

நேரார் மனன் நடுக்கும்—பகைவர்களுடைய மனத்தை நடுங்கச் செய்யும். நேர் ஆர் ம(ன்)னன் அடுக்கும்—ஒழுங்கு பொருந்திய அரசன் சேரும்.

தொடி (கைவளை) வாளிட (பிரகாசிக்க) தான் (அம்பிகை யாகியதான்) துவக்கி (கைகொண்டுகட்டி) சுவடு ஈ (முலைத்தழும் போடு வளைத்தழும்பும் ஈந்த). வடிவாள்—காந்திமதி அம்பிகை.

ஆர்க்குறாஉ மாடல்புரி வாருஞ்சீ ரும்பொய்கை
நீர்க்கிரீ டிக்குறாஉ நெல்லையே—பார்க்கப்
புவிய கழுமுளத்தன் பூக்கண்ண புனைந்தான்
செவிய கழுமுளத்தன் சேர்வு.

ஆடல்புரிவன்—சோலைவிளையாடல் முதலிய விளையாடல் செய்வோர். சீர்—கீர்த்தி. பொய்கை நீர் (தடாகத்தின் நீரில்) கிரீடிக்குறும் (கிரீடைசெய்யும்—விளையாடு). பொய் (மை) கை (வெறுத்த) நீர் (தன்மையுடைய) கிரீடிக்கு (அரசனுக்கு) உறும்.

பார்க்கப்புவி......புனைந்தான்—(திருவடிகளைக்) காணப் பூமியைத் தோண்டும் விட்டுணுவின் தாமரைக்கண்ணை (க் காணக் கூடாத கழல்களைக் காண முயன்ற அகந்தை தீர்ப்பார்போல) அணிந்துகொண்டவர்.

செவிய கழுமுன் அத்தன்—செவ்விய சூலப்படை தாங்கிய கையை யுடையார். (அ)

முற்றலில்காய்க் காசையுற்ளுேர் மூத்தோர்த்தாழ் வோர்கழனி
நேற்றி கழலுறாஉ நெல்லையே—உற்றபத்த
ராயவ லம்புரியா ராயவ லம்புரியா
ராயவ லம்புரியா ரார்வு.

முற்றலில் காய்க்காசை யுற்ளுேர்—முற்ருத இளங்காயை விரும்புவோர் ; நெற்று இகழல் உறும்; (வணங்குவோர்) நெற்றி கழல் (மூத்தோர்பாதத்தின்மீது) உறும்; நெல் திகழல் உறும்.

பத்தர் ஆய் அவலம்புரியார்—அடியார் கெடுகின்ற துன்பத்தைச்செய்யார். ஆய வலம்புரியார் ஆய வல் அம்பு உரியார் —இடைக்குலத்துப்பிறந்த (கண்ணன் ஆன) சங்கத்தையுடையார் ஆகிய வலிய அம்பினை யுடையவர் தங்குமிடம். ஆய்தல் கெடுதற்பொருளில் வருவது. காஞ்சிப்புராணம் சுரகரீசப்படலம் உக-ஆம் பாட்டிற் காண்க.

சீறுமத னும்மலைத் தீர்திறம்போய்ச் செய்திறமு
நீறுதைய லர்குளத்தேய் நெல்லையே—கூறுமிக்கை
வண்ணித்த கல்யாணர் மால்யானைக் கூட்டினு
ரோண்ணித்த கல்யாண ரூர்.

சீறுமதன் (கோபங்கொண்ட மன்மதன்) நீல் (நீல நிறம்) துதை (நெருங்கிய) அலர் (பூவைக்) குளத்து ஏய்.

*மயலைத்தீர்திறம் போய்செய் திறமும் நீறுதையலர் குளத்தேய்—நீறு (விபூதி) மயலைத்தீர் (மோகத்தை நீக்குகின்ற) திறம் (தனக்கு இயல்பான சக்தி) போய் (நீங்கி) செய்திறம் (அம்மோகத்தை யுண்டாக்கும் வலியை) தையலர் (மாதரது) குளத்து (நெற்றியிலே) [தரிக்கப்பெற்ற போது] ஏய் (பொருந்துகின்ற).

[இரண்டாவது எழுவாயாகிய நீறு சிலேடைப்பாகத்தில் வருகின்றது. இப்படியே எழுவாய் இலேடைப்பாகத்தில் வருவதை "வந்துபகைத் தோர்பொரலால் வண்டுமதத் தால்வரலால் —சிந்து ரத்த வாறடுக்குஞ் சிங்கையே......" என்னும் பாட்டிற் காண்க.]

---

* இது பிரபுலிங்கலீலை மாயைபூசனைகதியில் "இனத்தியல்பாமறிவு" என்னும் பாட்டின் கருத்தைத் தழுவியது.

கூறும் இக்கை [மதுரையில்] வண்ணித்த் (வருணிக்கப்பட்ட) கல் (கல்லாகிய) யாணர் (அழகான) மால் யானைக்கு ஊட்டினர்.

வண்ணித்தல் வர்ணித்தல் எனச் சீவகசிந்தாமணி இலக்கணை யாரிலம்பகம் "கண்ணினுலின்று கண்டாம்" என்ற பாட்டுரையில் நச்சினர்க்கினியர் கூறியிருப்பதைக் காண்க. (கக)

ஆர்வமிஞ்சி நோற்பார்க்கு மாண்மைவிஞ்சி யேற்பார்க்கு
நேர்வரஞ்சித் திக்கையுறு நெல்லையே—நீர்வளைந்த
பூத்தூ விரதத்தார் பொன்னடியன் பார்க்கருளு
மாத்தூ விரதத்தார் வாழ்வு.

ஏற்பார்—எதிர்ப்பார். நேர் (பிரார்த்தித்த) வரம் சித்திக்கை (கைகூடுதல்) உறும். நேர்வர் — (எதிர்வோர்) அஞ்சி திக்கை உறும்.

நீர்—கடல். பூத்தூவி ரதத்தார்—பூமியாகிய தூபியையுடைய தேரையுடையார். மா (பெரிய) தூ விரதத்தார் (பரிசுத்த விரதத்தையுடையார்). (கஉ)

ஏர்வாய்மின் னார்கண் ணிகற்கும் விடநோய்க்கு
நேர்வா ளமருந்தீ நெல்லையே—சீர்வாணி
மங்களங்கோண் மூக்கறுப்பார் வாட்டுவிட முண்டோளிருந்
தங்களங்கோண் மூக்கறுப்பார் சார்பு.

கண்ணிகற்கு (விழிப்போர்க்கு) நேர் (எதிர்கின்ற) வாள் அமர் (வாட்போர்) தீ (யும்) விடநோய்க்கு நேர்வாள (மென்னும்) மருந்து (கலந்த ஔஷதம்) ஈ (கொடுக்கப்படுகிற).

மங்களம் கொள் மூக்கு அறுப்பார், தம் களம் கொண்மூ (மேக)க் கறுப்பார். (கங)

தேறுசைவ ருங்கணவர்த் தீர்ந்தோரும் வெண்ணிலவி
னீறு புனைந்திடூஉ நெல்லையே—மாற
னடிச்சுவடு வேய்ந்தா ரடியார் சிரமே
லடிச்சுவடு வேய்ந்தா ரகம்.

வெண்ணிலவினீறு (வெள்ளிய பிரகாசத்தையுடைய விபூதியை) புனைந்து (அலங்கரித்து) இடும் (தரித்துக்கொள்ளும்); வெண்ணிலவின் (வெண்ணிலவால்) நீறுபு (நீறி) நைந்திடும் (வருந்துகின்ற).

ந, ன, இரண்டும் ஒன்று மற்றொன்றாக உறழ்ந்துவருதல் ஆறுமுகநாவலர் உரையுடன் பதிப்பித்திருக்கிற மருதூரந்தாதி ௯ ஆவது, ௬௨ ஆவது பாட்டுக்களிலும், சிவஞானயோகிகள் முல்லையந்தாதியில் "தொண்டையனாடு" என்னும் ௭0 ஆவது பாட்டிலும், நைடதத்தில் "மருவுபுரி நரம்பிசைக்கும்" என்னும் பாட்டில் "உருகினளன்பால்" என்பதிலுங் காண்க.

மாறன் அடிச்சுவடு ஏய்ந்தார் — பாண்டியன் (பிரம்பினால்) அடிக்க அந்த அடித்தழும்பைப் பொருந்தினார். அடிச்சுவடு வேய்ந்தார்—அடிச்சுவட்டை அணிந்தார்.

அடிச்சுவடு வேய்ந்தார் :— காஞ்சிப்புராணம் நகரப்படலம் முதற்பாட்டில் வைத்து வச்சு என்றாயதுபோல அடிந்து அடிச்சு என்றாகியது. சீவகசிந்தாமணி முத்தியிலம்பகம் ௯ ஆவது பாட்டில் "அடிசிற் கலங்கழீஇக் கருணையார்ந்த விளவாளை" என்பதிலும் ௬அ-வது பாட்டில் "மடத்தகை நாணிப் புல்லி மின்னுச்சேர் பரிதியொத்தான்" என்பதிலும் கழீஇ புல்லி என்பன முறையே கழுவ புல்ல எனப் பொருள்படல்போல அடிச்சு அடிக்க என்று பொருள் பட்டதென்னலாம். அன்றி ஸ்ரீசுவாமிநாததேசிகர் இலக்கணக்கொத்து வினையியலில் "அறுதொகை" என்னும் ௭௧ ஆவது சூத்திரத்துரையில் "வணிகனறிந்து வந்தபொன்" என்பதில் வணிகன் அறிந்து, என்பது வணிகனால் அறியப்பட்டு என்னும் பொருளுடையது என்றதுபோல இங்கு மாறன் அடித்து என்றதற்கு மாறனால் அடிக்கப்பட்டு என்று பொருள் கோடலும் அமையும்.

மேற்படி நூல் மேற்படி இயல் ௭௧ ஆவது சூத்திரத்துரையில் "கோழிகூவிப்பொழுது புலர்ந்தது" என்பதில் கூவி, கூவுவிந்து என்று பொருள்பட்டதுபோல அடித்து அடிப்பித்து எனப் பொருள்படுவதாகக் கொள்ளினும் கொள்ளலாம்.

இவ்வாறு தங்கருத்தாவினைக் கொண்டு முடியாது பிறகருத்தா வினைக்கொண்டு முடியும் செய்து என்னும் வாய்பாட்டு வினை யெச்சங்களைப்பற்றி ஸ்ரீஆறுமுகநாவலர் பதிப்பித்திருக்கிற சிவ ஞான சுவாமிகள் தொல்காப்பியச் சூத்திரவிருத்தியிற் கூறியிருப் பதையும் பார்க்க. (கச)

ஏத்துமின்ன ரும்மவர்முத் தின்வடம்பூண் கொங்கையுமின்
னீத்த வரையேய்க்கு நெல்லையே—மாத்தவத்தோர்
மாதருக்க கற்றுவார் மையலினை மற்றவர்த
மாதருக்க கற்றுவார் வாழ்வு.

இன்னீத்தவரை—இல் (இல்லை—இல்லறத்தை) நீத்தவரை (துறந்த துறவிகளை) ஏய்க்கும் (இல்லிலே—இல்லறத்திலே—பொருந்தச்செய்யும்); "மென்முலை, சித்தியிற்படர் சிந்தையி னுரையு மிற்றி சைப்படர் வித்திடு மென்பவே" எனச் சீவக சிந்தாமணி விமலையாரிலம்பகம் ௫அ ஆவது பாட்டிற் கூறியிருப் பது காண்க. இற்றிசைப் படர்வித்திடும் — இல்லறத்திலே செலுத்திடும். இன் (கண்ணுக்கினிய) நீத்தவரை (அருவி யுடைய மலையை) ஏய்க்கும் (ஒக்கும்).

மா தருக்கு அகற்றுவார்—பெருஞ் செருக்கை நீக்குவார். மா தருக்கு அகற்றுவார்—மனைவியருக்குப் பெருகச் செய்வார். (கரு)

சீர்செய்வய னத்தினமுஞ் சிற்சபையு ருத்திரனு
நேர்சின்முத்தி ரைக்கையுறு நெல்லையே — நார்செயுநெஞ்
சேயவயங் காவலா னேர்மதுரைச் சுந்தரனு
மேயவயங் காவலான் வீடு.

நேர்சில் (சில) முத்து (உம்) இரைக்கை (உம்) (ஒலித்தலும்) உறும். நேர் சின்முத்திரைக் கை உறும்.

நார் செ(ய்)யும் நெஞ்சு ஏய வயங்கு ஆவலான்...சுந்தரனு (க) மே(வி)ய வையங் காவலான். வையங்காவலான் வயங் காவலான் ஆனது "அ ஐ முதலிடையொக்குஞ் சஞயமுன்" என்பதனால். பயம் ஐபயம் என்றும் மை அநந்தன் பயனந்தன் என்றும் மருதூரந்தாதி உஉ ஆவது, எஉ ஆவது பாட்டுக்களில்

வழங்கியிருப்பது காண்க. மேற்கூறிய சூத்திரத் துதாரணங்களையும் பார்க்க. (கசு)

கோடாத வாய்மையினர் கூற்றும் பொருநையும்
நீடாக மங்கடக்கு நெல்லையே—சேடா
ரிலக்குமிநா ராயண னென்கண்ண னாவி
னலக்குமினா ராயண னூடு.

கூற்று (சொல்) நீடு ஆகமம் கடக்கும். ஆகமங்கடக்குமென்றது உபசாரம், ஆகமம்போல அழியாத்தன்மையுள்ள தென்றபடி. பொருநை (தாமிரபருணி) நீள் தாகம் அங்கு அடக்கும்.

இலக்குமி, நாராயணன், என் கண்ணன்—பிரமன், நாவில் கலக்கும்மின் (சரசுவதி) ஆராய் (இன்ற) அண்ணல்.

நலக்கும் என்னும் பதம் காஞ்சிப்புராணம் திருக்கண் புதைத்த படலம் உ0சு ஆவது பாட்டில் "நன்னதி பரந்தொளிர் பரப்பென நலக்கும்" என்ற கடைசியடியில் வருதல்காண்க. (கஎ)

கார்ச்செறிவார் மாதர்குழற் கற்றையுமெய்ப் பத்தருநன்
னீர்ச்சைவ லக்கணமேய் நெல்லையே—தேர்ச்சியிலா
மக்கடமைப் பாட்டான் வழுத்தார்க்கே மூத்திநல்கு
மக்கடமைப் பாட்டா னகம்.

நல் நீர் சைவலக்கணம் (நல்லநீரிலுள்ள சைவலப் பாசியின் கூட்டம்) ஏய் (நிகர்க்கின்ற); நல் நீர் சைவ லக்கணம் (நல்ல தன்மை யுடைய சைவமதத்தின் இலக்கணத்தை) ஏய் (பொருந்தும்).

மக்கள் (மனிதர்) தமைப் பாட்டான் (பாட்டினால்) அ (அந்தக்) கடமைப்பாட்டான் (கடமைப்பாட்டையுடையவர்). (கஅ)

வார்சங் தவிர்முலையார் வாயு முயிர்நூலு
நேர்சேந் துவர்க்கமொழி நெல்லையே—சீர்செயிடப்
பாகத் திருந்திழையார் பாவனத்தைத் தாள்பற்றூர்க்
காகத் திருந்திழையா ரார்வு.

வார்—கச்சு. சந்து—சந்தனம். வார், நேர் (வாய்க்கு உவமானமாகின்ற) செம் (சிவந்த) துவர்க்கு (பவளத்துக்கு) அம் ஒழி (அழகையொழிக்கின்ற). உயிர் நூல், நேர் செந்து வர்க்கம் (பிராணி வகைகளைப்பற்றி) மொழி (கின்ற).

இடப்பாக(த்துள்ள) திருந்து இழை (யாள் ஆகிய பார்வதியை உடை)யார். பாவனத்தை—புனிதத்தை ஆகத்து இருந்து இழையார். (கக)

கைதயங்கு வேலுமயற் காளையகு நெய்வோரு
நெய்தலைக்க ணெய்தலுறாஉ நெல்லையே - பைதன்முன்பின்
னின்றென்றற் காற்றகில ரின்றென்றற் காற்றகில
ரின்றென்றற் காற்றகில ரில்.

கையிலே பிரகாசிக்கின்ற வேல் நெய்யை உச்சியில் பொருந்துதலுற்ற, மையலையுடைய காளையர் நெய்தலினது அழகையுடைய (மாதர்) கண்கள் (அம்புபோல) எய்தலையடைகின்ற, நெய்தொழிலாளர் நெய்தற்கென்றே (பிரத்தியேகமாக) உள்ள இடத்தில் நெய்தற்றொழில் புரிதலையுறுகின்ற நெல்லை, துன்பத்தை முற்காலத்தும் வருங்காலத்தும் இன்றும் என்றனக்குச் செய்யாரும், இல்லை யென்று சொல்ல மாட்டாதவரும் இனிய தென்றற் காற்றையுடைய அகிலரும் ஆகியவர் வீடு.

என்றற்கு—என்தன்கு—என்றனக்கு. என்றற்கு—என்தல். கு—என்று சொல்லற்கு. (உ0)

போராம்ப னேர்முலையார் பூவாயுந் தூர்க்கையுஞ்செங்
கீராம் பலியையுறு நெல்லையே—யாரூரர்
தூதுவிடப் போனகத்தன் சோதிமதி போனகத்தன்
காதுவிடப் போனகத்தன் காப்பு.

போர் ஆம்பல்—போர்யானை. பூவாய்—அழகிய வாய். செங்நீர் ஆம்பல் (நல்லதன்மையுடைய அல்லிப்பூ) இயையுறும் (ஒத்திருக்கும்); செங்நீர் (இரத்தம்) ஆம் பலியை உறும். (உக)

பொன்மயினேர் வார்முலையும் போற்றடியார் நெஞ்சகமு
நின்மலையங் கங்கடுக்கு நெல்லையே—முன்மூவ்
வெயிலு முருத்தெரிப்பா ரேத்துகர்முன் பூதி
பயிலு முருத்தெரிப்பார் பற்று.

நின்மலை அங்கு அங்கு அடுக்கும்; நில் (நிற்கின்ற) மலை அங்கம் கடுக்கும்.

மூவ்வெயிலும் (மூன்று கோட்டையும்) உருத்து (கோபித்து) எரிப்பார். மூன்று எயில், மூவெயிலென்பதன்றி மூவ்வெயி லெனவும் வழங்கலாமென்பது திருவானைக்காப்புராணம் திரு நாட்டுச் சிறப்பு ௬அ ஆவது பாட்டில் "மூவ்வுலகத் தினுமில்லை மொழிதக்க திறத்தினரே" என்பதிற் காண்க. பூதி பயிலும் உருத்தெரிப்பார்—நீறணித்த திருமேனிக் கோலத்தின் காட்சி தருவார். (உ௨)

சேர்நதுபல தேயத் தினரு மடந்தையகு
நேர்ந்திங் கணுதலையேய் நெல்லையே—வார்ந்து
குணக்கோடு மாற்றினன் கோலவரா கத்தின்
றிணக்கோடு மாற்றினன் சேர்வு.

நேர்ந்து இங்கு அ(ண்)ணுதலை ஏய். நேர்ம் (மென்மையான) திங்கள் நுதலை ஏய். நேர்மை—மென்மை; ௬௬ ஆம் பாட்டு உரை பார்க்க. வார்ந்து (ஒழுகி) குணக்கு (கிழக்கே) ஓடும் ஆற்றினன். தி(ண்)ணம் கோடு (கொம்பு). (உ௩)

வாசித் தவர்சபையின் மன்பிடா ரன்குழலி
னேசிக்கப் பாப்பாடு நெல்லையே—பேசைங்
கிருத்தியன டத்தினன் கேடிலா யோகர்
கருத்தியன டத்தினன் காப்பு.

நேசிக்க (கேட்போர் பிரியமுறும்படி) பாப்பாடும் (பாட்டுப் பாடும்); நே (அன்பு) சிக்கப் பாப்பு (பாம்பு) ஆடும்.

ஐங்கிருத்தியம்—சிருட்டியாதி பஞ்சகிருத்தியம். கருத்து (மனதின்கண்) இயல் (கின்ற) நடத்தினன் (நடனத்தை யுடையவர்). (உ௪)

**தீர்கணவர் மாதர்நெஞ்சிற் றேங்கோன்றை யாலயத்தில்**
**நேர்கனவில் வந்தழைக்கு நெல்லையே — வார்கவுளின்**
**மன்மதனல் வாயார் மகனர் மயற்றுன்பு**
**மன்மதனல் வாயார் மனே.**

*தீர்கணவர்—(பொருண்மேற்) பிரிந்த கணவர். ஆலயத்தில்—இத்தலத்தில் சிவாலயத்தில். நேர்(கின்ற) கனவில் (சொப்பனத்தில்) வந்து அழைக்கும். நேர் கன வில்வம் (மிகுந்த வில்வத்தழை) தழைக்கும். கொன்றைமரம் வில்வந்தழைத்தது இத்தல புராணத்தில் வடபுலத்துக் கவுடன் வந்த சருக்கத்திற் காண்க.*

*மன் (நிலைத்த) மத (மதநீரையுடைய) நால்வாய் ஆ மகனர் (நான்ற வாயுள்ள மகனையுடையார்). மயற்றுன்பு......வாயார்—(மோகத்தைத் தனக்குத்தானே செய்து கொள்வாரே யன்றித் தானெரித்த)மன்மதனல்மையல்நோய்உண்டாக்கப்படார். (உரு)*

**பாலர்தலை பத்தான் படத்தைமய லோர்மதனை**
**நீலங்கை யேந்தலெனு நெல்லையே — கோல**
**முதுவையை யாற்றினன் முன்னிமய மீது**
**வதுவையை யாற்றினன் வாழ்வு.**

*தலைபத்தான் படத்தை—இராவணன் உருவெழுதப்பட்டுள்ள படத்தை நோக்கி, பாலர்—சிறு பிள்ளைகள், நீ லங்கை ஏந்தல் என்னும்—நீ (உனக்குப் பத்துத் தலையிருப்பதால் பத்துத் தலையுடையானென்று சொல்லப்படும்) இலங்கைக் கிறைவன் என்கின்ற. நீலம் கை ஏந்தல்—(கொல்லும்) நீலத்தைக் கையில் ஏந்தாதொழிக.*

*முது வையை ஆற்றினன். வதுவையை (மணத்தை) ஆற்றினன் (செய்தான்). (உசு)*

**சிற்குருச் டற்குநோய் தீர்ப்போனூண் வேண்டாற்கு**
**நிற்குணசை வந்துறுமென் னெல்லையே — யெற்குவினை**
**யோடு தரித்திரந்தா னோட்டினனவ்வே தாதலையி**
**னோடு தரித்திரந்தா னூர்.**

சிற்குரு—ஞானதேசிகன். நிற்குண சைவம் (சிவபிரானை வடிவு முதலிய குணமுடையவராகத் தியானிக்கும் சகுணோ பாசனை செய்து பக்குவமடைந்த சைவன் அக் கடவுளைக் குணங் கடந்த நிர்க்குண மூர்த்தியாக உபாசிக்கும் சைவம்) துறும் (நெருங்கும்).

ஊண் வேண்டாற்கு—ஆகாரத்தில் வெறுப்புற்றவனுக்கு. நிற்கு (உனக்கு) உண்(கின்ற) நசை (இச்சை) வந்து உறும்.

வினையோடு (வினையுடனே) தரித்திரம் தான் (அசை). ஓடு தரித்து இரந்தான்.

திருமுல்லைவாயி லந்தாதி "தோன்றற்கரிய" என்னும் உக ஆவது பாட்டில் நர்க்கர் நற்கரென்று கூறப்பட்டதுபோல நிர்க்குண சைவம் நிற்குண சைவமெனப்பட்டது. (உஎ)

ஏர்வைத்த மள்ளருநா ணேற்றிடுவின் மள்ளர்களு
நேர்வைக்கோற் போர்புரியு நெல்லையே—சார்வுற்ற
வொற்றைக் கலைத்தலையா ருள்ளன்பி லார்முமலப்
பற்றைக் கலைத்தலையார் பற்று.

நேர் (நேர்மை அதாவது நொய்ம்மையுடைய) வைக்கோற் போர் புரியும்; கூர்மைவாள் கூர்வாள் என்றுவதுபோல் நேர்மை வைக்கோல் நேர் வைக்கோலென்றுயது. நேர் (பொருகின்ற) வை (கூரிய) கோல் (அம்புப்) போர்புரியும்.

சார்வுற்ற ஒற்றைக் கலைத்தலையார்—தக்கன் சாபத்தால் ஒரு கலை நீங்க மற்றெல்லாக் கலைகளும் இழந்து சரணடைந்த சந்திரனைத் தலையில் வைத்தவர். பற்றைக் கலைத்து அலையார்.

(உஅ)

கார்ச்செயங்கோள் பூங்குழலார் கைகளுநாற் பாலுநறு
நீர்ச்செயகஞ் சங்கடுக்கு நெல்லையே—சீர்ச்சைவ
ருச்சிப் பதிக்கத்த ஞெண்பூம் பதநல்குங்
கச்சிப் பதிக்கத்தன் காப்பு.

நறுநீர் (வாசனைத் தன்மையையுடைய) செ(ய்)ய (சிவந்த) கஞ்சம் கடுக்கும் (ஒக்கும்). நறுநீர் (நல்லதண்ணீரையுடைய) செய் அகம் (வயல்களிடத்து) சங்கு அடுக்கும்.

உச்சி (தலையில்) பதிக்க தன் கச்சிபதி (காஞ்சிபுரம்) கத்தன் (கடவுள்). (உகூ)

ஏர்புணரு மேகலையு மில்லமும்பந் தாடிடமு
நேர்புனிதம் பந்துறவா நெல்லையே — யோர்பைங்
கனிபுணர் கையார் கனிபுணர் கையார்
கனிபுணர் கையார் களன்.

அழகு பொருந்திய மேகலாபரணத்தைத் தனக்கெதிர் புல்லிய (அதோதரம் என்னும்) வயிற்றின் கீழ்ப்பகுதி அவ்வாபரணத்தை நீங்காத, வீடுகளில் மிகுந்துள்ள சுத்தமும் பந்துக்களும் உறவாகின்ற (பழகுகின்ற), பந்தாடும் இடத்தில் (ஒன்றோடொன்று) எதிர்த்து நிதமும் பந்துகள் மிகவும் குதிக்கின்ற நெல்லை, ஒரு பச்சைநிறமுள்ள கன்னி சேர்தலை யுடையவரும் கற்ற நிபுணர் வெறுக்காதவராகிக் கனிந்து உணரப்படுதலை யுடையவரும் ஆகியவர் இடம். (௩0)

வாடுமிடை யார்தனத்து மாயோ கியர்மனத்து
நீடவம்ப டர்ந்திடூஉ நெல்லையே—கூடற்
றெருவருத்து வர்த்தகத்தன் தேமலரோன் பொய்ச்சோ
லருவருத்து வர்த்தகத்த ஞர்வு.

நீட வம்பு (கச்சு) அடர்ந்திடும்; நீள் தவம் படர்ந்திடும்.

கூடற்றெரு (மதுரையின் தெரு) வருத்து (வரும்படி செய்த) வர்த்தகத்தன் (வளையல் வியாபாரி). அருவருத்து உவர்த்த கத்தன். (௩க)

கோதாரீ யாரைக் கொடுப்பாரை யாசகர்க
ணீதாதா வாவென்னு நெல்லையே—தூதாவோர்
மாதங் கடைவரலார் வந்தவலி தீரவுமை
பாதங் கடைவரலார் பற்று.

நீ தாதாவா என்னும்—நீ கொடையாளியா வென்று (இகழ்ந்து) சொல்லும்; நீதாதா வா என்னும்—நீதிமானே கொடுக்க வருவாயாக வென்றுசொல்லும்.

தூதா ஓர் மாது அம் கடைவரலார்—சுந்தரமூர்த்தி நாயனர் தூதராகப் பரவைநாச்சியாரது அழகிய வாயிலிற் சென்றவர். வலி - நோவு, வருத்தம். "வலியானே யான்பட்ட வலிகாண வாராயோ" (கம்பரா. சூர்ப்பண. கஉ). பாதங்கள் தைவரலார்—பாதங்களை வருடப் பெற்றவர். (கூஉ)

கோலமனை கோண்கனையக் கோண்கனில்லை முன்னிலையி
னீலவண னேர்வையேனு நெல்லையே—நாலிரண்டாத்
தோக்கவிருந் தோடிரண்டார் தூமுகமோவ் வோன்றனினு
மிக்கவிருந் தோடிரண்டார் வீடு.

முன்னிலையில்—நேரில். நீல;வண்ணன் (விட்டுணு) நேர்வை (ஒப்பாய).

முன் இலையில் நீ லவணம் நேர் வை—முதலிலே இலையில் நீ உப்பை முறையே படைப்பாயாக. சைவர்கள் பந்தியில் முதலில் உப்புப் படைக்கும் வழக்கம் இங்குக் கூறப்பட்டது.

தொக்க இரும் தோள் திரண்டார். மிக்கு அவிரும் தோடு இரண்டார். (கூகூ)

தேர்திப் பியமணியுந் தீங்கீத வாணர்களு
நேர்செப்பி னப்பணுறு நெல்லையே—நீருற்ற
மின்ப வளத்தாழ்வார் வேணியார் சத்திமுலை
யின்பவளத் தாழ்வா ரிடம்.

நேர் (அமைந்த) செப்பின் நாப்பண் (நடுவில்) உறும். நேர் (ஆகச்) செப்பு(கின்ற) இன் (இனிய) நா(நாவில்) பண் உறும்.

மின் (னுகின்ற) பவள நிறமுடைய தாழ் (ந்த) வார் (நீண்ட).

இன்பவளத்து (இன்பமாகிய வளத்திலே அல்லது இன்பந் தருங் கிண்ணத்திலே) ஆழ்வார் (அழுந்துவார்). (கூச)

காயத் திடங்கோண்மைந்தர் காலையினு மாலையினு
நேயத் திரிபணைக்கு நெல்லையே—வேய்வெட்டப்
புத்திரத்தத் தம்பணுனன் புத்திரனில் கண்ணனுக்குப்
புத்திரத்தத் தம்பணுனன் போற்பு.

காலையில் நேயம் (நெய்) திரி அணைக்கும்—விடியல் நேரம் (வர, எரிகின்ற) நெய்த்திரி(ச்சுடரை) அவிக்கும். மாலையில் நேயம் (அன்புடைய) திரி (மனைவியை) அணைக்கும் (தழுவும்).

வேய் வெட்ட புத்திரத்தத்து (புதிய இரத்தமாகிய) அம்பு (நீர்) அ(ண்)ணினன். புத்திர தத்தம் ப(ண்)ணினன். இங்குக் குறித்தவை யித்தல புராணக் கதைகள். (௩௫)

ஆக்கமுன்னிச் சேணெழிச்சே லன்பர்களு ஞானியரு
நீக்கமுன்னி னைந்திடூஉ நெல்லையே—தேக்குபுக
ழோதியன்ப ராயினு ருறேழிப்பார் மாலோடு
வேதியன்ப ராயினர் வீடு.

நீக்கம் (பிரிவு) உன்னி னைந்திடும். நீக்க—நீப்ப—துறக்க, முன் (மற்ற நினைவுகளை நினைக்கு முன்பு) நினைந்திடும்.

நீக்கம், நீங்கு என்னும் தன்வினைப்பகுதி யிடமாகப் பிறந்த தொழிற் பெயர்.

நீக்க, நீ என்னும் பகுதியடியாகப் பிறந்த வினையெச்சம்.

நீ என்பதினின்றுவந்த நீக்க நீக்கு என்னும் பிறவினைப் பகுதியிற்றோன்றிய நீக்க என்பதை வடிவத்தில் ஒத்தாலும் இலக்கணத்தில் வேறுபாடுடைத்து; பொருளினும் சிறிது பேத முடைத் தென்பது பின்னர்க் கூறப்படும் பிந்திய நீக்க என்பது ஓங்குதல் ஓக்குதல் ஓக்கம், தூங்குதல் தூக்குதல் தூக்கம் என்றாகும். ஓங்கு தூங்கு என்னும் பகுதிகள்போன்று நீங்குதல் நீக்குதல் நீக்கம் என்றாகும்; நீங்கு என்னும் பகுதியடியாகப் பிறந்தது. முந்திய நீக்க என்பது, யாக்க கோக்க பூக்க மூக்க மோக்க சீக்க காக்க என்று யா முதலிய ஓரெழுத்துப் பகுதிகளினின்று தோன்றியவைபோல, நீ என்னும் பகுதியினின்று பிறந்தது. யாக்க கோக்க முதலானவை யாப்ப கோப்ப ஆதியாக வருதல் போல நீக்கவும் நீப்ப வென்று வரும்.

நீத்தல் (வேறுபதங்களோடு சேராமலே) தனிநின்று துறவினை யுணர்த்தும். நீக்கலோ, பற்றினை நீக்கல் என்பது போல வேறு தக்க பதம் புணர்ந்தவழி மாத்திரம் துறவினை யுணர்த்தும்.

இப் பாட்டில் நீக்கம் நீக்க என்பவை சிலேடைக் குதவா என்று சிலர் வாதித்தமையின் இவ்வளவு விரித்துக்கூறல் ஆவசியகமாயிற்று. (கூசு)

ஊடாப் புணர்வார்க் குறமிரவுந் தாமரையு
நீடாக் கணங்கடுக்கு நெல்லையே—பீடார்
பொருநைத் துறையார் புரியார்த நெஞ்சிற்
கருநைத் துறையார் களன்.

*ஊடா - ஊடி. நீடா (த) கணம் கடுக்கும்; நீள் தாக்கணங்கு அடுக்கும். கரு நைத்து உறையார்.* (கூஎ)

ஏர்நிறைகன் றுக்கிடைய ரின்செயுட்குப் பாவாணர்
நேர்நிரையின் பாலூட்டு நெல்லையே—சீரடிக்க
ணன்புதுக்கச் சார்வா ரமைக்க வருள்வார்வாமத்
தின்புதுக்கச் சார்வா ரிடம்.

*கன்றுகளுக்கு இடையர் நேர் (செவ்வையான) நிரையின் (பசுக்கூட்டத்தின்) பால் ஊட்டும் (பாலை உண்பிக்கும்).*

*செய்யுட்குப் பாவாணர் நேர்நிரை (நேர்நிரை என்னும் அசைகளை) இன்பால் (இனிதாக) ஊட்டும் (சேர்க்கும்).*

*அன்பு (அன்பை) துக்கம் சார்வார் அமைக்க. (அம்பிகை யுள்ள) வாமத்து (இடப்பாகத்து) இன் புது கச்சு ஆர்வார்.* (கூஅ)

தூத்துறவோர் செம்மனமுந் துங்கநறும் பூஞ்சுனையு
நீத்துவல்லார் வந்தடுக்கு நெல்லையே—கூத்தன்
பழுதா வெழுத்தான் படப்பணையேன் டோளா
னெழுதா வெழுத்தா னிடம்.

*நீத்து (துறந்து) வல் (கடினமான) ஆர்வம் (ஆசைகளைத்) தடுக்கும்; நீத்து (நீந்துதல்) வல்லார் (வல்லோர்) வந்து அடுக்கும்.*

*பழுது ஆ(க) எழு(தூண்) தான் (அசை) பட (கெட்டொழிய). எழுதா எழுத்து (வேதம்).* (கூகூ)

ஆர்பிழியுண் போருந்தோப் பாக்குநகு நீத்தோகு
நேர்பழங்க ணட்டிடூஉ நெல்லையே—சூர்படுத்தோன்
மாதுருக்கங் காதரனார் மாதுருக்கங் காதரனார்
மாதுருக்கங் காதரனார் வாழ்வு.

தங்கிய கட்குடியர், கொடுக்கப்படும் பழைமையான கள்ளை விரும்புகின்ற, தோப்பு வைப்போர் செவ்வையாகப் பழங்களை (முளைக்கும்படி) நடுதலைச் செய்கின்ற, துறவிகள் நேரிடுந் துன்பத்தைக் கெடுக்கின்ற நெல்லை, சூரனைக் கொன்றோனுடைய தாய்க்கு அங்கு அன்புடையவரும், (முப்புரத்தாருடைய) பெரிய கோட்டைகளை நாசமாக்கியவரும், பெண் உருவத்தையுடைய கங்காதரரும் ஆகியவர் வாழும் இடம். பிழி-தேன். (௫0)

தூவாச் சிரமத்துத் தூதுண முங் குப்பைகளு
நீவார மேய்தரூஉ நெல்லையே—மேவூர்தி
யோதிமத்தி யாந்தமிலா ரோண்ணுவார்க் கண்ணுதார்
ராதிமத்தி யாந்தமிலா ரார்வு.

தூ ஆச்சிரமத்துத் தூதுணம்—முனிவரது ஆச்சிரமத்தி லுள்ள தூதுணம் புறாக்கள்; நீவாரம் மேய்தரும்-நீவாரமென்னும் நெல்லை மேயும். நீவு (நீக்கிக்கழித்த) ஆரம் ஏய்தரும் (பொருந் தும்).

ஊர்தி......ஒண்ணுவார்—வாகனமாகிய அன்னத்தை யுடையானாகும் தம் மனைவி தங்கிய ஒள்ளிய நாவினாராகிய பிரம தேவர். ஆதி மத்தியம் அந்தம் இல்லார்.

காஞ்சிப்புராணம் கழுவாய்ப்படலம் ௯ ஆவது பாட்டில் “கோதையாதி மெய்யணிந்த கோலமுற்று நீவினுள்” என்பதில் நீவுதல் களைதற் பொருளில் வந்தது காண்க. (௫௧)

இச்சையற்ற யோகர்மனத் தின்மனவர் முன்றிலி
னிச்சலத்தி யானமுறு நெல்லையே—மெச்சுகர்மந்
தேவென்ற மையலார் தீமுனிவர் விட்டமத
மாவென்ற மையலார் வாழ்வு.

மனவர்—மன்னவர். நிச்சல (சலனமில்லாத) நியானம்; நிச்சல் (தினமும்) அத்தி (யானை) யானம் (சிவிகை).

கர்மம் தே என்ற மையலார் (முயற்சியே தெய்வமென்ற மயக்கம் பூண்டவராகிய) முனிவர் (தாருகாவன முனிவர் ஏவி) விட்ட மதமா (யானையை) வென்று அமையலார். (சஉ)

ஏரிலகு பூங்கோம்பு மேண்ணில் பலதீங்கு
நேரிழை யார்க்கடுக்கு நெல்லையே—சீரியகான்
மாறியபண் பாடினன் மாமறை யூரினிற்றே
னூறியபண் பாடின னார்.

நேரிழையார்க் கடுக்கும்—மாதர்களை ஒக்கும்.

நேர் இழையார்க்கு அடுக்கும்-ஒழுங்கானவற்றைச் செய்யார்க்குப் பொருந்தும்.

கால் மாறிய பண்பு ஆடினன்-கால்மாறிய பண்பே ஆடினன். தேன் ஊறிய பண் பாடினன். (சங)

தேடுகுரு வைப்பணியுஞ் சீடர்களு மூர்நடுவு
நீடலைவாய்க் காலுறூஉ நெல்லையே—யாடுந்
திருப்பாப் பரசினர் சேரார்த்தெற் கன்றித்
திருப்பாப் பரசினர் சேர்வு.

நீள் தலைவாய் (சீடர் தலையின்கண்) கால் (குருபாதம்) உறும். நீடு அலை (களையுடைய) வாய்க்கால் உறும்.

(தம்மெய்யில் அணியாகத் தங்கிய) திரு (அழகிய) பாப்பு (பாம்பு) அரசினர். சேரார் (பகைவரைத்) தெற்கன்றி (நமன் திசையன்றி மற்றத் திசையில்) திருப்பா (திருப்பாத) பரசினர் (மழுப்படையார்). (சச)

கூர்சேல் வகுஞ்சேல்வங் கூட்டுபோகு நைப்புனலு
நேர்சேம் பியனண்ணு நெல்லையே—தேர்பல்
விதநோன் புணைதருவார் வெம்பவநீர் நீந்தப்
பதநோன் புணைதருவார் பற்று.

செம்பியன் (சோழன்) நேர் (ஒப்பாக) அண்ணும். நேர் செம்பு இயல் நண்ணும்.

பல்வித நோன்பு உள் நைதருவார் - பலவித விரதங்களால் (உடம்பு) நைபவர்கள். வெம்பவம் நீர் - கொடிய பாவம் ஆகிய சமூத்திரத்தை, நீந்த—நீந்தும்படி, தம் பத நோன் புணை - தம்முடைய பதமாகிய வலிய தெப்பத்தை, தருவார். (சரு)

**மைகுறித்துத் தீட்டிய கண் மாதருக்கு நேய்வோர்க்கு**
**நேய்குழல்வாய்ப் பெய்திடூஉ நேல்லேயே — கைகுவித்து**
**வாயின்முத்த மானார் வணங்குகங்கா ளர்கோயில்**
**வேயின்முத்த மானார் விருப்பு.**

நெய் (யைக்) குழல்வாய் (கூந்தலினிடத்து)ப் பெய்திடும். நெய் குழல் (நெய்வதற்குபயோகமாகிய குழலினுடைய) வாய்ப்பு எய்திடும்.

மானார் — தாருகாவன முனிவர் பன்னியர், வாயில் முத்த (தங்கள் வாயில் முத்தமிட), வணங்கு - பிரார்த்தித்து வணக்கஞ் செய்யப்பட்ட; கோயில்வேயின் முத்தமானார் — சிவாலயத்துள்ள மூங்கிலின் (உண்டானமையால் அதன்) முத்தம் ஆனவர். (சசு)

**கூர்வாஞ்சைவள்ளல்கைக்குங்கோதையர்கள் மென்றோட்கு**
**நேர்வே யெழிலி னையும் நேல்லேயே—நேராரைக்**
**கோலியிட்ட வித்தகத்தன் கூற்றுதைத்தோன் செங்நேலுக்கு**
**வேலியிட்ட வித்தகத்தன் வீடு.**

நேர்வு (கொடுத்தலை) ஏய் (பொருந்திய) எழிலி (மேகம்) யையும் (தோற்று வருந்தும்), நேர் (உவமையாகின்ற) வேய் (மூங்கிலின்) எழில் (அழகு) இனையும் (வருந்தும்).

கோலியிட்டு - வளைந்து, அவித்த-அழித்த, கத்தன். (சஎ)

**பாரிற் சிவனைவந்திப் பாரும்வெய்யோ னுங்காலை**
**நேரத் துதிக்கையுறு நேல்லேயே— சூரற்கோல்**
**சேவ்வே ளுவனத்தன் சேய்மைத் துனனேனக்கோள்**
**சேவ்வே ளுவனத்தன் சேர்வு.**

காலை (சிவபெருமான் திருவடியை) நேர (அருள) துதிக்கை உறும். காலை நேரத்து உதிக்கையுறும்.

சூரற்கொல் (சூரனைக்கொன்ற) செவ்வேள் (சுப்பிரமணியர்) நுவல் நத்தன் (விட்டுணு). (சஅ)

ஓதறிஞர் வேந்தைமின்னா ருண்மனைவி யல்லாரை
நீதங்கை யாயென்னு நெல்லையே—நாதன்
அவிருத் தமனித்த னாய்க்குமரன் சேயாய்
அவிருத் தமனித்த னார்வு.

அறிஞர் வேந்தை நீதம் கையாய் என்னும்—அறிஞராயுள்ளோர் அரசனை நோக்கி நீதியை வெறுத்தல் செய்யாதிருப்பாயாக என்று சொல்லுகிற. அறிஞர் மின்னாருள் மனைவி அல்லாரை நீ தங்கை ஆய் (தாய்) என்னும்,

அ விருத்த மனித்தன் ஆய் குமரன் சேய் ஆய் அவிர்—(மதுரையில்) விருத்த குமார பாலராகி விளங்கிய உத்தமன் சித்தன். (சகூ)

மாரனு மம்பிகையும் வாலியுஞ்சி வந்துதைய
னேரங்கஞ் சம்பூக்கு நெல்லையே—வாரள்ளிற்
செய்யக லாதனத்தன் செய்யக லாதனத்தன்
செய்யக லாதனத்தன் சேர்வு.

சிவந்து (கோபித்து) தையல் நேர் அங்கு அஞ்சு அம்பு ஊக்கும்.

சிவம் (சிவத்தை) துதையல் (நெருங்குதலை) நேர் (பொருந்திய) அங்கம் (திருமேனியினால்) சம் (இன்பத்தை) பூக்கும் (தரிசிப்பார்க்கு உண்டாக்கும்.)

வாவி (தடாகத்தில்) சிவந்து (சிவந்த நிறங்கொண்டு) உதய நேரம் (சூரியோதயகாலத்தில்) கஞ்சம் (தாமரை) பூக்கும் (மலரும்).

வார் அள்ளில்—நீண்ட காதில்; செய் அகலாத நத்தன்-வயல்களினின்றும் நீங்காத (சுபாவத்தையுடைய) சங்கு (க்குழை) உடையவர்.

செய்யகல் ஆதனத்தன் - சிவந்த நிறமுடைய (மேரு) மலையை இருப்பிடமாக வுடையவர்.

செய்யகலாதனத்தன்—செம்மையாகிய கலைகளாகிய தனத்தை யுடையார்.

பூத்தல், பிறவினையாதற்கு வியாயம் பாரதத்தில் முதற் செய்யுளில் "பூக்கு மாமுத லெவனவன் பொன்னடி போற்றி" என்பதிற் காண்க. (௫௦)

சீருறுமில் லங்களினுஞ் செய்யவளச்சோலையினு
நேருறுசெல் வந்துறூஉ நெல்லையே—பாரதனிற்
சுற்றுக்கோ டாஞன் றுயரா வணமேனக்குப்
பற்றுக்கோ டாஞன் பதி.

நேர் உறு (ஒழுங்கான வழியில் வந்த) செல்வம் துறும் (நிறைந்திருக்கின்ற) நேர் உறு (விண்ணில் தன்னெதிருற்ற) செல் (மேகம்) வந்து (தன்பால் வந்து) உறும்.

சுற்றுக்கு ஓடா (ஓடி) நான் துயரா(த) வ(ண்)ணம். (௫௧)

ஈருத்த மாமயல்கோ ளேழை யவன்மேவ
நேரொருப்ப டுக்கீரே னெல்லையே—மேரு
விவர்புடைவை யங்களிப்பா னேழையர்க்கு மால்போற்
கவர்புடைவை யங்களிப்பான் காப்பு.

ஈருத்தமா (இரண்டருத்தமாக) மயல்கொள் ஏழை (மோக முற்ற நாயகி) அவன்மேவ (அவமாக-பயனின்றி) நேர் (தெய்வத்துக்கு நேர்ந்த) ஒரு (ஆட்டை) படுக்கீர் (கொல்லாதீர்கள் என்றும்), அவன் (யான் காதலுற்ற நாயகன்) மேவ (பொருந்தும்படி) நேர் (நேராக) ஒருப்படுக்கீர் (இசையச் செய்கின்றீர்களில்லையே என்றும்) என் (சொல்கின்ற) நெல்லையே.

மேரு இவர் புடை வையம் களிப்பான் மால் போல் ஏழையர்க்குக் கவர் புடைவை அங்கு அளிப்பான்—மஹாமேரு பர்வதம் (தன்னிடத்தே) எழுந்து மேற்கொண் டிருக்கத்தக்க (விசாலமான) இடத்தை யுடைய பூமியின்கண் வாழ்வோர் களிப்படையும்படி, கண்ணன் (கோவியரது ஆடையைக் கவர்ந்து

திரும்பக் கொடுத்தது) போல, (தாமும்) மாதருக்கு(த்தாம்) கவர்ந்த (அவர்களுடைய ஆடையைத் திரும்பக்) கொடுத்தவர். இக்கதை இத் தலபுராணத்துக் கூறப்பட்டுள்ளது. வையம், வையத்து வாழ்வோரைக் குறித்தது. (௩உ)

நேர்வா யமுதமேனு நேயன் றனைமனையா
ணீர்வேட்கை மிக்கீரேன் னெல்லையே—ஏர்வா
யுருவரக்கோன் றிட்டா ருடல்பவர்ப்பேய்க் கூணு
வெருவரக்கோன் றிட்டார் விருப்பு.

(தாகத்துக்குச்) சலங்கொடுப்பாயாக வென்றும் வாயின்க ணுள்ள அமுதந் தருவாயாக வென்றும் சிலேடைப்படக் கூறுங் கணவனை நோக்கி மனையாள் (தாகத்தினால்) தண்ணீர் விருப்ப முடையீரென்றும் நீர் மன்மதனுக்கும் அழகு அதிகமாக உடையீ ரென்றும், இரு பொருள்பட நீர் வேட்கை (வேட்*குஜ) மிக்கீ ரென்று சொல்லுகின்ற நெல்லையே, அழகு வாய்ந்த வடிவு சிவப்புப் பொருந்தியவரும் (எதிர்த்துப்) பொருதோரைப் பேய்க்கு ஊணாக (யாரும்) பயமடையும்படி கொன்று கொடுத்த வருமாகியவர் விரும்பும் இடம்.

உரு அரக்கு (சிவப்பு) ஒன்றிட்டார். (ஒன்றிடுதலை அஃதாவது பொருந்துதலைச் செய்தார்); வெருவர (பயப்பட) கொன்று இட் டார் (கொடுத்தார்). (௩௩)

சித்திரமன் றிற்பத்தர் தேனுரில் லிற்றாதந்
நித்த னடந்திளைக்கு நெல்லையே—சித்தமதிற்
காமத் திகைக்கையார் காணுர்வே தப்பரிமே
லாமத் திகைக்கையா ரார்வு.

நித்தன் நடம் (நடனத்தை) திளைக்கும். நித்தல் நடந்து இளைக்கும்.

---

* இக் 'கு' பிரயோக விவேகம் ௧௬ ஆம் பாட்டுரையில் 'சாத்தற்கு நெடியன்' என்பதன் குப் போல, ஐந்தன் உருபுப் பொருள் தந்தது.

காமத்திகைக்கையார்—காமத்தினது திகைப்பினையுடையார். மதுரையில் வேதங்களைக் குதிரையாக்கி அதன்மேலாய் மத்திகை யென்னும் குதிரைச்சம்மட்டி கொண்டவர். (௨௪)

சீர்தங் கிளைஞர்களெஞ் சிற்செய் சிராத்தத்தி
னேர்தேன் புலத்தாரேய் நெல்லையே—யாதினுமே
வித்தியா சம்பன்னன் மேவா தெனநின்றான்
வித்தியா சம்பன்னன் வீடு.

நேர் (தனக்கு நேர்தானான) தென் பு(ல்)ல(அழகுபொருந்த) தார் ஏய். நேர் (நேராக) தென்புலத்தார் ஏய்

வித்தியாசம் பன்னல் (சொல்லுதல்) மேவாது (அமையாது) என நின்றான். (௨௫)

வாளாளார் கார்க்சலவை மார்டள்ளு மேலுநேர்
நீளா சலமரூஉ நெல்லையே—கேளார்ச
மூகமொழிப் பித்தனத்தன் மோகினியா கப்புணர்ந்த
வேகமொழிப் பித்தனத்த னில்.

வாள்வீரர் கார்க்கலவைமார்பு—(கஸ்தூரி மிகக்கலந்த) கறுப்புக்கலவை பூசிய மார்பு, உள்(ளே) நேர் (உண்டாகும்) நீள் (மிகுந்த) ஆசு (குற்றம்) அலமரூஉம் (தரிக்கமாட்டாது), வருந் தும் மேல் (வெளிப்புறம்) நேர் (ஒப்பாக) நீளாசலம் (நீலமலை) மரூஉம் (மருவும்).

நீளாசலம்:—"நீல" "அசலம்" என்ற பதங்கள் வடமொழிச் சந்திப்படி "நீலாசலம்" ஆகி அப்பாலவுயில் லகர ளகர பேத மின்மைபற்றி "நீளாசலம்" ஆயின.

கேளார் (பகைவரது) சமூகம் (கூட்டத்தை) ஒழிப்பித்த நத்தன். ஏக மொழி (ஒருசொல்: அஃதாவது மாறாத சத்தியவாக் குடைய) பித்தன் அத்தன். (௨௬)

தேறசிவ பூசைசெயுஞ் சிட்டருமன் னோர்வினையு
நீறபட்டு டையுறாஉ நெல்லையே—வீறசடை
யந்தரப்பே ரம்பெய்தா ராலவாய்க் கண்மேனாள்
சுந்தரப்பே ரம்பெய்தார் சூழ்வு.

நீறு (விபூதி) பட்டு உடை (வஸ்திரம்.) நீறுபட்டு உடை (தலை)யுறும்.

சடை(யில்) அந்தரப் பேர் அம் (ஆகாயத்துப் பெருநீராகிய கங்காசலத்தை) பெய்தார். (௩எ)

தேசிவரும் வீரர்களின் றெவ்வருமின் ஞர்நகையு
நேரினிலாத் தோற்றிடூஉ நெல்லையே—வாரியோடு
விந்தமடக் கங்கையார் மேச்சுபுக ழார்சடையிற்
சந்தமடக் கங்கையார் சார்வு.

தேர்இவரும்—தேரேறும். வீரர்களின்தெவ்வர்—வீரர்களின் பகைவர், நேரில் நில்லாத் தோற்றிடும்—நேரில் நிற்கமாட்டாமல் தோற்றுவிடும். நேரில்—ஒப்பற்ற. நிலா — சந்திரிகை, தோற்றிடும்—தோன்றும்படிசெய்யும்.

வாரியொடு விந்தம் அடக்கு அங்கையார்—கும்பமுனி. சந்த (அழகிய) மட (இளமையுடைய) கங்கையார். (௩அ)

பாரேத்தில் லங்கோல்லைப் பான்மடவார் நாயகர்பா
னீராவி யென்றுமுறு நெல்லையே—சீராகு
மாலவாய்க் கூடலா ரவ்வணிக மாதரார்
மேலவாய்க் கூடலார் வீடு.

பார் ஏத்து இல்லம் கொல்லைப்பால் நீராவி என்றும் உறும்—பூவுலகோர் புகழும் (அழகுவாய்ந்த) வீடுகள் பின்பக்கத்துள்ள தோட்டங்களில் தடாகத்தை எக்காலத்தும் உறும். மடவார் நாயகர் பால் நீர் ஆவி என்றும் உறும்—மாதர் தங்கள் புருடரிடத்தில்(வேறு வகையாக விதந்துகூறி உரிமை பாராட்டலன்றி) நீர் உயிர்போல்வீர் என்று சொல்லியும் அடையும்.

ஆலவாய்க்கூடலார்—மதுரையுடையார். அவ்வணிகமாதரார்—மதுரைச் செட்டிப்பெண்கள்மேல் அவாய் (அவாவிக்) கூடலார் (சேராதவர்). (௩௧)

**வாடைகோய்வா ழைபார் மகளா ரமராடி**
**நீடமுது காற்றுறூஉ நெல்லையே — கூட**
**லிடையரைய ராஞ ரிடையரைய ராஞ**
**ரிடையரைய ராஞ ரிடம்.**

வாடை அமர் ஆடி நீட மூதுகாற்று உறும்—தெருக்கள், அமர்ந்த ஆடிமாதம் மிகவும், பெருங்காற்றடிக்கப்படும்.

கொய்வாழை அம் மராடி நீடு அமுது காற்றுறும்—(தண்டி னிமித்தம்) அரியப்பட்ட வாழைகள் அந்த மரங்களின் (அரியுண்ட) அடியை நெடும்பொழுது சலத்தைக் காலச்செய்யும்.

[மர அடி, மராடி என ஆன்றோர் ஆட்சிபற்றிக் கூறப்பட்டது]

பார்மகளார் அமர் ஆடி நீள் தம் மூதுகு ஆற்றுறும்—பூமி தேவியார் சண்டை செய்யப்பட்டு மூதுகு ஆற்றுதல் உறும்.

கூடல் இடை அரையர் ஆனூர்—மதுரையின்கண் அரசராய் நீங்காதவர்; இடையர் ஐயர் ஆனூர் இடையர் ஐயர் ஆனூர்—கோபாலனான விட்டுணு, வேதியனூர் பிரமன் (ஆகிய இருவருடைய) மத்தியில் வீற்றிருப்பவர் (அவ்விருவருக்கும் மற்றெல்லாருக்கும்) பிதா, இடபவாகனத்தை யுடையவர்.

திருவிளையாடற் புராணம் திருமணப்படலத்தில் கங்சு வது பாட்டில் "வலத்தயன் வரவுகாணுள் மாலிடங் காணுள்" என வருவது நோக்குக. (சுo)

**ஆதிபனை வாதியுமா தியன் வாதியையு**
**நீதிகைப் பற்றுறுகேன் னெல்லையே—ஓதிக்**
**கரிக்குருவி கற்பித்தார் கார்நிறநாற் கோட்டுக்**
**கரிக்குருவி கற்பித்தார் காப்பு.**

நீதி கைப்பற்றுறுக—நீதியைக் கைப்பற்றிடுக. நீ திகைப்பு அற்று உறுக.

ஓதி (உபதேசித்து)க் கரிக்குருவி கற்பித்தார் (கற்பச்செய்தார்). கார்நிற நாற்கோட்டுக் கரிக்கு உரு விகற்பித்தார்—(துருவாசமுனிவரர் சாபத்தால்) கரியநிறமடைந்த நான்குகோட்டை

யுடைய (அயிராவதம் என்னும்) யானைக்குக் (கரிய) உருவம் (வெண்மையாக) மாறும்படி செய்தார். (சுக)

ஆரமுலை யாலிடையில் லாள்புலப்பாற் கேண்மிகவெங்
கேரமுனை யுற்றிடத்தாழ் நெல்லையே—நீரோடுபுல்
கல்லேற்றுக் கூட்டினார் காற்கணன்ப ரைப்புகழுஞ்
சொல்லேற்றுக் கூட்டினார் சூழ்வு.

ஆரமுலையால் இடை மிக எந்நேரமும் நையுற்றிடத்தாழ்— ஆரமணிந்த தன (பார) த்தால் இடை மிகவும் எந்நேரமும் நையும்படி தாழுகின்ற.

இல்லாள் புலப்பால் கேள் மிக வெந்நேர முன்னை உற்றிடத் தாழ்—மனையாள் புலவியால் மிகவும் முதுகினைக் காட்ட, முன் பக்கத்தை அடையும்படி கணவன் வணங்குகின்ற.

நீரொடு புல்லைக் கல்வினாலாய இடபத்துக்கு ஊட்டினார். இத்தலபுராணத்தில் வடபுலத்துக் கெவுடன்வந்த சருக்கத்தைப் பார்க்க. காற்கண்—திருவடியில். (சுஉ)

மாரிவரு முன்வருகேள் வன்றேரு மக்கேளு
நேரி யனைப்போருவு நெல்லையே—சேரனுக்கு
மாதுரி யங்கடந்தார் வண்பா சுரமுய்த்தார்
மாதுரி யங்கடந்தார் வாழ்வு.

நேரியல் நைப்பு (துன்பத்தை) ஒருவும் (நீக்கும்). சீவகசிந்தாமணி சுரமஞ்சரியாரிலம்பகம் "தாசியர்" என்னும் பாட்டிலும், முத்தியிலம்பகம் "காடியாட்டி" என்னும் பாட்டிலும், மண்மகளிலம்பகம் "கூற்றெனவேழம்" என்னும் பாட்டிலும் முறையே பேதுறுக்காது, வாயுறுத்து, வீழ்க்கா (அஃதாவது வீழ்த்து) என்னும் பிறவினைப் பொருள்களில் பேதுறுது, வாயுறீஇ, வீழா என்பவை வழங்கப்பட் டிருத்தல்போல, ஈண்டு ஒருவு என்னும் தன்வினை ஒருவுவிக்கும் என்னும் பிறவினைப்பொருளை உணர்த்திற்று. திருவானைக்காப்புராணம் நாட்டுப்படலம் "பருவநோக்கி" என்னும் பாட்டில் "களையெலா மொருவுசெவ்வி" என்

பதில் ஒருவு ஒருவுவி என்னும் பொருளில் வருவதுங் காண்க. மதுரைக்காஞ்சி சகூஅ-வது அடியில் 'பழியை நீக்கி' என்னும் பொருளுடைய 'பழி ஓரீஇ' என்பதையும் பார்க்க.

நொய்ம்மை அல்லது மென்மை யென்னும் பொருளுடைய நேர்மை, இயல் என்னும் பதத்தோடு புணர்ந்து, நேரியல் என்றாகி (மென்மை இயல் என்னும் பதங்கள் புணர்ந்தாய) மெல்லியல் போலப் பெண்ணை யுணர்த்திற்று.

மாதுரியங்கள் தந்து ஆர் (கின்ற). மா துர்யம் (என்னும் அவத்தையைக்) கடந்தார். (சுங)

மேய விருந்தினரு மேதக்க நண்பினரு
நேய மனமடுக்கு நெல்லையே—காய்விற்
செருவுள்ளம் பற்றார் சிவணவன்பற் றார்க்குத்
திருவுள்ளம் பற்றார் செறிவு.

நேயமனம் (சிநேககுணமுடையமனம்) அடுக்கும். நேயம் (நெய்) அன்னம் மடுக்கும்.

காய்விற் செருவுள் அம்பு அற்றார் சிவண அன்பு அற்றார்க்கு-விற்போரில் அம்பில்லாதா ரொப்ப (காமக்குரோதாதி பகைவருடன் பொரும்போரில்) அன்பு இல்லார்க்கு, திருவுள்ளம் பற்றார் - அருளார். செறிவு—நெருங்கியிருக்கும் இடம். (சுச)

என்றும்விருந் தேற்பாரு மேழையர்கா தும்மளவா
நின்றவிருந் தோடுவந்தார் நெல்லையே—துன்றும்
புரிவார் சடையார் புரிவார்க்கின் பென்றும்
புரிவார் சடையார் புரி.

அளவாநின்ற—(அன்போடு) கலவாநின்ற. விருந்தோடு உவந்து ஆர் (புசிக்கின்ற). அளவா நின்று (காதுக்கு) அளவாக நின்று அவிரும் தோடு வந்து ஆர் (தங்குகின்ற).

புரி வார் சடையார்—கட்டப்பெற்ற நீண்ட சடையுடையார். புரிவார்க்கு—விரும்புவோர்க்கு, இன்பு என்றும் புரிவார், சடையார் (இன்பு புரியச் சடையாதவர்). (சுரு)

நீர்நசையுந் தெவ்வருயிர் நீங்காமை யுந்தோற்ற
நீரிற்புல் வாய்க்கவியா நெல்லையே—சேரும்
பொருப்புக் கொடிச்சியான் போற்றுதந்தை பொல்லார்
விருப்புக் கொடிச்சியான் வீடு.

நீர் நசை தோற்ற நீரில் புல்வாய்க்கு அவியா—தண்ணீர் விருப்பமாகிய தாகம் கண்ணுக்கு நீராகத் தோற்றுகிற கானற் சலத்தால் தணியாத.

தெவ்வர் உயிர் நீங்காமை தோற்ற நீரில் புல் வாய்க் கவ்வி ஆம்—பகைவரது உயிர் நீங்காமையான து அவர்கள் தோல்வி யடைந்த தன்மையிலே புல்லை வாயினிடத்துக் கௌவி ஆகும்.

பொருப்புக் கொடிச்சியார்—மலையில் வாழ்ந்த வேட்டுவ மாதாகிய வள்ளி நாயகியை யுடையார். விருப்புக் கொடு இச் சியார்—விருப்பை (அங்கீகரித்துக்) கொண்டு (அவர்களை) விரும் பார். (கூகூ)

தேர்சித்தர் வேட்டனவுந் தேமொழியார் கூட்டமது
நேர்சித் தினியையுறு நெல்லையே — காருற்
பலக்கணுடைப் பார்வதியார் பாகரன்பி லார்நெஞ்
சலக்கணுடைப் பார்வதியா ரார்வு.

நேர் (கிடைத்த) சித்தின் (சித்தினால்) இயைஉறும். நேர் (பொருந்திய) சித்தினியை (நால்வகைப் பெண்களுளொரு வகுப் பினளை) உறும்.

கார் (கருநிறமுடைய) உற்பலம் (நீலோற்பலம் போன்ற) கண்(ணை) யுடை(ய). நெஞ்சு அலக்கண் உடைப்பார் (ஆகி) வதியார். (கூஎ)

தெய்வீக வாலயத்துத் தீபந் தறியுடைமை
நெய்வார்த் தெரித்திடூஉ நெல்லையே—செய்ய
குளக்கண் முளரியார் குற்றால வாணர்
குளக்கண் முளரியார் கோடு.

தீபம் நெய் வார்த்து எரிக்கப்படும், (நெய்யும்) தறியுடைமை நெய்வாரைத் தெரியும்படி செய்யும்.

குளக்கண் (குளங்களில்) முளரி (தாமரை) ஆர் (நிறைந்த). குளக்கண் (நெற்றிக்கண்) முளரியார் (அக்கினியையுடையார்.)

(கூஅ)

நாரியர்சீர் தேர்ந்துமண நாடுநர்க்கு மிந்நூற்கு
நேரிசைவெண் பாவைதுறு நெல்லையே—யேரிசைவெள்
அன்னஞ்சு னைத்தலையா ராரூர்க் கன்பர்வெய்ய
அன்னஞ்சு னைத்தலையா ரார்வு.

நேர் இசைவு (சம்மதத்தை) எண் (ணுகின்ற) பாவை(மாது) துறும் (மனைவியாகப் பொருந்தும்).

இந்நூற்கு (இந்த நெல்லைவெண்பாவுக்கு) நேரிசைவெண்பா ஐது (அழகிதாக) உறும் (பொருந்தும்).

ஏர் இசை வெள் அன்னம் சுனைத்தலை (தடாகத்தினிடத்து) ஆர். அல் (இருண்ட) நஞ்சு னைத்து அலையார் (அலைக்கப்படார்).

(கூகூ)

நாரியரும் யாசகரு நாமகள்கச் சுங்கஞ்ச
னேரக் கழல்கையுறூஉ நெல்லையே—நாரணன்கண்
ணப்பனக ளுரிய னப்பனக ளுரிய
னப்பனக ளுரிய னூர்வு.

நாரியர் கஞ்சம் சேரக் கழல் கை உறும்—மாதர்கள் தாமரை மலரை நிகரக் காலும் கையும் பொருந்தும்.

யாசகர் கஞ்சன் நேர் அக்கு அழல்கை உறும்—இரப்போர் உலோபியின் எதிரில் (அவன் கொடாமையால் கோபங்கொண்டு) கண் அழலுதலைப் பொருந்தும்.

நாமகள் கச்சு கஞ்சன் நேரக் கழல்கை உறும்—சரசுவதியின் கச்சு பிரமன் எதிர்பட (அவள் தேகம் பூரித்ததால் அக் கச்சின் பூட்டுவிட்டு) நெகிழ்தலையுறும்.

நாரணன் கண் அப்பு அனகன் ஆரியன்—விட்டுணு கண்ணை (த்தாமரைமலராக)ச் சாத்தப்பெற்ற கடவுள், பூசித்தற்குரியர். அப்பன் நகநாரியன்—பிதா, மலைமகளாகிய பார்வதியையுடையார். அப்ப(ன்) னக்காரியன்—அந்தப் பாம்பு நாணியையுடையார்.

(எ0)

தின்னப் புதுக்கனியே தேடுநுங் கூர்விளைவு
நென்னற் பழனத்தா நெல்லையே—முன்னோர்
பெருவருத்தப் பாட்டினன் பேணச்சொல் கொங்கேன்
றிருவருத்தப் பாட்டினன் சேர்வு.

நென்னல் பழம் நத்தா—நேற்றைக்கனியை விரும்பா—அன்று பழுத்த பழத்தை விரும்பும்.

கூர் விளைவு—மிகு விளைவு, நெல் நல் பழனத்து ஆம்-நெற் பயிரிடும் நல்ல வயலின்கண் உண்டாம்.

முன் ஓர் பெரு வருத்தப்பாட்டினன் பேண—முன் ஒரு பெரிய வருத்தப்பாட்டையுடையானாகிய தருமி விரும்ப, சொல் (லிய), கொங்கேன்—"கொங்குதேர்" என்ற, திரு அருத்தப் பாட்டினன்-அழகிய பொருளையுடைய பாட்டினர். பாட்டைச் சொன்னன் எனற்பாலது சொல்பாட்டினன் எனப்பட்டது அஉ ஆவது பாட்டுரையைப் பார்க்க. (எக)

போரி னணியிற் புறங்கொடுப்பா ரைக்குமரர்
நீரினுரை நேர்விரென நெல்லையே—பாரிமுலை
மாவடு வைத்தகத்தன் மார்பின்வைத்தான் வன்னியின்
மாவடு வைத்தகத்தன் வாழ்வு. [முன்

போரில் புறங்கொடுப்பாரைக் குமரர் நீரில் நுரை நேர்விர் எனும்-யுத்தத்திலே (தோற்று) முதுகு கொடுக்கும் பகைவரை நோக்கிக் குமராயுள்ளோர் நீரிலே நுரை கேவலமானது போல மக்களுள் இழிந்தீர்களென்று சொல்லும்.

அணியிற் புறங்கொடுப்பாரைக் குமரர் நீர் இன் உரை நேர்விர் எனும்—அணியிலே (புலவியால்) முதுகுகாட்டும் நாயகிகளைக் காளையர்கள் நீங்கள் இனியமொழி யருள்வீர்களாக என்று சொல்லும்.

பாரி முலை மா வடுவைத் தகத் தன் மார்பின் வைத்தான்—தேவியாரது தனங்களாலாய பெரிய தழும்பைத் தகுதியாகத் தமது மார்பின் வைத்தவர். வன்னியின் முன் மா வடு வைத்த

கத்தன்—இத்தலத்துச் சிவாலயத்தின்கண் உள்ள வன்னிமரத்தில் மாம்பிஞ்சு உண்டாகும்படி செய்தவர். இத் தலபுராணத்தில் வடபுலத்துக் கெவுடன் வந்த சருக்கத்தைப் பார்க்க. (எ௨)

**தேர்கலைகற் பார்நெஞ்சுந் தேம்பொழிலின் மீமிசையு**
**நேர்கருமஞ் சாடியுறு நெல்லையே—கூர்கரிய**
**மேதிக் கடாவினன் வெம்பவன்பற் செற்றதென்னென்**
**றோதிக் கடாவின ணூர்.**

நேர் (சம்பவிக்கின்ற) கருமம் (கன்மத்தை) சாடி (தாக்கியொழித்து) உறும். நேர் (எதிர்வந்த) கருமஞ்சு (மேகம்) ஆடி உறும்.

மேதிக் கடாவினன்-யமன். கடாவினன்-வினவினன். (எ௩)

**தேர்புலவோ ருங்குருடாற் றீக்கைசெய்து கொள்வோனு**
**நேர்புதனை யுங்கொடுக்கு நெல்லையே—சோர்பின்றி**
**வாகாய கங்கையினர் வன்னியுடை யார்சடையா**
**ராகாய கங்கையின ரார்வு.**

நேர் புதனை உங்கு ஒடுக்கும். நேர்பு (சம்மதித்து) (உடல் பொருளோடு) தன்னையும் கொடுக்கும்.

சோர்பின்றி—தளர்தலின்றி. வாகாய் அகங்கையின் ஆர் வன்னி (நெருப்பு) உடையார், சடை (யின்கண்) ஆர் ஆகாய கங்கையினர். (எ௪)

**கார்சேர்கௌ மாரருக்கு நற்சைவர்க் கும்மனத்தே**
**நேர்சே வலவனுறு நெல்லையே—நீர்சோறுண்**
**டூன்றுறுகோ லங்காவா ரொண்பதமே போற்றிடுவார்க்**
**கூன்றுறுகோ லங்காவா ரூர்.**

கௌமாரர்—சுப்பிரமணிய பத்தர். சேவலவன் (கொடியாகிய) சேவலையுடையவன். சே-இடபம். வலவன்—ஊர்பவன்.

ஊன் (தசை) துறு (நிறைந்த) கோலம் (உடலைக்) காவார் (ஆகி) ஒண்பதமே (தமது ஒள்ளிய பாதத்தையே) போற்றிடுவார்க்கு ஊன்றுறு (ஊன்றுகின்ற) கோல் அங்கு ஆவார். (எ௫)

ஏற்றசைவா சாரியரு மில்லஞ் சமைப்பவரு
நீற்றிற் சுவர்க்கநல்கு நெல்லையே—நோற்றக்
கணித்திரைம யக்கமுற்றார் காண்பவர்சென் னிக்கண்
மணித்திரைம யக்கமுற்றார் வாழ்வு.

நீற்றில் (விபூதியினால்) சுவர்க்கம் நல்கும். நீற்றில் (சுண்ணாம்பினால்) சுவர்க்கு (சுவருக்கு) அம் (அழகு) நல்கும்.

கண் ணித்திரை மயக்கம் முற்றார் (முதிராதவர்) (யோகத்தில்) காண்பவர். மணித் திரை மயக்கம் (மயமாகிய சலம்) உற்றார். (எசு)

ஐதமரும் வாச்சியசா லையிலன்ன சத்திரத்தி
னெய்தனிலத் தியாழுறாஉ நெல்லையே—கைதங்கி
வீணாகா நத்தன் விழியணிவான் கூடலிற்செய்
வீணாகா நத்தன் விருப்பு.

ஐது அமரும் வாச்சியசாலையில் — அழகிதாயமர்ந்த வாச்சிய சாலையில், நெய்தல் நிலத்து யாழ் உறும்—(மற்றவாச்சியங்களுடன்) நெய்தனிலத்து யாழும் உறும்.

அன்னசத்திரத்தில் நெய்தன்னில் (நெய்யில்) அத்தி (யானை) ஆழுறும் (முழுகும்). நெய் மிகுந்திருக்கும் என்றபடி.

கைதங்கி வீண் ஆகா நத்தன்—(விட்டுணுவாகிய தம்முடைய) கையிற் றரிக்கப்பெற்றமையால் வீணாகாது பயன்பட (பஞ்சசனன் என்பாகிய) பாஞ்சசன்னியத்தை யுடையவர். பாஞ்சசன்னியத்தின் வரலாறு காஞ்சிப்புராணத்தில் மச்சிகப்படலத்தில் "சங்க நேருக்குப் பஞ்ச சனப்பெயர்—வெங்க ணானையுமாயிடை-வீட்டியே துங்க வோசை வலம்புரித் தோற்றமா-மங்க வன்ற னெலும்பை யணிந்தனன்" என்னும் பாட்டிற் காண்க.

கூடலிற் செய் வீணா கானத்தன்—மதுரையில் (பாணபத்தர்க்கடிமையாய்) வீணா கானஞ் செய்தவர். (எஎ)

வீரருக்குப் போரினும்பாய் மீதினுமின் னார்செவ்வாய்
நேரமுது கிட்டிடுமே நெல்லையே—பாரக்
கடலைக் கடைகையார் காவெனக்காத் தாடச்
சுடலைக் கடைகையார் சூழ்வு

வீரருக்குப் போரின் இன்னார் செவ்வாய் நேர முது கிட்டிடும்—வீரர்களுக்கு யுத்தத்திலே பகைவராயுள்ளோர் நன்றாக (அவ்வீரர்கள்) போர்செய்யவே (தோற்றுப்) புறங்காட்டியோடும்.

வீரருக்கு பாய் மீதின் (பாயல்மேலே) மின்னார் (முன்னூடிச் சேராதிருந்த மாதர்) செவ்வாய் (சிவந்த வாய்) நேர்அமுது (கொடுக்கும் அதராமிர்தம்) கிட்டிடும் (கிடைக்கும்).

கடலை கடை கையார்—திருமால். சடலைக்கு அடைகையார்.

(எஅ)

நண்டகையாண் ஞெண்டும்பூ நாகமும ரும்பேட்டு
ஞெண்டுடம்ப டுத்தணையு நெல்லையே—தொண்டர்க்
கினிதவனி வந்தவ ரெண்கணன்கா ணுமே
நனிதவனி வந்தவர் நாடு.

நண்தகை ஆண்ஞெண்டு அரும் பேட்டு ஞெண்டு உடம்படுத்து அணையும்—சேரும் விருப்பம் பொருந்திய ஆண்நண்டு அரிய பெடை நண்டை இசையச்செய்து சேரும்.

பூநாகம் அரும்பு ஏட்டு ஞெண்டு உடம்பு அடுத்து அணையும்—பூவில் வாசஞ்செய்யும் நாகம் பூவரும்புகளின் இதழ்களில் இளைக்குந் தன்மையுடைய உடம்பைப் பொருந்திச்சேரும். ஞெண்டல்இளைத்தற் பொருட்டென்பது நிகண்டில் க ஆவது தொகுதியிற் "ஈறலே" என்னும் கவியிற் காண்க.

இரண்டு கண் உடைய) தொண்டர்க்கு (ஆக அவர்கள் காணும்படி) இனிது அவனி (பூமியின்கண்) வந்தவர். என் கண்ணன் எட்டுக்கண் உள்ள பிரமன்) காணுமே (காணுமல்) நனி தவ (மிகவும் அதிகமாக) நிவந்தவர் உயர்ந்தவர்).

(எக)

நாரியர்க வானு நகிலுநெஞ்ச மும்மாலை
நேரம் பிடிக்கையுறு நெல்லையே—யாரணத்தி
னந்தரங்கத் தானனத்தா னந்தரங்கத் தானனத்தா
னந்தரங்கத் தானனத்தா னூர்வு.

நாரியர் கவான் மாலை நேர் அம் பிடிக் கை உறும்—மாதர் தொடையின் ஒழுங்கான உவமானமாக அழகிய பெட்டை யானைத்துதிக்கை உறும்.

நாரியர் நகில் மாலை நேரம் பிடிக்கை உறும் — மாதரதுதனம் அந்திநேரத்தில் (நாயகரால்) பிடிக்கப்படுதலை யுறும்.

நாரியர் நெஞ்சம் மாலை நேர் அம்பு இடிக்கை உறும்— மாதரது மனம் காமத்தைத் தருகின்ற (மன்மதனுடைய பூ) அம்பி னால் தாக்கப்படுதலை யுறும்.

ஆரணத்தின் அந்த ரகத்து ஆனனத்தன்—வேதங்களினது அழகிய நடனசாலை (யாகிய நாவினை) யுடைய முகத்தை யுடையார் (ஆகிய பிரமதேவர்).

அம் தரங்கத் தான நத்தன்—அழகிய கடலைத் தானமாக வுடைய விட்டுணு, (இவ்விருவருடைய) அந்தரங்கத்தான் நனத்தன்—அந்தரங்கத்தில் உள்ளவர் (ஆகி எங்கும் வியாபித்த) விசாலமுடையார். நனம் விசாலப்பொருட்டென்பது பத்துப் பாட்டில் முல்லைப்பாட்டில் முதலடியில் வரும் நனந்தலைக்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையிற்காண்க. (௨0)

காமனுமே வேட்குமணங் காருமவர் கண்களு
நேமவுணர் வைப்படுக்கு நெல்லையே—தேமலரோ
னுச்சிதா னந்த னுயர்பதந்தான ரேடநின்ற
சச்சிதா னந்தன் றலம்.

நே (அன்புடைய) மவுணர் (நாயகர்) வைப்பு (இருப் பிடத்தை) அடுக்கும். நேம உணர்வைப் படுக்கும் (படும்படி செய்யும்).

தேமலரோன்......நின்ற—பிரமன் சிரத்தையும், விட்டுணு பாதத்தையும் தேடும்படி (தழற்பருவதமாக) நின்ற. (௨க)

ஏர்மிக்க கேளையில்லு மில்லவளைக் கேள்வனுமுன்
னீர்முத்தந் தாரீரேன் னெல்லையே — சேர்முத்தி
மாசுபத வம்படையார் மாட்டுநல்கா ரர்ச்சுனற்கீ
பாசுபத வம்படையார் பற்று.

கேள்-புருடன். இல்—மனைவி. முன்னீர் முத்து அம் தாரீர் என் — கடற்கணுண்டாகிய முத்துகளாலாய அழகிய மாலையுடையவரே என்கின்ற. முன் நீர் முத்தம் தாரீர்—முதலில் நீர் முத்தம் கொடும்.

முத்தி (யை) மா (பெரிய) சுப (மான) தவம் (தவத்தைப்) படையார் மாட்டு (இடத்தில்) நல்கார் (கொடுக்காதவர்). ஈ(ந்த) பாசுபத அம் படையார்.

இலக்கணகொத்து ஒழிபியல் கoஅ ஆவது சூத்திரத்துரையில் வேள்விசெய்தவன் எனற்பாலது செய்தவேள்வியன் என வருமென்றதுபோல அருச்சுனனுக்குப் பாசுபத அம் படை ஈந்தார் என்பது அருச்சுனனுக்கு ஈ(ந்த) பாசுபத அம் படையார் எனப் பட்டது. (அஉ)

போர்நவில்க ளத்தின்மயிர் போற்றுமபி மானிநெஞ்சி
னேர்நரைவாட் டாக்கழிக்கு நெல்லையே — கார்நஞ்சுண்
வாய்ப்ப வளத்தத்தன் மாயவற்குத் தங்கையெனு
வாய்ப்ப வளத்தத்தன் வாழ்வு.

போர் நவில் களத்தில் நேர்நரை வாள் தாக்கு அழிக்கும்—யுத்தஞ்செய்யும் போர்களத்தில் பொருவோரை வாள்களினது தாக்குதல் அழியும்படி செய்யும். "நவிலல் சொல்லுதல் பண்ணற் பேர்" (நிகண்டு).

மயிர் போற்றும் அபிமானி நெஞ்சில் நேர் நரை வாட்டாக் கழிக்கும் - மயிரைப்பேணும் அபிமானமுடையார் மனதில் (அவர்களுக்கு) உண்டாகும் நரையானது வாட்டி (அவர்களை)க் கழியும்படி செய்யும்.

*கார்நஞ்சு உண் வாய்ப் பவளத்து அத்தன். வாய்ப்பவளத்தன் (பாதியை யுடையார்).* (அ௩)

மேச்சு மூனிவரரு மெய்ஞ்ஞான தேசிக்கு
நிச்சத்த போதனஞ்செய் நெல்லையே — யிச்சை
யுளத்திருத்தஞ் செய்வார்க் குடல்பொடித்தா ரென்னை
மேளத்திருத்தஞ் செய்வார்க்கு வீடு.

*நிச்சத் தபோதனம் செய்—நித்தியமான தவமாகிய பொருளைத் தேடும். சிவகசிந்தாமணி விமலையாரிலம்பகம் "வென்றியாக்கலும்" என்னும் பாட்டினுரையில் நச்சினார்க்கினியர், செய்தல்—தேடுதலெனப் பொருள் கூறி யிருப்பது காண்க. தவமே தனமாக உடையார் என்னும் பொருளில் தபோதனர் என்னும் மொழிவழங்குதல் உண்டு. முனிவர் வாசம்செய்யும் வனங்கள் தபோவனங்களென்று கூறப்படுகின்றன. தபோநிதி தபோபலம் என்னும் பதங்களும் வழங்குகின்றன.*

*நிச்சத்த போதனஞ்செய்—சத்தமில்லாத போதித்தலைச் செய்கின்ற. திருவிளையாடற்புராணம் கடவுள் வாழ்த்தில் "கல்லாலின்" என்னும் பாட்டில் "சொல்லாமற் சொன்னவனை" என்றதை ஒத்திட்டு நோக்குக.*

*இச்சை (காமத்தை) உள்ளத்து இருத்து அஞ்சு (பூங்கணை) எய்வார். மெள்ளத் திருத்தஞ் செய்வார்.* (அச)

தாரார் வயவர்மூனுந் தன்பாற் பலவையினு
நேரார் மறுகுறூஉ நெல்லையே — சேர்தாள்
மனத்தெழுதப் பட்டார் வழுத்துவந்தன் னார்க்குக்
கனத்தெழுதப் பட்டார் களன்.

*தார் ஆர் வயவர்—சேனையையுடைய வீரர். நேரார் மறுகுறும் — சத்துருக்கள் மறுகும். தன்பால் — திருநெல்வேலியில். நேர் ஆர் மறுகு உறும்—ஒழுங்காக அமைந்த தெருக்கள் உறும்.*

*சேர் (இடைவிடாது சிந்திக்கப்பெற்ற) தாள் (தம் திருவடிகளே) மனத்து எழுதப்பட்டார் (எழுதப்பட்டனபோல நீங்*

காது வைக்கப்பெற்றவர்கள்). கனத்து, எழு(கின்ற) தப்பு அட்டார். (அ௫)

தேர்காட்டு சேனையுமச் சேனையினே மூந்தூளு
நேர்காற் றுவசமுறு நெல்லையே—வார்காதிற்
றோடலங்கம் பைகத்தன் றோய்வார் பவமோழிக்கும்
பாடலங்கம் பைக்கத்தன் பற்று.

சேனை நேர் கால் துவசம் உறும்—சேனை போர் செய்யுங் காலத்தில் கொடியைப் பொருந்தியிருக்கும். அச்சேனையின் எழும் தூளும் நேர் (எதிர் அடிக்கின்ற) காற்று வசம் உறும்.

வார் காதில் தோடு அலங்கு (அசைகின்ற அம்பைக்கு (உமா தேவிக்கு) அத்தன் (பாதியானவர்). அம்பை, உமாதேவிக் கொரு நாமமென்பது காஞ்சிப்புராணம் நகரப்படலம் கஉ௯ ஆவது பாட்டில் "அலக்கணீத் தறமெண் ணன்கு மம்பையே வளர்க்கு நீரால்" என்பதா லறிக.

பாடலங் கம்பை (யென்னும் தீர்த்தத்தையுடைய) கத்தன். பாடலங் கம்பையைப்பற்றி இந்தத் தலபுராணத்தைப் பார்க்க. (அசு)

தையலரு மெய்யறிவாற் சாரங்கோள் ளார்மனமு
நெய்யரியிற் கோதையுறு நெல்லையே—மையலையோர்
வேதியன்றீ ரப்பணினன் வேணியில்விண் ணின்றும்மண்
மீதியன்றீ ரப்பணினன் வீடு.

தையலர் நெய் அரி இன் கோதை உறும்—மாதர் நெய்யையும் வண்டுகளையும் உடைய கூந்தலைப் பொருந்தியிருக்கும்.

மனம் நெய்யரி இன் கோதை உறும்—மனமானது பன்னாடையைப்போலச் (சாரத்தை ஒழுக விட்டுச்) சக்கையைப் பொருந்தும்.

மையலை ஓர் வேதியன் தீரப் பண்ணினன். இத் தலபுராணத்தில் காமவேதியனுக்குக் காமவேட்கை தீர்த்த சருக்கத்தைப் பார்க்க.

விண் நின்றும் மண்மீது இயன்று (அம்மண்ணை) ஈர் அப்பு (சலமாகிய கங்கையை) வேணியில் அணிந்தான். (அஎ)

கோடீர்க்குங் கல்விகற்றுக் கோள்ளுவோர் போற்றாவி
நீடேர்ச் சிகைக்கணுறு நெல்லையே...பீடார்ந்த
செவ்விசா லாட்சியார் சேர்பாகர் கூடலிற்செய்
செவ்விசா லாட்சியார் சேர்வு.

கோள் தீர்க்கும் நீள் (உயர்ந்த) தேர்ச்சி கைக்கு அ(ண்)ணுறும். நீள் (ஓடும்) தேர் சிகைக்கண் உறும்.

செவ் விசாலாட்சியார், செவ்விசால் ஆட்சியார். (அஅ)

ஓர்சொல்லி னோர்தங்க ளுண்மையும்வ யல்வளமு
நேர்சொல்லிக் காக்குறூஉ நெல்லையே—சீர்சொல்லி
வாழ்த்து முழுவலார் மார்க்கண்டிக் காவெமனைத்
தாழ்த்து முழுவலார் சார்பு.

ஓர் சொல்லினோர் தங்கள் உண்மை நேர் சொல்லிக் காக்குறும்—சத்தியவாசகர் தங்கள் மெய்ம்மையை, சரியானதைச் சொல்லி, காக்கும்.

வயல்வளம் நேர் சொல் இக்கு ஆக்குறும்—வயலின் வளமானது (அவ் வயலிடத்துப்) பொருந்திய நெற்பயிரைக் கரும்பு போலாகச் செய்யும்.

வாழ்த்தும் உழுவல் ஆர் (நிறைந்த). தாழ்த்தும் முழு வல்லார். (அகூ)

ஓடையினீ ருந்தருங்கை யுங்குறங்குங் கற்பினரு
நீடுருந்து திக்கையமேய் நெல்லையே—நாடுசங்கை
யாலமண்டை யோட்டத்த னலமண்டை யோட்டத்த
னலமண்டை யோட்டத்த னூர்வு.

ஓடையின் நீர் நீள் தரு உந்து திக் கயம் மேய்—அகழியின் சலத்தை உயர்ந்த மரங்களைத் தள்ளும் (தன்மையுடைய ஐராவத முதலிய) திசையானைகள் குடிக்கும்.

திருவானைக்காப்புராணம் கோச்செங்கணூர் வழிபடுபடலத்தில் ''மருந்துத்ரு வனமொழியார்'' என்னும் கூ ஆவது பாட்டில் 'மரு உந்து' 'மருந்து' என்றாயதுபோலவும் சிவஞானயோகிகள்

கம்பரந்தாதியில் ''வாவிக்கமல'' என்னும் எஉ ஆவது பாட்டில் நான்காவது அடியில் 'கு அமலம்' 'கமலம்' என்ருயது போலவும், இங்குத் 'தரு உந்து' 'தருந்து' என்ருயது. திக்கயம். திக்கைய மென்றதற்கு நியாயம் இந்நூலில் கசு ஆவது பாட்டுரையிற் காண்க. அகழிமிக அகன்ற தென்னும் பொருள் புலப்பட அகழியினீரைத் திக்கு யானைகள் குடிக்குமென்றது அதிசய அலங்காரம். அகழிக்கும் நிலையிலே நின்று பூமியைத் தாங்கா நின்ற திக்கு யானைகளுக்கும் இடையே நெடுந்தூரம் உளதாகவும் இப்படிக்கூறல் பொருந்தா தென்பாரும் அளவையிகந்த அதிசய வலங்காரத்துக்கும் அளவையுண்டெனக் கூறி இது பொருந்தா தென்பாரும் முறையே இதனடியிற் கூறிய இரண்டு உதாரணங் களையும் நோக்குக.

> ''கிழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமக
> மெனவுடுத்த கிடங்கு மேலை
> வழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமதி
> லெனவுடுத்த மதிலும்......''
>
> (தணிகைப்புராணம், நகரப்படலம்)

> ''அய்யோ வகலல்குல் சூழ்வருதற் காழித்தேர்
> வெய்யோற் கனேகநாள் வேண்டுமே—கைபரந்து
> வண்டிசைக்குங் கூந்தல் மதர்விழிகள் சென்றுலவ
> வெண்டிசைக்குங் காணு திடம்''
>
> (தண்டியலங்காரத்தில் ஓர் உதாரணப்பாட்டு)

தருங்கை நீடு அரும் துதிக்கை அம் ஏய்—கொடுக்கும் கை நெடுங்காலம் அருமையான புகழையும் (கொடுக்குங்கால் வார்க் கும் தத்த) நீரையும் பொருந்தும்.

குறங்கு நீள்தரும் துதிக்கையின் அம் ஏய்—தொடையானது நீண்ட யானைத் துதிக்கையின் அழகை ஒக்கும்.

கற்பினர் நீடு அருந்துதிக்கு ஐயம் ஏய்—கற்புடைய மாதர் (கற்பு)மிகுந்த அருந்ததிக்கு (அவள் கற்பில் முதன்மையுள்ளவ ளென்ற நிச்சயத்தை நீக்கிச்) சந்தேகத்தைப் பொருத்தும். அருந் ததி அருந்துதி என்ருமென்றது சிவஞானயோகிகள், திருமுல்லை வாயிலந்தாதியில் ''அருந்துதியாள்'' என்னும் பாட்டினுல் அறிக.

"ஓகை நீடினர்'' என்பதிற்போல நீடு மிகுதிப்பொருளில் வந்தது. தணிகைப் புராணம் களவுப்படலம் ககஎ ஆவது பாட்டில் "நிலத்தலைப் பேரின்ப நிமல வீடினன்'' என்பதையும் நோக்குக.

நாடு சங்கை ஆலம் அண்டை ஓட்டு அத்தன்—(சனகாதி நால்வர் தெளியும்படி அவர்கள்) நாடிய சந்தேகங்களைக் கல்லாலின் பக்கத்திலே (எழுந்தருளியிருந்து) அகற்றிய கடவுள். சிவஞானயோகிகள் கம்பரந்தாதி அஎ ஆவது பாட்டில் சங்கடம் ஆதங்கப்பற்று, சங்கட வாதங்கப்பற்று என்று சந்திசேராமல், சங்கடமாதங்கப்பற்று, என்று கூறப்பட்டதுபோல, ஆலம் அண்டை என்பது ஆலவண்டை எனச் சந்திசேராமல் தொடைநோக்கி ஆலமண்டை எனப்பட்டது.

ஆல் அ மண்டை ஓட்டு அத்தன்—(தரித்திருக்கும் கையுடன்) அசையும் அந்த (ப்பிரம) கபாலமுள்ள கையையுடையவர்.

ஆலம் அண்டு ஐ ஓட்டத்தின்—விடம் (உண்ணுங்கால்) பொருந்திய அழகிய அதரத்தை யுடையார். (கoo)

சர்வா பரணமினர் தம்மனமும் பாதுகையு
நிர்வா கனங்புணரு நெல்லையே—சர்வேசர்
மாசன்மார்க் கத்தர் வணங்கோன் பதிற்றேழு
தாசன்மார்க் கத்தர் தலம்.

நிர்வாகன் அன்பு உணரும்:—வல்லாரல்லார் செய்யும் அன்பை மாதர் கருத்துட் கொள்ளார் என்னும் கருத்துடையது.

பாதுகம் நிர்வாகனன் புணரும்—பாதரட்சையை வாகனமில்லாத பாதசாரி (காலிற்) பொருந்தும்.

மா சன்மார்க்கத்தர். ஒன்பதிற்றேழு (அறுபத்துமூன்று) தாசன் மார்க்கு (அடியார்க்கு) அத்தர். காஞ்சிப்புராணம் சகோதர தீர்த்தப் படலம் ௬ ஆவது பாட்டில் தமயன்மார் என்பது போலத் தாசன்மார் ஒருமையில் மார் விகுதி புணர்ந்தது. சீவகசிந்தாமணி கனகமாலையாரிலம்பகம் "விருந்தவள்'' என்னும் பாட்டுரையில் வரும் 'தோழன்மார்', என்பதையும், காசிக்கலம்பகம் கஉ ஆவது பாட்டில் 'விரிஞ்சன்மார்' என்பதையும் பார்க்க. (கக)

மேச்சுசிவ பூசைசெய்வோர் மெய்யுணர்வா னூலுணர்வோர்
நிச்சந்தே கப்பயன்கோ ணெல்லையே—முச்சகமு
முய்கை வரப்படைத்தா ரோர்வந்தி பிட்டுக்கு
வய்கை வரப்படைத்தார் வாழ்வு.

*நிச்சயம் தேகப்பயன் கொள்—நித்தமும் உடம்பு பெற்றதனலாய பயனைக் கொள்ளும்.*

*சீவகசிந்தாமணி மண்மகளிலம்பகத்தில் "நொச்சிமாமலர்" என்னும் பாட்டில் "நிச்சம் கூற்றினுக் கிடுபவர்" என்பதில் நிச்சம் தினமும் என்னும் பொருளில் வருவது காண்க.*

*நிச்சந்தேகப் பயன்கொள் —சந்தேகமில்லாத நிச்சயமான அர்த்தத்தைக் கிரகிக்கின்ற.*

*உய்கை வரப் படைத்தார். வைகை வரப்பு அடைத்தார்.*
(கஉ)

போரா டுடிகளத்தும் பூங்கழனிக் கப்புறத்து
நேரா ரணியங்கூர் நெல்லையே — காரார்
பொதியவரைச் சாரலார் போற்றாத பொல்லா
மதியவரைச் சாரலார் வாழ்வு.

*நேரார் அணி (பகைவரது படைஅணி) அங்கு ஊர். நேர் ஆரணியம் (வனம்) கூர் (மிகப்பெற்ற).*

*மதியவரை (மதியையுடையவரை)ச் சாரலார் (சேராதவர்).*
(கங)

தேடுபோகு ளாதிமேற் செல்வோரும் பூம்பொழிலு
நீடமது வைப்பொழியு நெல்லையே—நாடுமையைப்
பங்கி னிருத்தத்தன் பங்கயத்தை யோத்தகைக்க
ணங்கி னிருத்தத்த னூர்வு.

*நீள் தமது வைப்பு (இருப்பிடம்) ஒழியும் (நீங்கும்). நீட (மிக) மதுவை (தேனை)ப் பொழியும், (சொரியும்).*

*நாடு உமையைப் பங்கின் இருத்து அத்தன். அங்கி நிருத்தத்தன்.*
(கச)

**வீறுசிவ பூசையைமா மெய்யரைத்துன் பட்டுப்பை**
**நீறுளிப்பூ சித்துவக்கு நெல்லையே—யீரிலா**
**வெட்டான திக்குடையா ரின்கங்கை டாம்வேதற்**
**கெட்டான திக்குடையா ரில்.**

சிவ பூசையை துன் பட்டுப்பை நீறு உள்ளிப் பூசித் துவக்கும்—(சிவபூசை செய்வோர் அச்) சிவபூசையைத் (தம்மிடத்துப்) பொருந்தியுள்ள பட்டுப்பை (யின்க ணுள்ள) விபூதியை மதித்துப் பூசி ஆரம்பிக்கும்.

மா மெய்யரைத் துன்பு அட்டுப் பைஙீல் துள்ளிப் பூசித்து உவக்கும் – மகத்துவமுடைய துறவோரைக் (கண்டவுடனே) துக்கத்தைத் தொலைத்து மன்பதை (சந்தோடத்தால்) துள்ளி (அவர்களுக்கு)ப் பூசனைசெய்து களிக்கும்.

எட்டு ஆன திக்கு உடையார்—அட்டத்திக்குகளையும் ஆடையாக உடுத்தவர்.

வேதற்கு எட்டா நதிக்கு உடையார்—(பிரமன் காணாத சடையில் உறைவதனால் அந்தப்) பிரமனுக்கு எட்டாத நதிக்கு உடையவர். (கரு)

**ஆர்ந்தபகற் றேர்விருந்தங் காவணற் சாருறலு**
**நேர்ந்தழைக்கப் பேற்றிடூஉ நெல்லையே—தீர்ந்தமைக்காத்**
**தண்டமிழைப் பாடுறுவான் றன்பங்கு கொள்ளுமைகோன்**
**றண்டமிழைப் பாடுறுவான் சார்பு.**

ஆர்ந்த பகற்றேர் அம் கா அண்ணச் சாருறலும் நேர்ந்தழைக்கப்பு எற்றிடும்—சூரியன் தங்கிய தேர் அழகிய சோலையைச் சமீபிக்கும்படி சார்தலும் நொய்ய இலைகளையுடைய (மரக்) கொம்புகளால் எற்றப்படும். சீவகசிந்தாமணி முத்தியிலம்பகத்தில் "நீரணி மாடவாவி நேர்புனை" என்னும் ௰௨ ஆவது பாட்டில் 'நேர்மை புனை', நேர்ம்புனை' என்றானது போல 'நேர்மை தழை' 'நேர்ந்தழை' யென்றாயது. 'கூர்ம்படை' 'கூர்ங்கணை' என்பவற்றையும் ஒப்பு நோக்கிக் கொள்க.

விருந்து அங்கு ஆவணச் சார் உறலும் நேர்ந்து அழைக்கப் பெற்றிடும்—விருந்தினர் அங்கு தெருப்பக்கம் வருதலும் (விருந் தேற்போரால்) எதிர்கொண்டழைக்கப்படும்.

தீர்ந்தமைக்காத் தண்டம் இழைப்பாள் துறுவான் தன்பங்கு கொள் உமைகோன்—(முன்னொர் காலத்து யோகஞ்செய்து) தன்னைப் பிரிந்திருந்தமைக்காகத் தண்டனை செய்யும் கருத்துடையளாய்ப் (பின் ஒருகாலத்தும் பிரியாவண்ணம் தேகத்தோடு தேகமாகப்) பொருந்தும்படி தம்முடைய (இடப்) பாகத்தை (முன் பிரிந்தமைக் கபராதம் போலக்) கொண்ட உமாதேவியாருடைய மணாளர், தண் தமிழைப் பாடுறுவார். (கசு)

தேர்மாண் கலைகளாய் தேத்தினுந்தோப் பின்கண்ணு
நேர்மாந் தருவகையேய் நெல்லையே—கார்மேய்
நெடுங்காத் தடமார்ப னீள்பூ வணிபு
மொடுங்காத் தடமார்ப னூர்.

தேத்தினும்—இடத்தினும். நேர் (பொருந்திய) மாந்தர் உவகை ஏம். நேர் (நீண்ட) மா தரு வகை ஏய்.

நெடும் கா(சோலை) தடம் (தடாகம்) ஆர் (ந்த) பல் நீள் பூ. ஒடுங்கா (த) தடம் (விசாலமான) மார்பன். (கஎ)

வார்பொருநை யுஞ்சிவனை வந்திக்கு மன்பர்களு
நேர்பரசு கங்கையுழறூஉ நெல்லையே—யேர்கோ
ளுபய வரதனவல் லோத்துமுலை பாக
னபய வரத னகம்.

பொருநை, நேர் (உவமையாக) பரசு (துதிக்கப்பட்ட) கங்கை (யை) உறும். நேர் (பிரார்த்தித்த) பரசுகம் கை உறும்.

உபய அரதன வல் (சூதாடுகருவி) அபய வரதன். (கஅ)

காரிகையா ரல்குலுங்கோங் கையுவமர் பெண்மையதும்
நேரரசி லையென்றூர் நெல்லையே—ஓரன்னற்
சேந்தலையப் பண்ணினன் சேந்தலையப் பண்ணினன்
சந்தலையப் பண்ணினன் சார்பு.

நேர் (உவமானம்) அரசு இலை என்று ஆர். நேர் (பொரு கின்ற) அர(ன்) சிலை (வில்லாகிய மேருமலை) என்று ஆர். நேர் (ஆன) அரசு இ(ல்)லை என்று ஆர்.

ஓர் அன்னம்—பிரமனாகிய அன்னம். செந்து அலைய பண்ணி னான், செம்தலை அப்பு (கங்கை) அண்ணினான். சந்த(இ) லைய பண்ணினான். (கக)

மாடார் பொருநையும்பா வாணரும்ப ழக்கடையு
நீடாம் பிரபலஞ்சேர் நெல்லையே—தோடார்
நளினா தனத்த னளினா தனத்த
னளினா தனத்த னகர்.

மாடு ஆர் பொருநை நீள் தாம்பிர பதம் சேர்—பக்கத்துத் தங்கிய பொருநையாறு மிகுந்த செம்பாகிய பலனைப்பொருந்தும். பாவாணர் நீடு ஆம் பிரபலம் சேர் - கவிஞர் நெடுங்காலம் (நிலை நிற்பது) ஆகிய பிரபலத்தை அடையும். பழக்கடை நீடு ஆம்பிர பலம் சேர்—பழக்கடை நீண்ட மாம்பழத்தைப் பொருந்தியுள்ள.

தோடார் நளின ஆதனத்தன்—பிரமன். நளி (குளிர்ச்சி யுடைய) நாத(ஓசையுடைய) நத்தன் (சங்குடையாமல்) நள்ளின் (நடுவிலுள்ள) நாதன் அத்தன். (கOO)

